# மின்தமிழ் மேடை



"தமிழர் பண்பாட்டின் வரலாற்றுத் தேடல்கள்"

தமிழ் மரபு அறக்கட்டளை *(www.tamilheritage.org)*
வெளியிடும் காலாண்டு மின்னிதழ்
மின்தமிழ்மேடை – காட்சி: *19*
அக்டோபர் – *2019*




19

# மின்தமிழ் மேடை

*காட்சி: 19*

---

*அக்டோபர் - 2019*

## "தமிழர் பண்பாட்டின் வரலாற்றுத் தேடல்கள்"



முன்னட்டைப் படம்: தமிழ் மரபு அறக்கட்டளையின் கல்வெட்டு பயிற்சிப்பட்டறை தமிழகத்தின் சென்னையில் இரு நாள் நிகழ்ச்சியாக செப்டம்பர் மாதம் 28-29 ஆகிய நாட்களில் நடைபெற்றன. சிறப்பு உரையாளர்களுடனும், பயிற்றுநர்களுடனும் இந்நிகழ்ச்சியில் பங்கேற்ற 140 மாணவர்கள்.




தமிழ் மரபு அறக்கட்டளை வெளியீடு

*http://www.tamilheritage.org/*

இதழ் தொகுப்பு: தேமொழி

## தலையங்கம்:
## தமிழர் பண்பாட்டின் வரலாற்றுத் தேடல்கள்

*— முனைவர் க.சுபாஷிணி*



வணக்கம்.

தமிழர் பண்பாட்டு வரலாற்றுத் தேடலில் ஆதாரப்பூர்வமான சான்றுகள் எவ்வளவு முக்கியமோ அதே போல, வரலாற்றுத் தகவல்களைச் சரியாக வாசித்து அறிந்து கொள்ளும் திறனை வளர்த்துக் கொள்வதும் அவசியம். தமிழ் மரபு அறக்கட்டளையின் தொடர் நடவடிக்கைகளில் ஒன்றாக இவ்வாண்டு தொடக்கம் கல்வெட்டு பயிற்சிகளைத் தொடங்கியிருக்கின்றோம்.



தமிழி எழுத்துக்களை அறிதல், வாசித்தல், எழுதுதல் என மூன்று நிலைகளை மையப்படுத்தி இரு நாள் நிகழ்ச்சியாகக் கல்வெட்டு பயிற்சிப்பட்டறை தமிழகத்தின் சென்னையில் செப்டம்பர் மாதம் 28-29 ஆகிய

இரு தினங்கள் நடைபெற்றன. நீண்ட கால களப்பணி அனுபவம் கொண்ட கல்வெட்டியல் அறிஞர்கள் டாக்டர்.பத்மாவதி, டாக்டர்.மார்க்சிய காந்தி ஆகிய இருவரது வழிகாட்டுதலில் 140 மாணவர்கள் தமிழகத்தின் பல பகுதிகளிலிருந்து மட்டுமல்லாது கனடா, மலேசியா ஆகிய நாடுகளிலிருந்தும் வந்து இப்பயிற்சியில் பதிந்து பயிற்சி பெற்றனர்.




கீழடி அகழாய்வின் நான்காம் கட்ட அகழாய்வின் இடைக்கால அறிக்கை நமக்கு மிக முக்கியமானதொரு வரலாற்றுத் திருப்பத்தை அளித்திருக்கின்றது. ஒரு பானை ஓட்டில் கண்டெடுக்கப்பட்ட தமிழி எழுத்து, தமிழ் எழுத்தின் பழமையை கிமு.6ம் நூற்றாண்டுக்கு நகர்த்திய செய்தியானது இதுகாறும் தமிழி எழுத்து அசோகன் பிராமி எழுத்துருவிலிருந்து தான் உருவாகியது என்ற கருதுகோளைத் தகர்த்திருக்கின்றது. இச்செய்தி மேலும் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் அகழாய்வுப் பணிகள் நடைபெற வேண்டியது அவசியம் என்பதை உறுதிப்படுத்தும் வகையிலும் அமைகின்றது. இதன் தொடர்ச்சியாக நீண்டகாலம் வெளியிடப்படாமல் முடங்கிக்கிடக்கும்

ஆதிச்சநல்லூர் 2004-2005ம் ஆண்டில் நிகழ்த்தப்பட்ட அகழாய்வுகளின் அறிக்கை வெளியிடப்படவேண்டும் என்பதை முன்னிலைப்படுத்தி பாளையங்கோட்டை சதக்கத்துல்லா அப்பா கல்லூரியுடன் இணைந்த வகையில் ஒரு நாள் கருத்தரங்கம் அக்டோபர் மாதம் 4ம் தேதி நடைபெற்றது. தொல்லியல் அகழாய்வு பற்றிய நூறு கட்டுரைகள் அடங்கிய ஆய்வு மலர் இதனையொட்டி வெளியிடப்பட்டது.



தூத்துக்குடியும் நெல்லை மாநகரமும் தமிழகத்தின் வரலாற்றுச் சிறப்பு மிக்க பண்டைய நகரங்கள். நீண்ட கால கடல் வழி போக்குவரத்து உலகின் பல பகுதிகளில் உள்ள நாடுகளுடன் இப்பகுதி மக்கள் கொண்டிருந்த வணிகத்தொடர்பையும் அவை ஏற்படுத்திய சமூக மற்றும் மானுடவியல் பார்வையை அறிந்து கொள்ளும் வகையிலும் பாண்டியர் மற்றும் சேர சோழர்களின் கட்டுமான கலையை ஆராயும் வகையிலும் இரு நாள் மரபுப் பயணத்தைத் தமிழ் மரபு அறக்கட்டளை தூத்துக்குடி மற்றும் நெல்லை

மாவட்டங்களில்  அக்டோபர் மாதம் 5,6 ஆகிய நாட்களில் நிகழ்த்தியது. இதில் கொற்கை, ஆதிச்சநல்லூர், புன்னைக்காயல், சாயர்புரம், மன்னார்கோயில், சேரன்மாதேவி, அம்பாசமுத்திரம் ஆகிய பகுதிகளுக்குப் பயணத்தில் கலந்து கொண்டோர் சென்றிருந்தனர். இவர்களுக்கு வரலாற்றுக் குறிப்புகளை கல்வெட்டியலாளர் டாக்டர்.பத்மாவதி, டாக்டர்.சசிகலா ஆகியோர் வழங்கினர்.



தமிழ் நிலத்திலிருந்து  இலங்கைத் தீவு புவியியல் அடிப்படையில் பிரிந்திருந்தாலும், சமூகவியல் அடிப்படையிலும் மொழியின் அடிப்படியிலும் தமிழகத்துக்கும் இலங்கைக்கும் உள்ள தொடர்பினை நாம் பிரிக்க இயலாது. இதனைக் கருத்தில் கொண்டு தமிழ் மரபு அறக்கட்டளையின் ஆய்வுக் குழுவினர் ஒரு வாரப் பயணமாக இலங்கைக்குச் சென்றிருந்தனர். இப்பயணத்தில் மன்னார் தீவு, நெடுந்தீவு, யாழ்ப்பாணம், அனுராதபுரம், மாத்தளை,  ரத்னபுரி, கொழும்பு, நீர்கொழும்பு ஆகிய பகுதிகளில் களப்பணிகள் நிகழ்ந்தன. இப்பகுதியின் வரலாற்றுச் சிறப்புகள், மக்களின் வாழ்வியல் நிலை,  தற்கால சூழல் ஆகியவற்றைக் கருத்தில் கொண்டு ஆய்வுப் பதிவுகள் செய்யப்பட்டன.



இலங்கை "கட்டுக்கரை" அகழ்வாய்வு

பொதுவாக ஈழத்தமிழர்கள் என்ற நில எல்லைக்குள்ளேயே நின்று விடுவதைக் காண்கின்றோம். சிங்கள மொழி கிபி.5ம் 6ம் நூற்றாண்டு வாக்கில் முழுமையாக உருவாக்கம் பெறுவதற்குச் சில நூற்றாண்டுகளுக்கு முன்னரே தமிழ் மக்களின் தமிழ் மொழி சார்ந்த இலங்கைச் சுவடுகள் தமிழின் தொன்மையைச் சான்று பகர்கின்றன. அண்மைய யாழ் பல்கலைக்கழகத்தின் கட்டுக்கரை அகழாய்வுச் செய்திகள், மற்றும் அனுராதபுரத்தில் நிகழ்த்தப்பட்ட அகழாய்வில் கண்டெடுக்கப்பட்ட தமிழி எழுத்துக்கள் ஆகியவை இலங்கையில் தமிழின் தொன்மையை வலியுறுத்தும் முக்கிய சான்றுகளாகின்றன.

இன்றைய நிலையில், இலங்கையில் வாழ்கின்ற தமிழர்களின் சமூக, வரலாற்று, மொழி, சமயம் சார்ந்த ஆய்வுகளை ஒரு பொதுமையான அடிப்படையை வைத்து ஆராய்வது பலனளிக்காது.

-ஈழத்தமிழர்கள்
-மலையகத் தமிழர்கள்
-நீர்கொழும்பு போன்ற பகுதிகளில் வாழும் தமிழை மறந்த சிங்களம் மட்டுமே பேசும் பூர்வகுடி இலங்கை தமிழ்மக்கள்

-மன்னார், புங்குடுதீவு போன்ற தீவுகளில் வாழும் தீவு தமிழ் மக்கள்
-இலங்கைக்கு நெடுந்தூரத்தில் இருக்கும் நெடுந்தீவு மக்கள்
-கிழக்கு மாகாண மக்கள்
-கொழும்பு தலைநகரில் வாழும் தமிழ மக்கள்

என நில அடிப்படையில் வேறுபட்டிருக்கும் தமிழ் மக்களின் சமூக, வரலாற்று, தமிழ் மொழி தொடர்பான ஆய்வுகளையும் செயல்பாடுகளையும் கருத்தில் கொண்டு செயல்படுவது அவசியமாகின்றது. தமிழின் தொன்மையை, இலங்கையில் தமிழர் வரலாற்றின் பன்முகத்தன்மையைப் பதிந்து ஆவணப்படுத்தி , மக்களின் சூழலுக்கேற்ற தமிழ் மொழி வளர்ச்சி சார்ந்த நடவடிக்கைகளில் மேம்பாட்டினைக் கொண்டு வர வேண்டியது இன்றைய காலத்தின் கட்டாயம். அந்த வகையில் மிக அமைதியாக ஆனால் மிக உறுதியாகக் கடந்த 15 ஆண்டுகளாக யாழ்ப்பாணத்திலிருந்து செயல்பட்டு வரும் நூலகம் அமைப்பு தொடர்ந்து மின்னாக்கப்பணி களைச் செய்து வருகின்றது. இதன் சேகரத்தில் உள்ள அரிய ஆவணங்கள் மிகச் சிறந்த களஞ்சியமாக உருவாகி வளர்ந்துள்ளன. இதே போல மலையக மக்களின் வாழ்வு, தீவுப்பகுதி மக்களின் வாழ்வு, இலங்கையில் டச்சு, போர்த்துக்கீசியர், ஆங்கிலேயர் கால வரலாறும் அவை ஏற்படுத்திய தாக்கம் தொடர்பான ஆய்வுகளும் பெருக வேண்டியதும் அவை பற்றிய கலந்துரையாடல்களும் அவசியமாகின்றது.

இச்சூழலில் உலகத்தமிழர்களுக்கு மகிழ்ச்சியளிக்கும் ஒரு செய்தி ஒன்றினைப் பகிர்வதில் தமிழ் மரபு அறக்கட்டளை பெரு மகிழ்ச்சி கொள்கிறோம். சிங்களவர்களின் கடும் எதிர்ப்பையும் மீறி இலங்கையின் ஊவா மாகாணத்தில் தமிழ் வென்றுள்ளது.

மலையகத்தின் ஊவா மாநிலத்தின் தமிழ்ப் பள்ளிகள் முந்தைய சிங்கள மொழிப் பெயர்கள் நீக்கப்பட்டு தமிழில் பெயர் சூட்டப்பட்ட ஒரு மாபெரும் வரலாற்றுச் சாதனை நிகழ்ந்திருக்கின்றது. ஊவா மாகாணத்தின் தமிழ்க்கல்வி அமைச்சர் மாண்புமிகு செந்தில் தொண்டமான் அவர்களின் உறுதியான முயற்சியும், தமிழ் மரபு அறக்கட்டளையின் பங்களிப்பும் இதைச்

சாத்தியப்படுத்தியுள்ளது. திருவள்ளுவர், மலைமகள், கம்பன், பெரியார், பாரதிதாசன், பாரதியார், கலைவாணி, பாரி, புகழேந்தி, குறிஞ்சி எனப் புதிய அழகிய பெயர்கள் 140 பள்ளிகளுக்குச் சூட்டப்பட்டு அரசாணை வெளியிடப்பட்டுள்ளது.



இம்மாகாணத்தில் உள்ள அனைத்து தமிழ்ப்பள்ளிகளும் சிங்களப் பெயர் சூட்டப்பட்டிருந்தது முடிவுக்குக் கொண்டு வந்ததில் தமிழ் மரபு அறக்கட்டளை, மாகாணத்தின் தமிழ்க்கல்வி அமைச்சர் மாண்புமிகு செந்தில் தொண்டமான், மற்றும் இம்மாநில தமிழ் மக்களோடும் சேர்ந்து பெருமை கொள்கிறது.

உலகளாவிய அளவில் தமிழின் வளமையையும் தொன்மையையும் பறைசாற்றும் பல பணிகள் தொடர்ந்து செயலாக்கம் பெறவேண்டிய கால சூழலில் நாம் இருக்கின்றோம். எத்தகைய இடர்பாடுகள் வந்தாலும் தமிழ் மரபு அறக்கட்டளை அவற்றை எதிர்கொண்டு தமிழுக்காற்றும் தொண்டினைத் தொடர்வோம். ஆக்ககரமான, தமிழுக்கான மேம்பாட்டுச் செயல்பாடுகளில் நம் கவனத்தைச் செலுத்துவோம். தமிழின் பெருமையை நிலைநாட்டும் நம் பணியைத் தொடர்வோம்!

அன்புடன்
முனைவர்.க.சுபாஷிணி

இந்த இதழில் ...

## *மின்தமிழ்மேடை - காட்சி: 19; அக்டோபர் - 2019*

### *"தமிழர் பண்பாட்டின் வரலாற்றுத் தேடல்கள்"*

*(மின்தமிழில் ஜூலை 16, 2019 – அக்டோபர் 15 வரை பதிவான படைப்புகளின் தொகுப்பு)*

**உள்ளடக்கம்** **பக்கம்**

**உள்ளடக்கம்** **பக்கம்**

## 1. இந்திய வரலாற்றை மாற்றும் கீழடி

*— முனைவர்.எஸ்.சாந்தினிபீ*

அண்மைக் காலத்தில் தமிழார்வம் கொண்ட அனைவரின் கவனத்தையும் ஈர்த்த நிகழ்வு கீழடியின் அகழ்வாய்வுகள். இந்த கீழடி மதுரை நெடுஞ்சாலை வழியே கிழக்கு தென்கிழக்கு திசையில் 13 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. ஐந்து கட்ட ஆய்வுகள் முடிந்து ஆறாவதிற்காகக் காத்திருக்கும் இந்த மண்மேடு கிட்டடத்தட்ட 110 ஏக்கர் பரப்பளவிற்குப் பரவியுள்ளது. பல மதிப்புமிக்க வரலாற்றுப் புதையலை தன் மடியில் சுமந்துள்ள இத்தாய்மண் தன் மீது தென்னையைத் தாங்கியுள்ளதால் நவீன கான்க்ரீட் பயிரிலிருந்து தப்பி விட்டாள் போலும்.

கீழடியில் 2014 முதல் தொடர்ந்து அகழ்வாய்வு செய்யப்படுகிறது. 2014 முதல் 2017 வரையிலுமான முதல் மூன்று கட்ட ஆய்வுகளை மத்திய தொல்லியல் துறையின் பெங்களூரு பிரிவு நடத்தியது. நான்கு மற்றும் ஐந்தாம் கட்ட ஆய்வுகளை(2017-2019) தமிழக அரசு தொல்லியல் துறை நடத்தியது. அத்தோடு தேவையான பரிசோதனைகளையும் நடத்தி அதன் முடிவுகளான அறிக்கையையும் வெளியிட்டுள்ளது. இத்தாய்மடி நமக்கு வெளிப்படுத்திய வரலாற்று உண்மைகள் ஒன்றல்ல பல.

நான்காம் கட்ட ஆய்வில் கிடைத்த தொல்பொருட்களின் அடிப்படையில், கீழடியின் பண்பாட்டுக் காலத்தை மூன்று காலகட்டமாகப் பிரித்துள்ளனர். முதல் பண்பாட்டுக்காலம் கி.மு. 6 ஆம் நூற்றாண்டு முதல் கி.மு. 3 ஆம் நூற்றாண்டு வரை என்று அறிவியல் பரிசோதனைகளின் அடிப்படையில் நிரூபணமாகியுள்ளது. இதுதான் ஆய்வுப்பள்ளத்தின் அடியில் உள்ள பகுதி.

கி.மு. 3 ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 4, 5 ஆம் நூற்றாண்டு வரையிலானது இரண்டாம் பண்பாட்டுக் காலமாகும். இது இடையில் அமைந்திருப்பது. மூன்றாவது கால கட்டம் கி.பி. 4,5 ஆம் நூற்றாண்டில் துவங்கி கி.பி. 12 ஆம் நூற்றாண்டு வரையிலும் இருப்பது. இந்த அடுக்குதான் மேலே காணப்படும் முதலடுக்கு. இதன் மேற்புறம்தான் தென்னை பயிர் செய்யப்பட்டுள்ளது.

கி.மு. ஆறாம் நூற்றாண்டு முதல் கி.பி. 12 ஆம் நூற்றாண்டு வரையிலான 1800 ஆண்டுகள் மனிதர்கள் இந்நிலத்தில் தொடர்ந்து வாழ்ந்திருக்கிறார்கள். (ஆனால் புதிய கற்கால ஆயுதமும் கிடைத்திருப்பதால் கிட்டத்தட்ட 15 ஆயிரம் ஆண்டுகளாக இங்கே மனிதன் வாழ்ந்திருக்கிறான் என்ற உண்மையும் வெளிப்படுகிறது. (நடுவன் அரசு தொல்லியல் துறை ஆய்வில் கிடைத்தது. அதன் அதிகாரப் பூர்வமான அறிக்கை இன்னமும் வெளிவராததால் அதைக் கவனத்தில் எடுத்துக் கொள்ளவில்லை) இதற்குப் பின்தான் ஏதோ காரணங்களால் மனிதன் இங்கே வாழவில்லை. காரணம் இனிமேல் தான் வெளிக்கொணர வேண்டும். இவ்வேளையில் சோழர் காலத்திய ஒரு நிகழ்வு நினைவிற்கு வருகிறது.

முதலாம் குலோத்துங்கச் சோழன்(கி.பி.1070-1120) காலத்திய பல கல்வெட்டுகள் சிரீரங்கப்பட்டனம், இரங்கநாதர் கோவிலுக்குச் சொந்தமான காவிரிக்கரையில் அமைந்திருந்த பெரும் நிலப்பரப்பு வெள்ள பாதிப்பினால் பயிர் செய்யப்படாமல் கடந்த 100 ஆண்டுகளாகப் பாழாய் கிடப்பதாய் குறிப்பிடுகின்றன. இதைக் குறித்தெல்லாம் கவனத்துடன் ஆய்வு மேற்கொண்டால், நமது வரலாற்றின் பல திருப்பங்கள் வெளிச்சத்திற்கு வரலாம்.

**முதல் பண்பாட்டுக் காலத்தில் கிடைத்த பானை ஓடுகள், கட்டுமான மிச்சங்கள் இந்திய வரலாற்றை சில திருத்தங்களுடன் மீண்டும் எழுத வேண்டிய அவசியத்தை ஏற்படுத்தியுள்ளது.**

அறிவியல் பரிசோதனைகள் மூலம் இப்பண்பாட்டின் காலம் கி.மு. 6 ஆம் நூற்றாண்டு என்ற உண்மையே இம் மாற்றத்திற்கானக் காரணம்.இங்குக் கிடைத்த செங்கல் போன்ற கட்டுமான பொருட்கள் இதற்கு முன்னர் கண்டறியப்பட்ட சங்ககாலப் பொருட்களை முற்றிலும் ஒத்து உள்ளன. எனவே இங்கு கி.மு. ஆறாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்களும் சங்ககால நாகரீகத்தைச் சார்ந்தவர்கள் ஆவர். இதுவரை சங்ககாலம் கி.மு. 3 ஆம் நூற்றாண்டிலிருந்து துவங்குகிறது என நம் வரலாற்றில் எழுதப்பட்டதை மாற்றி எழுத வேண்டும். கீழடி கண்டுபிடிப்பின் விளைவாகச் சங்ககாலம் 300 ஆண்டுகளுக்கு முன்பாகவே நிலவியது என்ற உண்மை நிரூபணமாகிவிட்டது.

வட இந்தியாவில் புத்தர், மகாவீரர் வாழ்ந்ததும் கங்கைக்கரை பகுதிகளில் இவர்களைப் போன்று நூற்றுக்கணக்கான வேறுபட்ட கருத்துக்களைக் கொண்ட ஞானிகள் வாழ்ந்ததும் இதே கி.மு. 6 ஆம் நூற்றாண்டுதான். பவுத்தமும் சமணமும் தோன்ற இக்காலத்தில் இங்கு வாணிபத்தால் உண்டான பொருளாதார வளமையும், நகரமயமாதலும் மிக முக்கிய காரணிகளாகும். இவை இரண்டிற்கும் அடிப்படை காரணம் இரும்பின் பயன்பாடாகும். இரும்பால் செய்யப்பட்ட விவசாயக் கருவிகள் வேளாண்மையில் உபரி விளைச்சலை உண்டாக்க அவை வாணிபத்தைப் பெருக்க, பொருளாதார வளமை ஏற்பட்டு, இதுவே நகரமயமாதலுக்கு வித்திட்டது. இந்த கோட்பாடு பரவலாக உலகின் எல்லா வரலாற்றாளர் மற்றும் பொருளாதார வல்லுநர்கள் ஏற்றுக் கொண்டது.

சங்ககாலம் கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் துவங்கியது என்ற கோட்பாடு நம் தமிழர்களின் வாணிகம், பொருளாதார வளமை இதைச் சார்ந்த நகரமயமாக்கல் உள்ளடக்கிய இந்த வளர்ச்சி கி.மு. 3 ஆம் நூற்றாண்டில் ஏற்பட்டது என நேற்று வரையில் வரலாற்றில் குறிக்கப்பட்டுள்ளது. ஆனால் கீழடியின் கண்டுபிடிப்பில், வட இந்திய நகரமயமாக்கலும் தமிழரின் நகரமயமாக்கலும் சமகாலத்தியதே எனத் தெளிவுபடுத்தியுள்ளது. எனவே தான் நமது இந்திய வரலாறு திருத்தி எழுதப்பட வேண்டிய தேவை கீழடி கண்டுபிடிப்புகளால் ஏற்பட்டுள்ளது.

கீழடியில் தமிழி (அல்லது  தமிழ் பிராமி) எழுத்துக்களைக் கொண்ட பானை ஓடுகள் கிடைத்துள்ளன. தமிழக அரசு தொல்லியல் துறை நடத்திய நான்காம் கட்ட ஆய்வில் மட்டும் 56 பானை ஓடுகள் தமிழி எழுத்துக்களுடன் கிடைத்த தகவல் அதன் அறிக்கையில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இது ஒன்றும் அதிசய தகவல் அல்ல, நம் தமிழகத்தில் பல இடங்களில் கிடைத்துள்ளன. ஆனால் கி.மு. 6-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பானை ஓட்டில் கிடைத்திருப்பது இதுவே முதல் முறை.

இந்திய வரலாற்றில் இங்குதான் மாற்றம் தேவைப்படுகிறது. இதுநாள் வரையிலும் கி.மு.  3 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த மவுரிய மன்னர் அசோகர் கல்வெட்டுகளில் காணப்படும் எழுத்துக்களே முதன்மையானவை, பழமையானவை என்றும் இது பிராமி எழுத்துக்கள் என்றும் வரலாற்றில் வழங்கப்பட்டு வருகிறது. சங்ககாலம் கி.மு. 3-ஆம் நூற்றாண்டு என முடிவு செய்யப்பட்டதால், சங்ககாலத்து எழுத்துக்களும் கி.மு. 3-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை என முடிவு செய்யப்பட்டுள்ளது. காலத்தால் அசோகர் பிராமி ஒரு நூற்றாண்டு காலம் முற்பட்டது என்பதால், அசோகர் பிராமியிலிருந்தே தமிழ் பிராமி தோன்றியது என்ற கருத்தும் வரலாற்றில் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

ஆனால் இன்று கீழடியில் கி.மு. 6 ஆம் நூற்றாண்டில்  தமிழ் பிராமியில் எழுதப்பட்ட பானை ஓடுகள் கிடைத்திருப்பதால், இதுவே காலத்தால் அசோகர் பிராமியைக் காட்டிலும் 200 ஆண்டுகள் மூத்த மொழியாகிவிட்டது. எனவே இந்தியாவின் மூத்தமொழி தமிழ் என்றும் தமிழி எழுத்துக்களிலிருந்தே அசோகர் பிராமி உருவானது என்றும் இந்திய வரலாற்றில் மாற்றி எழுத வேண்டிய நிலையை கீழடி ஏற்படுத்தியுள்ளது.

பானை ஓட்டில் உள்ள எழுத்துக்கள் பானையின் உருவாக்கத்திற்குப் பின் பொதுமக்களால் எழுதப்பட்டுள்ளது. பொதுமக்களின் இடையில் பரவலான கல்வியறிவு அக்காலத்தில் பரவியிருந்தமைக்கான சான்றாகும். வட இந்தியப் பானை ஓடுகளில் இப்படி எழுத்துக்கள்

பொறிக்கப்பட்டது இதுவரை கிடைக்கவில்லை.மன்னர்களின் சாசனங்கள் மட்டுமே கிடைக்கின்றன. சனாதன தர்மமும் கல்வி அறிவை எல்லோருக்கும் பரவலாக்காமல் அது சிலருக்கான சலுகையாகச் சொல்லுவதையும் இங்கே நினைவு கூறுவது அவசியம். சங்ககாலத் தமிழர் சமுதாயத்தில் சனாதன தர்மம் பின்பற்றப் படவில்லை என்பதற்கும் இந்த பானை ஓடுகள் காட்சியளிப்பதாகக் கொள்ளுதல் தவறாகாது.

உலக வரலாற்றிலே 15-ஆம் நூற்றாண்டில் ஐரோப்பாவில் தொழில்மயமாக்கம் ஏற்பட்டது. அதன் தொடர்ச்சியாகப் பல முன்னேற்றங்களை அச் சமுதாயம் சந்தித்தது. ஆடம்ஸ்மித் எனும் தலைசிறந்த பொருளாதார வல்லுநர் கி.பி 1776 இல் 'வெல்த் ஆப் நேசன்' எனும் புத்தகத்தை எழுதினார். அதில் பொதுமக்களுக்கான கல்வியின் தேவையை வலியுறுத்தியிருந்தார். அதனால் பொதுமக்களுக்குக் கல்வித் தேவை எனும் கருத்தைச் சொன்ன முதல் மனிதர் என உலக அரங்கில் போற்றப்படுகிறார். 'தொழில்துறை முதலாளித்துவத்தின் வெளிப்பாடே பொதுமக்களுக்கான கல்வி' என்றார். இவரின் கருதுகோளை நிரூபணம் செய்வதாகவே கீழடியிலும், தொழிற்கூடங்களும் பரவலான கல்வியறிவும் காணப்படுகிறது.

கல்வி நவீனத்தின் திறவுகோல், கல்வியே ஒரு சமுதாயத்தில் முன்னேற்றம், அறிவின் தெளிவு போன்ற பல அற்புதங்களை உண்டாக்கும் சக்தி கொண்டது என்ற பல்வேறு கருத்துக்கள் உலக அரங்கில் 18 ஆம் நூற்றாண்டு முதல் பேசப்பட்டு வருவதை நாம் அனைவரும் அறிவோம். அதனால் பரவலான கல்வியறிவு பெற்ற சங்ககால சமுதாய முன்னேற்றத்தின் அளவு கோலாக விளங்குவதே நம் சங்க இலக்கியங்கள். அந்த சமூகத்தில் வாழ்ந்தவர்களால் தான் பிறப்பால் அனைவரும் சமம், அவரவர் செயலாலே உயர்ந்தோர், தாழ்ந்தோர் என வேறுபடுகின்றனர், யாது ஊரே யாவரும் உறவினர் என்பதையும் தாண்டி 'நமக்கான தீதும் நன்றும் பிறன் தர வாரா' போன்ற உயர்ந்த கருத்துக்களைச் சொல்ல முடிந்தது.

கீழடி வாழ் சமூகத்தின் பொருளாதார உயர் நிலையைச் சொல்வதாகவே அங்கு கிடைத்த, அவர்கள் பயன்படுத்திய பொருட்களின் மிச்சங்கள் காட்சியளிக்கின்றன.முதலில் அலங்கார அணிகலங்களில் கவனம் செலுத்துவோம். தங்கத்தாலான தொங்கட்டான், சட்டைப் பொத்தான், ஊசி, மணி உள்ளிட்ட ஏழு பொருட்கள் கிடைத்துள்ளன. சங்கு , யானைத்தந்த வளையல்கள் போன்றவை அணிகலன்களில் அடங்கும். இவற்றைப் பெண்கள் மட்டுமே அணிந்ததாக நாம் எண்ணக்கூடாது. ஆண், பெண் இருபாலரும் அணிந்திருக்கலாம். முற்றிய விதை மணிகளைப் பறவைகள் கொத்திச் செல்லாது காவல் காத்து வந்த சங்கப் பெண் ஒருத்தி தன் தங்க காதணியைக் கழற்றி வீசி பறவையை ஓட்டினாள் எனும் சங்கப் பாடல் நினைவில் வருகிறது. தங்க நகைகளை குறைந்தது 2600 ஆண்டுகளாக அணிந்துவரும் சமூகம் நம்முடையது. இது 'திரைகடலோடியும் திரவியம் தேடு', 'பொருளில்லாதோர்க்கு இவ்வுலகில்லை' போன்ற முதுமொழிகள் நம் முன்னோரின் அனுபவ வார்த்தைகளே தவிர, வெற்றுச் சொற்கள் அல்ல என்று நிரூபிக்கின்றது கீழடியின் அணிகலன்கள். இதுவரை இந்தியாவின் எந்த அகழ்வாய்விலும் கி.மு. 600 க்கான தங்க நகைகள் கிடைத்ததில்லை என்பதும் வரலாறே. இதுவும் வரலாற்றில் புதிதாகப் பதிக்கப்பட வேண்டிய உண்மையே.

**தமிழகத்தில் கீழடியில் அகழ்வாய்வு நடத்தியதைக் காட்டிலும் அதில் கிடைத்த பொருட்களை உடனடியாக அறிவியல் ஆய்விற்கு உட்படுத்தி அதன் அறிக்கையும் உடனடியாக வெளியிட்டதே மிகமிக முக்கியமான பாராட்டுக்குரியச் செயலாகும்.**

இந்த ஒரு செயல் வரலாற்றில் பல மாற்றங்களைச் செய்ய வைக்கிறது. சங்ககாலத்தின் துவக்கம் கி.மு. 6 ஆம் நூற்றாண்டு, தென் மற்றும் வட இந்திய நகரமயமாக்கல் சமகாலத்தியவை, தமிழே இந்தியாவின் மூத்த மொழி, தமிழிலிருந்தே அசோகர் பிராமி உருப்பெற்றது, கி.மு. 6 ஆம் நூற்றாண்டில் தமிழ் சமுதாயத்தில் பொதுமக்கள் பரவலாகக் கல்வியறிவு பெற்றிருந்தனர், இதுபோல், பல முக்கியமான உண்மைகள் கீழடியில்

வெளியானதை வைத்து இந்திய வரலாற்றை மாற்றி எழுத வேண்டிய அவசியம் நம் நாட்டிற்கு ஏற்பட்டுள்ளது.

தொடர்பு:
முனைவர் எஸ்.சாந்தினிபீ (chandnibi@gmail.com)
வரலாற்றுத்துறை இணைப்பேராசிரியர்
உபி அலிகர் முஸ்லீம் பல்கலைக்கழகம்

## 2. கீழடி பற்றிய உரையாடல்கள் தடம் மாறிச் சென்று விடக் கூடாது . . .

*— முனைவர்.ஆர். பாலகிருஷ்ணன், இ. ஆ. ப.*

கீழடி பற்றிய உரையாடல்கள் தடம் மாறிச் சென்று விடக் கூடாது என்பதால் வினா விடையாக இப்பதிவுகள்.

**1.**

**கேள்வி:**

**கீழடி அகழ்வாய்வு பற்றிய உரையாடல்களில் தமிழ் / தொல் தமிழ் / திராவிடம் என்ற சித்தரிப்புகளில் எது மிகவும் பொருத்தமானது?**

விடை:

ஐயத்திற்கே இடமில்லாமல் தமிழ்ப் பண்பாடு என்பதே பொருத்தமானது ஆகும். இந்தத் தடயங்கள் சங்க காலம் என்று அறியப்படும் கால கட்டத்தைச் சேர்ந்தது. கீழடி சங்க இலக்கியங்கள் போற்றிக் கொண்டாடும் வைகை நதிக்கரையில் மதுரைக்கு அருகே அமைந்திருப்பதாலும் வைகைக் கரையின் இருபகுதியிலும் பல அகழ்வாய்வு இடங்கள் இருப்பதாலும் இதை "வைகைக் கரை தமிழ்ப் பண்பாடு" என்று அழைப்பது பொருத்தம் என்று தோன்றுகிறது. சங்க இலக்கியம் ஆகச் சிறந்த தொல் தமிழ் இலக்கியம். வைகைக்கரை அதன் முக்கியமான களம். எனவே இந்த நாகரிகம் பற்றிக் குறிப்பிடும் போது திராவிடம் என்ற சொல்லைப் பயன்படுத்த ஒரு தேவையும் இல்லை. அது "புரிதல் விகாரத்தில்" போய் முடியும். அது நல்லது அல்ல.

**2.**

**கேள்வி:**

**சிந்துவெளி பற்றிய உரையாடல்களில் "திராவிடம்" என்ற "தமிழ்" என்ற சொல்லாடல்களின் பொருத்தப்பாடு என்ன?**

விடை:

சிந்துவெளிப் பண்பாட்டைக் கட்டமைத்தவர்கள் யார் என்பது பற்றி பல்வேறு ஊகங்கள் இருந்தாலும் சிந்துவெளி மகுடத்திற்கான முக்கியமாக இரண்டு வேட்பாளர்கள் தான்.

1. "திராவிட மொழிக் குடும்பம்" ( கிழக்கு ஈரான் ஆப்கானிஸ்தானில் தொடங்கி நடு இந்தியாவிலும் கிழக்கு இந்தியா நேபாளம் ஆகிய இடங்களில் அங்கும் இங்கும்; தென்னகம் முழுவதும்; இலங்கையிலும் இப்போது உலகின் பல பகுதிகளிலும் பேசப்படுகிற பல மொழிகள் அடங்கியது) என்று அறியப்படும் மொழியை / அல்லது மொழிகளைப் பேசிய பண்பாட்டினர்.

2. இந்தோ - ஆரிய மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த சமஸ்கிருதம் என்ற வட மொழியை அடிப்படையாகக் கொண்ட பண்பாட்டினர்.

சிந்துவெளிப் பண்பாட்டிற்கும் தமிழ்த்தொன்மங்களுக்கும் பண்பாட்டுத் தொடர்ச்சி என்ற முறையில் ஒரு மிக ஆழமான உறவு இருந்திருக்கக்கூடிய சாத்தியம் உள்ளது.

ஆனாலும் இந்த தொடர்பு மொழியியல் அடிப்படையில் "திராவிடக் கருதுகோள்" என்றே ஆய்வாளர்களிடையே தொடக்கம் முதல் அறியப்படுகிறது. சிந்துவெளி எழுத்துப் பொறிப்புகளை இது வரை வாசிக்க இயலாததால் குறிப்பிட்ட ஒரு மொழி என்று சொல்லாமல் மொழிக்குடும்பத்தின் பொது அடையாளமாக "திராவிடம்" என்ற அடையாளத்தை ஆய்வாளர்கள் பயன்படுத்துகிறார்கள்.

பிராகுயி என்ற திராவிட மொழி சிந்துவெளிப் பண்பாட்டின் கடைவாசல் பகுதிகளில் இன்றும் பேசப்படுவதாலும் கோண்டி போன்ற நடு இந்திய திராவிட மொழியின் சில பண்பாட்டுக் கூறுகள் சிந்துவெளி பொறிப்புகளுடன் நெருக்கம் காட்டுவதாலும் இத்தகைய பொதுவான சித்தரிப்பு தேவைப்படுகிறது.

சிந்துவெளிப் பண்பாடே பல்வேறு திணைகளைச் ( நிலப்பின்னணிகள்) சேர்ந்த பலவகையான சமூகப் பொருளாதார பண்பாட்டுப் பின்னணியின் கூட்டு இயக்கம் தான் என்று தோன்றுகிறது. மலை நில மக்களின் வாழ்விற்கும் கடல் கடந்து வணிகம் செய்த வணிகர்களின் வாழ்க்கைக்கும் மிகுந்த இடைவெளி இருக்கும். ஆனால் சிந்துவெளிப் பண்பாடு இந்த இரண்டு துருவங்களும் எளிதில் சேர்ந்து இயங்கிய பண்பாட்டின் தொடர்ச்சியும் நகர்மய வாழ்வின் உன்னதமான உச்சக் கட்டமும் ஆகும்.

சிந்துவெளியின் பரந்த நிலப்பரப்பிலும் பல்வேறு நகரங்களிலும் நகர அமைப்பு, செங்கல் அளவு, எடைக் கற்கள், எழுத்துப் பொறிப்புகள், முத்திரைகள் என்று பொதுக்கூறுகள் உள்ளன. இந்தத் தரக் கட்டுப்பாடு ஒரு பண்பட்ட மொழி/ தொடர்பு மொழி இல்லாமல் சாத்தியமாகாது. ஆனால் அந்த மொழி எதுவென்று உறுதியாகச் சொல்லமுடியவில்லை.

ஆனால் அந்த உயர் நாகரிகத்தின் தொடர்ச்சியை அந்தப் பண்பாட்டோடு பொருத்தப்பாடு கொண்ட இன்னொரு ஆவணப்படுத்தப்பட்ட அடுத்தகட்ட பண்பாட்டு மரபில் இலக்கிய மரபில் தான் தேட வேண்டும். அங்கு தான் சங்க இலக்கியம் முக்கியமான சான்றாக நிற்கிறது.

ஒருவேளை சிந்துவெளிப் பண்பாட்டின் பொது நாகரிக மொழியாகத் தமிழ் அறியப்படும், நிறுவப்படும் சூழல் வந்தால் அப்போது ஆய்வாளர்கள் சிந்துவெளிக்கான மொழி அடையாளம் குறித்துத் தெளிவாக உரையாடுவார்கள்.

அதுவரை சிந்துவெளி நாகரிகத்தின் தொடர்ச்சி குறித்த தேடலில் "திராவிடக் கருதுகோள்" என்ற சொல்லாடல் தேவையானதும் தவிர்க்கமுடியாததும் ஆகும்.

இல்லையென்றால் அது புதிய குழப்பத்தை ஏற்படுத்தும்.

**3.**

**கேள்வி:**

**கீழடி அகழ்வாய்வுகள் உண்மையில் எவ்வளவு முக்கியமானவை ? இந்த அகழ்வாய்வுகளின் முக்கிய பங்களிப்பு என்ன?**

விடை:

கீழடி அகழ்வாய்வுகள் மிக மிக முக்கியமானவை. காரணங்கள்.

1. பழந்தமிழ் நாட்டில் நகர வாழ்வியலுக்கான முதல் அகழ்வாய்வுத் தடயம் கீழடி. இதற்கு முன் ஆதிச்சநல்லூரில் கிடைத்த புதைகுழிப் பகுதிகளில் கிடைத்த தரவுகள் மேலும் முன்னெடுக்கப்படவில்லை. அரிக்கமேடு, கொடுமணல், அழகன்குளம் போன்ற பல அகழ்வாய்வுகள் உள்நாட்டு வெளிநாட்டு வணிக மரபிற்குச் சான்றளித்தன. ஆனால் நகர வாழ்க்கை குறித்த தடயங்கள் இல்லை என்ற குறையைத் தீர்க்கிறது கீழடி.

2. இந்தியாவின் ஆகச் சிறந்த வாழ்வியல் இலக்கியமான சங்க இலக்கியம் தீட்டும் துல்லியமான சொற்சித்திரம் கற்பனையான கட்டுக்கதை அல்ல; அவற்றில் பண்பாட்டு வரலாற்றுக்கான வழிகாட்டுதல்களும் அடங்கியுள்ளன என்ற கருத்தை கீழடி மெய்ப்பிக்கிறது.

3. "தமிழி" யா தமிழ் பிராமி யா என்ற சொல்லாடல்களை விட என்பதை விட முக்கியமானது இந்த மண்ணில் தமிழ் மொழி சார்ந்த வரிவடிவத்தின் கால நிர்ணயம் கி.மு 6 ஆம் நூற்றாண்டிற்கு நகர்ந்துள்ளது என்பது தான். (இது குறித்து கல்வெட்டு ஆய்வாளர்கள் தெளிவுபடுத்த வேண்டும்). அத்தகைய ஆய்வாளர்கள் சொல்வதைத் திறந்த மனதோடு செவி மடுக்க வேண்டும். இதில் முரண்பட்ட கருத்துகளுக்கு வாய்ப்பு உள்ளது என்பதை முதலில் நாம் அங்கீகரிக்க வேண்டும்.

4. நான்காம் கட்ட ஆய்வில் மட்டும் 1001 பானைக்கீறல்கள் கிடைத்துள்ளன என்பது மகிழ்ச்சிக்குரியது. இவற்றில் சில சிந்துவெளி பொறிப்புகளோடு ஒத்துப் போகின்றன என்பதும் கவனத்திற்கு உரியது. சிந்துவெளி- தமிழ்த் தொடர்பை இதை வைத்து மட்டுமே வைத்து உறுதி செய்யமுடியாது என்பது உண்மைதான். ஆனால் சிந்துவெளி- சங்க காலம் - தமிழக பானைக்கீறல்களை பொருத்திப் பார்ப்பது இது முதல் தடவை அல்ல. பல. அறிஞர்கள் இதுபற்றி ஏற்கனவே பேசியிருக்கிறார்கள். கீழடியில் இது மேலும் தெளிவாகிறது அவ்வளவுதான். அதே நேரத்தில் சிந்துவெளி பொறிப்பைப் போலவே இதன் பொருள் என்ன என்பது புரியாவிட்டாலும் இது முக்கியமான துணைச்சான்று என்பதை மறுக்கமுடியாது.

**4.**

**கேள்வி:**

**கீழடியில் இதுவரை வெளியான அகழ்வாய்வுத் தரவுகளின் அடிப்படையில் அங்கு சமயம் மற்றும் இறைவழிபாட்டை முன்னிலைப்படுத்தும் தடயங்கள் கிடைக்கவில்லை என்பதை வைத்து வைகைக் கரை தமிழ்ப்பண்பாட்டு மக்கள் இறை வழிபாட்டில் நம்பிக்கையற்றவர்கள் என்ற முடிவுக்கு வர முடியுமா?**

விடை :

முடியாது. ஏனெனில் கீழடியில் இது வரை தோண்டப்பட்டு இருப்பது சிறு பகுதியே. எதிர்காலத்தில் தோண்டப்படும் போது எத்தகைய சான்றுகள் கிடைக்கும் என்பதை இப்போது ஊகிக்க முடியாது. அப்படியே எதுவும் கிடைத்தாலும் அடுக்கு நிலை அகழ்வாய்வின் அடிப்படையில் (Stratigraphy) எந்த அடுக்கில் என்ன கிடைக்கிறது என்பதே முக்கியமானது. அதைப் பொறுத்தே கால நிர்ணயம் மற்றும் பண்பாட்டு நிலை பற்றி முடிவு செய்வார்கள்.

சங்க இலக்கியம் காட்டும் வாழ்வியலில் நடுகல் வழிபாடு, மரத்தில் உறையும் தெய்வம், கொல்லிப் பாவை, கானுறை தெய்வம், அணங்கு,

வேலன் வெறியாட்டு போன்ற மரபுகள் பேசப்படுகின்றன. திணை சார்ந்த கருப்பொருளாகவும் கடவுளர் அடையாளம் காட்டப்படுகிறார்கள். தாய்த் தெய்வ வழிபாட்டின் மேலதிகச் செல்வாக்கும் புலனாகிறது.

ஆனால் சங்க இலக்கியம் காட்டும் வாழ்வியலில் நம்பிக்கைகள் பழக்கவழக்கங்கள் ( Beliefs and Faith System) இருந்தன என்றாலும் மனித வாழ்வியலின் நடைமுறை எதார்த்தமே காத்திரமாகக் கொண்டாடப்படுகிறது.

"ஒன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி
ஒளிறுஏந்து மருப்பின் களிறுஎறிந்து வீழ்ந்தெனக்
கல்லே பரவின் அல்லது
நெல்உகுத்துப் பரவும் கடவுளும் இலவே"

என்ற புறநானூற்று ( 335) வரிகள் தொல்தமிழர் சமயத்தின் முன்னுரிமையைத் தெளிவாக்குகிறது. எதிரிகளிடமிருந்து தனது குடிகளைக் காக்கப் போரிட்டு மாண்ட வீரனுக்கு எழுப்பப்படும் நடுகல் தான் தமிழர் வழிபாட்டு மையப்புள்ளி என்பதை இது தெளிவுபடுத்துகிறது. அதுவே நீத்தார் பெருமையின் நிலைக்களன்.

எதுவாயினும் வைகை கரை தமிழ்ப் பண்பாட்டுக் காலத்தின் வழிபாட்டு மரபுகள், நம்பிக்கைகள், முன்னுரிமைகள், பற்றி எதிர்கால அகழ்வாய்வுகள் சான்றளிக்கக் கூடும்.

எனவே இதுபற்றி தீர்மானமான தீவிரக் கருத்துகளைத் தவிர்ப்பது நலம் என்று தோன்றுகிறது.

There is an aphorism, "Absence of evidence is not evidence of absence,"

"தடயம் கிட்டவில்லை என்பது தடயம் இல்லை என்பதற்கான தடயம் இல்லை"

இது சிந்துவெளிக்கும் கீழடிக்கும் மட்டும் அல்ல எந்தச் சூழலுக்கும் பொருந்தும்.

May like to google for:

Evidence of absence

Absence of Evidence

**5.**

**கேள்வி :**

**கீழடியில் கிடைத்திருக்கிற எழுத்துப் பொறிப்புகள் ஏராளமாகக் பானைக்கீறல்கள் எதைக்காட்டுகின்றன? சங்க காலக் கல்விப்பரவலாக்கத்திற்கு இதை ஒரு அடையாளமாகக் கருத இடமுண்டா?**

விடை:

உறுதியாக. கீழடி எழுத்துப் பொறிப்புகள் எழுதப்பட்டதாகக் கருதப்படும் காலகட்டம் கி.மு. ஆறாம் நூற்றாண்டா, ஐந்தாம் நூற்றாண்டா என்பதை விட முக்கியமானது இது தமிழக மண்ணில் முதல் கண்டுபிடிப்பு அல்ல என்பதும் தான். இது தமிழி எழுத்துப் பொறிப்புகள் ஏற்கனவே தமிழ்நாட்டின் பல பகுதிகளில் கிடைத்துள்ளன அவற்றின் காலகட்டம் கி.மு. மூன்றாம் - ஐந்தாம் காலகட்டத்தில் ஏற்கனவே பொருத்தப்பட்டுள்ளன. எனவே இது முதல் முறை அல்ல; இதன் கால நிர்ணயம் கி.மு. 6 ஆம் நூற்றாண்டு என்று கணிக்கப்பட்டுள்ளது என்பது தான் புதிய தகவல்.

ஆனால் என் மட்டில் நான் அதை விட முக்கியமாகக் கருதுவது கீழடி வாழ்வியலுக்கும் சங்க இலக்கியத்திற்கும் இடையிலான இணக்கம்.

கல்விப் பரவலாக்கத்தின் முதல் உரைகல் (you can say " litmus test") கருத்தியல் அடிப்படையிலும் நடைமுறை எதார்த்தத்திலும் கல்வி அனைவருக்குமானதா என்பதே ஆகும்.

கீழடி பானைக் கீறல்களும் "தமிழி" எழுத்துகளும் யாரால் கீறப்பட்டது அல்லது எழுதப்பட்டது என்பதும் முக்கியம். இவை பேரரசர்களின் கல்வெட்டுகளோ செப்பேடுகளோ இல்லை. இதில் "அரசாங்கத்தின்" கரங்கள் இல்லை.

அது பானையை வனைந்த குயவன் எழுதியது என்றால் அது "முதுவாய் குயவ" (Potter of the ancient wisdom) என்ற சங்க இலக்கியப் பதிவுக்குக் கிடைத்த சான்றிதழ். அது பானையை வாங்கிய பலராலும் எழுதப்பட்டது எனில் அது கல்விப் பரவலாக்கத்திற்கு உரைகல்.

இத்தகைய கல்விப்பரவலாக்கத்திற்கு சங்க இலக்கியம் காட்டும் வாழ்வியலின் அறிவு சார்ந்த அணுகுமுறை ( Knowledge based approach) முக்கியக் காரணம் ஆகும்.

இதற்கு புறநானூற்றில் வரும் ஒரு பாடல் ஒரு சோற்றுப் பதம். இதோ அந்தப் பாடல். ( புறநானூறு 183)
"உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றை நிலை முனியாது கற்றல் நன்றே!
பிறப்போரன்ன உடன்வயிற்றுள்ளும்
சிறப்பின் பாலால் தாயும் மனம் திரியும்
ஒரு குடிப் பிறந்த பல்லோருள்ளும்
முத்தோன் வருக என்னாது அவருள்
அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும்
வேற்றுமை தெரிந்த நாற்பா லூள்ளும்
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
மேல் பால் ஒருவனும் அவன் கண்படுமே"–(புறம்-183)

அப்போதே "வேற்றுமை தெரிந்த" சமூகப் படிநிலை முறைகள் தலைதூக்கி இருக்கவேண்டும். ஆனால் கவிஞனாகிய தமிழ் மன்னன் அதிலும் ஆரியப் படை கடந்தவன் என்று பெயர் சூட்டிக் கொண்டவன் (நெடுஞ்செழியன் என்ற பெயர் தொல் தமிழ்க் கல்வெட்டிலேயே வருகிறது) அறிவுடையோன் காட்டும் வழியில் தான் தனது அரசு செல்லும் என்று தனது கவிதையின் மூலம் அறிவிக்கிறான். கல்விப்பரவலாக்கத்திற்கான அரசு சார்ந்த / ஆவணப்படுத்தப்பட்ட முதல் குரல் எனக்குத் தெரிந்த வரையில் இது தான்.

இந்த அறிவிப்பு எதிர்பார்ப்போ புனைந்துரையோ இல்லை என்பதைச் சங்க இலக்கியப் புலவர்களின் சமூகப்பின்னணிகளே சான்றளிக்கும்.

கொற்றவனும்...குயத்தியும்...
கணியனும்...கணக்காயனும்...
குறமகளும்..கொல்லனும்...
வணிகனும்..வண்ணக்கனும்...
சேரனும் சோழனும் பாண்டியனும்...
கூடிப் பாடிய கூட்டியக்கம் தான் சங்கத்தமிழ் என்ற ஆவணக்களஞ்சியம்.

கீழடியில் வெளிவரும் எழுத்துப் பொறிப்புகளும் குயவரோ பானை உரிமையாளரோ கீறிய பானைக் கீறல்களும் இந்தக் கருத்தியலின் இன்னொரு உடல் மொழிதான்.

இன்னொரு வகையில் சிந்துவெளி வாழ்வியலும் சங்க இலக்கிய வாழ்வியலும் தொன்மத்தின் தொடர்ச்சியாக அடிக்கோடிடும் இயக்கங்களில் / இணக்கங்களில் இதுவும் ஒன்று.

எனவே கீழடிப் பானை எழுத்துகள் கீறல்கள் கல்விப்பரவலாக்கத்திற்கு சான்று என்பது சரியான வாதமே.

6.

**கேள்வி:**

**தாமிரவருணி மற்றும் வைகைக் கரையோர வாழ்வியலுக்கும் சிந்துவெளிப் பண்பாட்டிற்கும் ஏதோ ஒரு (சமகால அல்லது சற்று பின்னரான) தொடர்பு இருந்திருக்கக்கூடும் என்பது கீழடி ஆய்வுத் தடயங்களின் அடிப்படையில் புதிதாக முன்வைக்கப்படும் புதிய வாதமா அல்லது இக்கருத்தியல் ஏற்கனவே நிலவியதா?**

விடை:

இது இப்போது திடீரென்று தோன்றிய புதிய முன்மொழிவு அல்ல. இதற்கு ஏற்கனவே நீண்ட பின்னணி உண்டு. ஏற்கனவே அகழ்வாய்வாளர்கள் "இருக்கக்கூடும்" என்று நினைத்ததை, பேசியதை, எழுதியதைத் தான் கீழடி அகழ்வாய்வுகள் "இருக்கிறது" என்று கண்கூடாகத் தடயங்களைச் சாட்சி வைத்து நிறுவி வருகின்றன.

அறிந்ததிலிருந்து அறியாததை அறிய முயற்சி செய்வது அகழ்வாராய்ச்சியின் முக்கியமான நோக்கங்களில் ஒன்றாகும். அந்த அடிப்படையில் தான் இப்போது கீழடியில் நடைபெறும் அகழ்வாய்வு போன்ற அகழ்வாய்வுகளின் தேவையை 80 ஆண்டுகளுக்கு முன்பே கே. என். தீட்சித் 1939 இல் கோடிட்டுக் காட்டினார். அப்போது அவர் இந்தியத் தொல்லியல் நிறுவனத்தின் தலைவராக இருந்தார் (Director General of Archaeological Survey of India). 1937 இல் இருந்து 1944 வரை அப்பொறுப்பிலிருந்த அவர் நிகழ்த்திய உரையொன்றை 1939 இல் சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்டது.

தீட்சித்திற்கு இன்னொரு சிறப்பும் உண்டு. மொகஞ்சதாரோவில் நடந்த சிந்துவெளி ஆய்விலும் ஈடுபட்டவர் அவர். சர் ஜான் மார்ஷல், மார்ட்டிமர் வீலர் போன்றோருடன் பணியாற்றியவர். எனவே சிந்துவெளிப்பண்பாடு பற்றிய நேரடியான கள அனுபவம் அவருக்கு உண்டு.

பெண்கள் சங்கு வளையல்கள் அணிவது என்பது சிந்துவெளியின் பண்பாட்டுக் கூறுகளில் ஒன்றாகும். சங்கு வளையல் தொழிலை மனதில் வைத்து அகழ்வாராய்ச்சி செய்தால் சிந்துவெளிக்கும் தமிழகத்திற்கும் இடையிலான தொடர்பை நிறுவி விடலாம் என்ற எதிர்பார்ப்பு அப்படி ஒன்றும் மிகையான எதிர்பார்ப்பு அல்ல என்று 80 ஆண்டுகளுக்கு முன்பே தீட்சித் சொல்லியிருக்கிறார். அவரது கருத்து பின்வருமாறு:

"At no great distance from these newly discovered places is the Gulf of Cambay. It was at the ports of Cambay and Broach that the carnelian industry of India was concentrated and the extensive use of this material in the Indus cities renders its almost certain that further investigation in the Narbada valley will bring to light other settlements of that period.

Considering that the conch shell which is typical of the Indus valley civilization and which seems to have been in extensive use in Indus cities was obtained from south-east coast of the Madras Presidency, it would not be too much to hope that a thorough investigation of the area in Tinnevelly Dt. and the neighbouring regions such as the ancient sea port of Korkai will one day lead to the discovery of some site which would be contemporary with of even little later than the Indus civilization." (Dikshit 1939: 13)"

இதில் கடைசி ஐந்தாறு வரிகளில் தீட்சித் தின் பட்டறிவை, தொலைநோக்குப் பார்வையை விளக்கும் வைர வரிகள். "தீட்சித்தின் தீர்க்க தரிசனம்" என்று சொல்லத் தோன்றுகிறது. ஆனால் அவர் சொன்னது ஆர்வக் கோளாற்றால் அல்ல. அனுபவ அறிவும் தரவு சார்ந்த தேடல்களின் மீதிருந்த நம்பிக்கையும் தான் இதற்குக் காரணம்.

பழங்காலத் தமிழ்நாட்டில் சங்கு அறுக்கும் / சங்கு அறுத்து வளையல் செய்யும் தொழிற் கூடங்கள் இருந்ததற்கான தடயங்கள் பல இடங்களில் கிட்டியுள்ளன. இப்போது கீழடி அகழ்வாய்வுகளிலும் சங்கு தொழில் தொடர்பான தடயங்கள் கிடைத்துள்ளன. இது தமிழ்நாட்டில் முதல் முறையும்

அல்ல. சங்கு தொழிற்கூடத்திற்கான தடயம் கொடுமணலில் கிடைத்துள்ளது. அழகன்குளம் கொற்கை போன்ற இடங்களும் சான்றளிக்கின்றன.

80 ஆண்டுகளுக்கு முன்பு தீட்சித் கோடிட்டுக் காட்டியபடி " விரிவான விசாரணை" ( "thorough investigation") செய்திருந்தால் தமிழ்த்தொன்மங்கள் மட்டுமின்றி இந்தியாவின் தேதியிடப்படாத காலகட்டங்கள்/ அவற்றின் தொடர்ச்சியை எங்கு எப்படித் தேட வேண்டும் என்பதில் கூடுதல் தெளிவு கிடைத்திருக்கும் என்பதில் ஐயமில்லை.

கீழடி போன்ற அகழ்வாய்வுகள் பாய்ச்சும் புது வெளிச்சத்தை தீட்சித் போன்ற அனுபவம் மிக்க அகழ்வாய்வாளர்களின் நெடுநோக்குப் பார்வையின் துணையோடு சீர்தூக்கிப் பார்ப்பது தரவு சார்ந்த ஆய்வுகளின் தவிர்க்க முடியாத அணுகுமுறை ஆகும்.

**7.**

**கேள்வி:**

**கீழடி அகழ்வாய்வில் கண்டுபிடிக்கப்பட்ட உறைக்கிணறு பற்றி ஆய்வறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஊடகங்களிலும் இது பற்றி செய்திகள் வெளிவந்துள்ளன. உறைக்கிணறு என்பதன் முக்கியத்துவம் என்ன? இதுபற்றி சங்க இலக்கியம் குறிப்பிடுகிறதா?**

விடை:

ஆமாம். சங்க இலக்கியம் உறைக்கிணறு பற்றி பின்வருமாறு கூறுகிறது.

"பறழ்ப் பன்றி பல் கோழி,
உறைக் கிணற்றுப் புறச்சேரி
ஏழகத் தகரொடு சிவல் விளையாட" (75-77)

இது பட்டினப்பாலையில் வரும் சொற்சித்திரம்.

காவிரிப்பூம்பட்டினத்தின் அருகே அமைந்த புறநகர்ப்பகுதியை (sub-urban habitat) பற்றிய துல்லியமான படப்பிடிப்பு இது.

தமிழ்நாட்டில் ஏற்கனவே நடந்த அகழ்வாய்வுகளில் பல்வேறு இடங்களில் உறைக்கிணறுகள் கிடைத்துள்ளன. உறையூர், பூம்புகார், அரிக்கமேடு, திருக்கோவிலூர், கொற்கை, காஞ்சிபுரம், செங்கமேடு, திருவாமுத்தூர், திருவேற்காடு, மாமல்லபுரம், திருக்காம்புலியூர் போன்ற இடங்களில் கண்டறியப்பட்டுள்ள உறைக்கிணறுகள் இதன் பரவலான பயன்பாட்டிற்குச் சான்றாகும். இப்போது கீழடியில் கிடைத்துள்ளது.

எனவே உறைக்கிணறு என்பது சங்ககால வாழ்வியலின் பொதுவான உரைகல் என்பது தெளிவாகிறது.

காவிரிப்பூம்பட்டினம் அருகே இருந்த உறைக்கிணறு அமைந்த ஒரு புறநகர்ப்பகுதி பற்றிய மேலே குறிப்பிட்ட சங்க இலக்கியச் செய்தியைக் கையில் வைத்துக்கொண்டு கீழடி அகழ்வாய்வுக் களத்திற்குச் செல்லுங்கள்.

அதற்கு முன்பு அந்த மூன்று வரிகளின் எளிய பொருளைத் தெரிந்துகொள்ளுங்கள்.

"அது ஒரு புறஞ்சேரி, நகரத்தை ஒட்டிய குடியிருப்புப் பகுதி. உறைக்கிணற்றோடு கூடிய அந்தக் குடியிருப்பில் பன்றிகள் பல குட்டிகளுடனும், பல வகையான கோழிகளும், ஆட்டுக் கிடாய்களும், கவுதாரிகளும் விளையாடிக்கொண்டிருந்தன."

இப்போது கீழடியில் நமக்குக் கிடைத்திருக்கிற தடயங்களைப் பார்ப்போம். உறைக்கிணறு இருந்த கீழடியில் பன்றி, ஆடுகள் மாடுகள் வளர்க்கப்பட்டதற்கான எலும்புத் தடயங்கள் (புனே நகரிலுள்ள ஆய்வுக்கூடம் உறுதி செய்தபடி) கிடைத்துள்ளன.

காட்டுப்பன்றியின் உருவம் பொறித்த சூதுபவளம் கிடைத்துள்ளது. வேறென்ன வேண்டும்?

இப்படிப்பட்ட சூழலை நேரில் பார்த்தால் அப்படித் தான் எழுதத்தோன்றும். சங்க இலக்கியங்கள் புனைகதைகள் அல்ல. அன்றாட வாழ்வியலின் அழகிய படப்பிடிப்பு என்பது தான் உண்மை.

கீழடியும் தமிழகத்தின் ஏனைய அகழ்வாய்வுக் களங்களும் அழுத்திச் சொல்வது சங்க இலக்கியத்தின் நம்பகத்தன்மையைத் தான்.

இந்த உறைக்கிணற்றுக் கவிதைக்கும் உண்மையில் நம் கண்முன் அகழ்ந்தெடுக்கப்படும் இந்த உறைக்கிணறுகளும் இடையிலான சூழல் ஒருமை நமக்கு வியப்பூட்டுகின்றன. தமிழகத்தின் பல இடங்களிலும் மேலும் மேலும் தோண்டவேண்டியதன் தேவையையும் இவை அடிக்கோடிடுகின்றன.

**8.**

**கேள்வி:**

**கீழடி செங்கல் கட்டுமானங்களில் கண்டெடுக்கப்பட்ட செங்கல், சிந்துவெளி நாகரிக கால கட்டுமான செங்கல் - இவற்றுக்கு இடையே தொடர்பு ஏதும் உண்டா? இதை எப்படி ஒப்பிடுகிறீர்கள்?**

விடை:

சிந்துவெளிப் பண்பாட்டில் அகழ்ந்தெடுக்கப்பட்ட செங்கற்களின் அளவை (அதாவது நீளம், அகலம், உயரம்) மட்டும் வைத்துப் பார்த்தால் சிந்துவெளிச் செங்கற்களையும் கீழடிச் செங்கற்களையும் ஒன்றெனக் கூற முடியாது.

சிந்துவெளிப் பண்பாட்டு செங்கற்களின் அளவு பெரும்பாலும் 28 செ.மீ*14 செ,மீ* 7 செ.மீ என்ற அளவில் (நீள, அகல, உயரம்) 4:2:1 என்ற விகிதத்தில் அமைந்தவை. கீழடியில் கிடைத்துள்ள செங்கற்கள் பெரும்பாலும் 36*24*6 செ.மீ என்ற அளவில் (6:4:1) என்ற விகிதத்தில் அமைந்துள்ளன. கீழடியில் சில

இடங்களில் 34*24*7 செ.மீ மற்றும் 38*24*7 செ.மீ 33*23*6 செ.மீ என்ற அளவிலும் செங்கற்கள் கிடைத்துள்ளன. ஆனால் பெரும்பாலும் 36*24*6 என்ற அளவே மிகுதியாக உள்ளது.

சிந்துவெளிப் பண்பாட்டை அறிவிக்கும் (1924) முன்னரே 1905 இல் அகழ்வாய்வு செய்யப்பட்ட, இந்தியாவின் வரலாற்றுக் காலத்தின் முதல் அகழ்வாய்வுச் செங்கல் சுவர் தடயம் என்று கருதப்படும் பீகாரிலுள்ள ராஜ்கீரில் (மௌரியப் பேரரசின் காலம்) கிடைத்த பழங்கால மதிற்சுவர்களில் பயன்படுத்தப்பட்ட செங்கல் 52*25*7 செ.மீ என்ற அளவில் (7.4: 3.5:1) என்ற விகிதத்திலும் 42*27*6 செ.மீ என்ற அளவில் 7:4.5:1 என்ற விகிதத்திலும் அமைந்துள்ளன.

இதனடிப்படையில் பார்த்தால் சிந்துவெளியின் ஆகச்சிறந்த செங்கல் பரிமாணத்தை வரலாற்றுக் காலகட்டத்தில் இந்தியாவில் எந்த பிந்தையப் பண்பாடும் எட்டவில்லை என்பதே உண்மை. இதுபற்றி தனது கருத்தை கே.என் .தீட்சித் தெளிவாகப் பதிவுசெய்துள்ளார். அசோகர் காலத்துச் செங்கற்களின் அளவு சிந்துவெளிச் செங்கற்களை விட இரண்டு மடங்கு பெரிதாக இருந்தது என்பதை அவர் சுட்டிக்காட்டுகிறார்.

ஆனாலும் இந்த கேள்விக்கான விடையை - சிந்துவெளிச் செங்கல்லிற்கும் கீழடிச் செங்கற்களுக்கும் இடையிலான அளவின் அடிப்படையில் நேரிடையான தொடர்பு இல்லை என்று கூறி முடித்துவிட முடியாது. அளவின் அடிப்படையில் வேறுபாடு இருந்தாலும் பயன்பாட்டு ஒப்புமை (சுவர்கள், வடிகால்கள், தரைத்தளங்கள்) கவனிக்கத்தக்கது.

சிந்துவெளிப் பண்பாட்டின் மிக அடிப்படையான அடையாளம் செங்கற்களும் அச்செங்கற்களால் கட்டப்பட்ட சுவர்களும் கட்டிடங்களும் தான். சிந்துவெளிக்கு என்று ஒரு நிற அடையாளம் காட்டவேண்டும் என்றால் அது செவ்வண்ணம் தான். ஹரப்பா, மொகஞ்சதாரோ சிதைவிடங்களில் சிதறிக் கிடக்கும் செங்கற்களும் செம்பானை ஓடுகளும் தான் இதற்குச் சாட்சியம்.

சிந்துவெளிப்பண்பாடு இருந்த இடம் தெரியாமல் புதைந்ததற்குப் பின்னால் வடமொழி இலக்கியத்தில் செங்கல் அப்படி ஒன்றும் பெரிதாகப் போற்றப்படவில்லை. ஆனால் செங்கல் பற்றிய சங்க இலக்கியக் குறிப்புகளும் செங்கல் என்ற சொல்லின் பின்புலனாக விளங்கும் பொருளமைவு சார்ந்த கருத்தாக்கமும் முற்றிலும் மாறானது.

செங்கல் என்ற தமிழ்ச்சொல் ஒரே நேரத்தில் இரண்டு கருத்தைத் தெரிவிக்கும். செங்கல்லின் ஒரே அளவான செம்மை, ஒழுங்கு என்பது செங்கல்லின் தரக்கட்டுப்பாடும் தகுதியுமாகும். அதனால் தான் செங்கல்லை ஒரே அளவாக அறுப்பதற்கான அச்சு "செங்கல் கட்டளை" என்றும் கட்டளைக் கல் என்றும் அழைக்கப்படுகிறது. இரண்டாவது செங்கல்லின் செந்நிறம். அது செம்மையாகவும் இருக்கிறது; சிவப்பாகவும் இருக்கிறது. செங்கல்லின் உறுதியை உறுதி செய்வது அது சுட்டசெங்கல் என்பது தான். அதனால் தான் சுடாத செங்கல்லை 'பச்சைக் கல்' - (பச்சைக் குழந்தை, பச்சைக் காய்கறி என்று சொல்வது போல) - என்று சொல்கிறார்கள். செம்மைக்கும் (ஒழுங்கிற்கும்) சிவப்பிற்குமான (செந்நிறம்) வேர்நிலையான மானுட உளவியலுக்கு செம்மை, செம்பு, செப்பு, செப்புத்துறை, செந்தண்மை, செங்கோல், செங்களம், சே, சேய், சேயோன் போன்ற சொற்களின் ஆக்க முறையைத் துருவினால் தெளிவு கிடைக்கும்.

சங்க இலக்கியத்தில் செங்கல் பற்றிய துல்லியமான சொல்லாடல்கள் ஏராளம். ”சுடுமண் ஓங்கிய நெடுநகர் வரைப்பின்” (பெரும்பாணாற்றுப்படை 405) என்ற சங்க இலக்கிய ஒற்றைவரிச் சொல்லாடல் சுட்ட செங்கற்களால் ஆன சுற்றுச்சுவர் கொண்ட ஒரு நகரம் பற்றிப் பேசுகிறது. சுட்ட செங்கற்களால் ஆன குடியிருப்பிற்கு கீழடி சான்றளித்திருக்கிறது. அது மட்டுமின்றி அத்தகைய சுவர்களைச் சித்தரிக்கும் போதெல்லாம் சங்க இலக்கியம் செம்பு என்ற உலோகத்தால் செய்யப்பட்டது போன்ற சுவர் என்றே திரும்பத் திரும்பக் கூறுகிறது.

செம்பு விலையுயர்ந்த அரிய உலோகம். முழுவதும் செம்பைப் பயன்படுத்தி சுவர் எழுப்ப முடியாது. ஆனால் செம்பால் கட்டியது போன்ற சுவர் என்பது சுட்ட செங்கற்களின் செம்பு போன்ற வனப்பு, உறுதித்தன்மை, மேலும் செம்பு போன்ற 'செந்நிறம்' ஆகியவற்றை மனதில் வைத்து உயர்வு நவிற்சியாகக் கூறப்பட்டுள்ள ஆனால் இது உண்மையில் சுட்ட செங்கற்கள் பற்றிய சித்தரிப்பே ஆகும். "உவமை என்பது உயர்ந்ததன் மேற்றே" என்பது தொல்காப்பியம். எனவே இது பொருத்தமாகவே உள்ளது.

சங்க இலக்கியம் சொல்வதைப் போன்ற சுவர்கள் எதிர்கால அகழ்வாய்வுகளில் மேலும் கிடைக்கலாம். இப்போது தானே கீழடி போன்ற இடங்களைத் தோண்ட ஆரம்பித்திருக்கிறோம்.

எனது மதிப்பீட்டில் நான் பல ஆண்டுகளாகத் தொடர்ந்து ஒரு கருத்தை முன்வைத்து வருகிறேன். "சிந்துவெளி விட்ட இடமும் சங்க இலக்கியம் தொட்ட இடமும் ஒன்றே" என்பது தான். அவ்வகையில் சங்க இலக்கியங்களில் இடம்பெறும் சுட்ட செங்கல் சுவர்களின் பிரமாண்டம் குறித்த சொல்லாடல் கி.மு ஆறாம் நூற்றாண்டை ஒட்டிய காலகட்டத்தின் செங்கல் கட்டிடங்களின் நேர்முக வர்ணனை மட்டுமல்ல; தமிழ்த் தொன்மங்களுக்குள் அதற்கு முந்தைய நெடுங்காலமாக நிலைபெற்று இருந்த 'செங்கல் பண்பு" (Brick Culture) குறித்த மீள் நினைவுக்குமான சாட்சியமுமாகும்.

புறநானூற்றில் இருங்கோவேள் என்ற வேளிர் தலைவனின் முன்னோர்கள் அவனுக்கு 49 தலைமுறைக்கு முன்பே துவரை என்ற நகரை ஆண்டவர்கள் என்ற மீள் நினைவு இங்குக் குறிப்பிடப்பட்டுள்ளது. இப்பாடலிலும் துவரை நகரின் சுவர் செம்பால் செய்யப்பட்டது என்று சொல்லப்படுகிறது. செம்பு போன்ற செங்கல் தான் அது என்பது தெளிவு.

ஆனால் இத்தகைய இலக்கிய சாட்சியம், ஆவணங்கள் வடநாட்டு ராஜகிருகம் போன்ற நகரங்களுக்கு இல்லை. சிந்துவெளிப் பண்பாட்டின் பிரமாண்டமான

செங்கற் கட்டுமானங்கள் வேத இலக்கியங்கள் உள்ளிட்ட வடமொழி இலக்கியங்களுக்குத் தெரியாத ரகசியம்.

"ரிக் வேத காலத்தில் செங்கல் என்ற கட்டுமானப் பொருள் பயன்படுத்தப்பட்டதற்கான அகழ்வாய்வுத்தடயமோ மொழியியல் தடயமோ இல்லை" என்று எச். எஸ் கன்வர்ஸ் என்ற அறிஞர் குறிப்பிடுகிறார். யஜூர் வேதத்தில் இடம் பெறும் ”அக்னி சயனா” சடங்கில் தான் அதுவும் வழிபாடு சார்ந்த பயன்பாட்டுப் பொருளாகச் செங்கல்லின் பயன்பாடு முதன்முறையாகப் பதிவுபெறுகிறது என்றும் "சதபாத பிராமணத்தில்" தான் அது முழுமையாக வளர்ச்சி பெற்றது என்றும் அவர் குறிப்பிடுகிறார். பிரிட்ஸ் ஸ்டால் என்ற அறிஞரும் கிட்டத்தட்ட இக்கருத்துடன் உடன்படுகிறார்.

"இஷ்ட்டிகா" என்ற வடசொல்லின் மூலமே "சுட்ட கல்" என்ற தமிழ்ச்சொல் தான் என்ற கன்வெர்சின் கருத்து ஒப்புக்கொள்ளத்தக்கதா இல்லையா என்பதை விடவும் முக்கியமானது சுட்ட செங்கல் தொழில் நுட்பத்தின் உச்சத்தைக் கொண்டாடிய செங்கல் பண்பாட்டின் எச்சத்தைச் சிந்துவெளிப் பண்பாட்டிற்குப் பின்னர் சங்க இலக்கியங்களில் தான் காணமுடிகிறது என்பது தான்.

குறிப்பாக சுட்ட செங்கல்லும், அதன் உறுதியும் வனப்பும், செம்பு போன்ற அதன் நிறப்பொலிவும் நெடும் பெரும் சுற்றுச் சுவர்களுக்கான அதன் பயன்பாடும் போற்றப்பட்டிருக்கிறது என்றால் அதற்குச் சான்றாக நிற்பது சங்க இலக்கியம் தான். வேறொன்றுமில்லை.

"சிந்துவெளி காலம் வேறு சங்க இலக்கியம் முறைப்படி ஆவணப்படுத்தப்பட்ட தொகுக்கப்பட்ட காலம் வேறு" என்பதை காலண்டர் பார்த்தே சொல்லிவிடலாம். அதற்குக் கரிம ஆய்வு கூடத் தேவையில்லை.

இன்றைய தேதியில் இப்போது வரை கிடைத்துள்ள தரவுகளின் அடிப்படையில் தான் நாம் வாதிட வேண்டும். அந்த வகையில்

கீழடிப்பண்பாடு சிந்துவெளி கட்டுமானங்களின் கருத்தியலோடு தொடர்ச்சி காட்டுகின்றன என்பது தான் முக்கியம். இதைச் சங்க இலக்கியம் என்ற வழித்துணையோடு வாசிக்கும் போது மேலும் தெளிவு கிடைக்கும். ஆனால் அதற்குத் திறந்த மனமும் தரவு சார்ந்த தேடலும் தேவைப்படுகிறது.

எதிர்கால அகழ்வாய்வுகள் தமிழ்த்தொன்மங்களை,நகர வாழ்வியலுக்கான காலகட்டங்களை எங்கு கொண்டுபோய் நிறுத்தும் என்று இப்போது சொல்லமுடியாது.

ஆனால், சிந்துவெளிச் செங்கல் சுவர்களுக்கும் கீழடிச் செங்கல் சுவர்களுக்கும் அளவால், கால நிர்ணயத்தால் இடைவெளி இருக்கிறது என்றாலும் இந்த இரு சுவர்களுக்கும் இடையிலான தூரத்தை நிரப்பும், விளக்கும் மரபின் தொடர்ச்சிக்கு சங்க இலக்கியம் மட்டும் தான் சான்றாக இருக்கிறது என்பதை நாம் புரிந்துகொள்ள வேண்டும். "செம்பு புனைந்து இயற்றிய சேணெடும் புரிசை" யாகவும் சுடுமண் ஓங்கிய நெடுநகர் வரைப்பாகவும் நிமிர்ந்து நிற்கிறது தமிழ் போலவே. இதற்கு ஒரு சோற்றுப் பதமாய் வெளிவந்துள்ளன கீழடிச் செங்கல் சுவர்கள்.

**சிந்துவெளி விட்ட இடமும்**
**சங்க இலக்கியம் தொட்ட இடமும் ஒன்றே!**

தொடர்பு:
ஆர். பாலகிருஷ்ணன், இ. ஆ. ப.

- https://www.facebook.com/profile.php?id=100011737148867&fref=nf

## 3. கீழடி ஆதாரங்கள் - சில குறிப்புகள்

*— முனைவர்.அ.ராமசாமி*

கீழடிச் சான்றுகளைச் சங்ககாலச் சான்றுகள் எனச் சொல்வதைத் தொல்லியல் ஆய்வாளர்கள் ஏற்க மாட்டார்கள். அவை ஒரு பழைய நாகரிகத்தின் ஆதாரங்கள். முச்சங்கம், சங்கம், இறையனார் அமர்ந்து தமிழாய்ந்தது போன்றன புராணிகம் தமிழ்நாட்டிற்குள் பரவிய காலகட்டத்துக் கருத்துகள். அதனை ஏற்று நிறுவும் முயற்சிகள், கிடைத்த அறிவியல் ஆதாரங்களையும் புராணிகத்தன்மை கொண்டவைகளாக மாற்றிவிடும்.

**கீழடிச் சான்றுகளைச் சங்கம் என்ற சொல்லோடு இணைக்காமல் பேசுவதே சரியானது.**

மொழி, இலக்கிய ஆய்வியல் காத்திரமான பங்களிப்புச் செய்த பலரும் சங்ககாலம் என்பதை ஏற்றுப் பேசுவதில்லை. சான்றோர் இலக்கியங்கள், வீரநிலைக்காலம், வீரநிலைக்கவிதைகள், செவ்வியல் கவிதைகள், செவ்வியல் இலக்கியக்காலம் போன்றவற்றையே அவர்கள் பயன்படுத்துகிறார்கள்.

இப்போது அறிவியல் ஆய்வகத்தின் வழி கீழடி என்னும் இடத்தில் கிடைத்துள்ள தரவுகள், 2600 ஆண்டுகளுக்கு முன்பே திட்டமிட்ட கட்டட அமைப்பும், நகர அமைப்பும், வாழ்க்கைக்கான வசதிகளும் கொண்ட நகரம் ஒன்று இருந்தது என்பதற்கான ஆதாரங்களாக ஆகியிருக்கின்றன. அங்கு வாழ்ந்தவர்கள் மண்பாண்டங்களில் எழுதினார்கள்; விலங்குகள், பறவைகள் போன்றவற்றை வரிவடிவங்களாகத் தீட்டினார்கள் என்பதோடு உலோகங்களால் செய்த கருவிகள் பயன்பாட்டிலிருந்தன. தங்கத்தில் நுட்பமான வேலைப்பாடுகள் கொண்ட நகைகள் செய்தார்கள். அவை விற்பனைப்பண்டங்களாக இருந்தன. தங்களுக்குள் தொடர்புகளைச் செய்ய

எழுத்துப் பயன்பாட்டைக் கொண்டிருந்தார்கள் என்று விவரிப்பதற்கான பருண்மையான ஆதாரங்கள் இவை. அதனால் வைகைக் கரை நாகரிகம் 2600 ஆண்டுகள் கொண்டது என்பதல்ல. அதற்கும் சில ஆயிரங்களுக்கு முன்பே தோன்றி வளர்ந்த நாகரிகம்.

கீழடிச் சான்றுகள் வழி உறுதியாகியுள்ள தகவல்களைத் தமிழின் தொல்லிலக்கியங்களான பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் ஏற்கெனவே தந்துள்ளன. கீழடி தரும் செய்திகளைத் தமிழின் தொல் இலக்கியங்களில் ஒன்றான நெடுநல்வாடை விரிவாகச் சொல்கிறது. அது மதுரை மாநகரைப் பாடல்வெளியாகக் கொண்டது. பரிபாடலில் வையை நதியின் பெருக்கமும் பரவலும் நகரின் விரிவும் தரப்பட்டுள்ளன.

இன்னொரு கடல் நகரமான காவிரிப்பூம்பட்டினத்து வாழ்க்கையைப் பட்டினப்பாலை விவரித்திருக்கிறது. துறைமுகம் சார்ந்த தொழிற்சாலைகளை விவரிக்கவும் செய்கிறது. முல்லைப் பாட்டில் காத்திருக்கும் தலைவியின் வீடும் கூட வசதியான வீடுதான். இவையெல்லாம் நகரநாகரிக வாழ்க்கையின் பதிவுகளைத் தருகின்றன.

இவற்றிற்கிணையாகக் கிராமப் புறங்களையும் மலைப் பாதைப் பயணங்களையும் சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம் போன்ற ஆற்றுப்படைகள் விவரித்திருக்கின்றன.

குறிஞ்சிப்பாட்டு வன அறிவையும் மலைவளத்தையும் கொண்டிருந்ததை -பயன்படுத்திக்கொண்டதைத் தருகின்றது. இவையெல்லாம் பத்துப்பாட்டு என்னும் நெடும்பாடல்கள் வழி அறியப்படும் நாகரிக வாழ்க்கை. நெடும்பாடல்களுக்கு முன்னால் எட்டுத் தொகையிலிருக்கும் குறும்பாடல்கள் எழுதப்பட்டிருக்கின்றன. அவை எழுதப்பெற்ற காலம் சில ஆயிரங்களுக்கு முன்பு. அவற்றிற்கும் முன்னால் வாய்மொழித்தன்மை கொண்ட ஐங்குறுநூற்றுப் பாடல்கள் கிடைத்திருக்கின்றன. அவற்றின் மொழியமைப்புக்கும் அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை, புறநானூறு,

பதிற்றுப்பத்து, கலித்தொகை, பரிபாடல் போன்றவற்றின் மொழிநடைக்கும் வேறுபாடுகள் இருக்கின்றன. வாய்மொழிப்பாடல்களில் இறுக்கம் ஏற்படச் சில நூற்றாண்டுகள் அல்லது சில ஆயிரம் ஆண்டுகள் ஆகும் என்பது மொழியியலும் இலக்கியவரலாறும் சொல்லும் செய்திகள்.

இலக்கியங்கள் தரும் தகவல்களைப் போலப் பன்மடங்கு செய்திகளையும் தமிழர்களின் இயற்கை அறிவியல் பார்வையையும் மொழிபற்றிய கோட்பாட்டையும், நூலாக்கம், சமூக அமைப்பு குறித்த கருத்துகளையும் தொல்காப்பியப் பனுவல் குறிப்பிடுகின்றது. உயிரித் தோற்றவியலும் மானுடவியல் கூறும் அறிவுத்தோற்றம், குடும்பம், அரசு, கோட்டை, காப்பரண் போன்றவற்றை உருவாக்குதல் பற்றியெல்லாம் அது விரிவாகப் பேசியுள்ளது. ஐரோப்பியச் சிந்தனை மரபுக்கு ஆதாரமாக இருக்கும் அரிஸ்டாட்டிலின் பனுவலையொத்த பனுவலாக இருக்கிறது தொல்காப்பியப் பனுவல். ஆனால் சிக்கல் என்னவென்றால் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, தொல்காப்பியம் உள்ளிட்ட தமிழ்த் தொல்நூல்களின் காலத்தையும் அறிவியல் பூர்வமாக உறுதிசெய்ய முடியவில்லை என்பதுதான்.

இப்போது கீழடியில் கிடைத்துள்ள தொல்லியல் ஆய்வுகள் வழி உறுதிசெய்யப்பட்டுள்ள உண்மைகள்;

இலக்கியங்கள் பேசும் உண்மைகளை உறுதி செய்கின்றன என்பதில்தான் நாம் மகிழும் காரணங்கள் இருக்கின்றன. அந்த மகிழ்ச்சியைச் சங்கப்புனைவுகளோடு இணைத்துக் கெடுத்துக் கொள்வது சரியாக இருக்காது.

## 4. தமிழ் எழுத்தின் பழமை

*— முனைவர்.சு.ராஜவேலு*

முன்குறிப்பு:

செப்டெம்பர் மாதத்தின் (2019 ஆண்டு) முதல் வாரம் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் - மரபு பாதுகாவலர்கள் வாட்சப் குழுமத்தில் தொல்லியல் அறிஞர் பேராசிரியர் முனைவர் சு. ராஜவேலு அவர்கள் தமிழியின் பழமை குறித்து குழும உறுப்பினர்களின் கேள்விகளுக்குக் கொடுத்த விளக்கக் கருத்துகளின் தொகுப்பு.

சுபாஷிணி:

நமது அண்மைய காணொளிப்பதிவு வெளியீடுகளில் டாக்டர் ராஜவேலுவின் பேட்டி, டாக்டர் ராஜனின் பேட்டி ஆகியன தமிழ் நிலம் சமணம் வருவதற்கு முன்பே இலக்கிய வளம் நிறைந்து இருந்தது என்பதை விளக்குகின்றன.

I.

மண்ணின் குரல்: ஜூலை 2019 - அகழ்வாய்வுகளின் வழி தமிழ் எழுத்துக்களின் தொன்மையை அறிவோம் - பகுதி 1: https://youtu.be/H_RIo4z7-ug

தமிழி எழுத்துக்கள் வட இந்தியாவில் தோன்றிய அசோகன் பிராமியிலிருந்து பின் மருவி கி.மு.2ம் நூற்றாண்டு வாக்கில் சமண முனிவர்களால் தமிழகத்திற்குக் கொண்டுவரப்பட்டவை என்ற கூற்று தமிழ் கல்வெட்டுக்கள் மற்றும் எழுத்துரு ஆய்வுலகில் நிலவி வந்தது. அது இன்றும் தொடர்கின்றது.

குறிப்பிடத்தக்க சில ஆய்வுகள் தமிழக நிலப்பரப்பில் அதாவது கொடுமணல், அரிக்கமேடு, பொருந்தல், ஆதிச்சநல்லூர், அழகன்குளம், மற்றும் மிக அண்மையில் கீழடி எனப் பல பகுதிகளில் நிகழ்த்தப்பட்டு, தமிழி

எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட பானை ஓடுகள் கண்டெடுக்கப்பட்டு அவை அறிவியல் கரிம ஆய்வின் படி காலத்தால் கி.மு. 7, கி.மு. 6 என காலக்கணக்கிடப்பட்டாலும் கூட, இச்செய்தி பரவலாகச் சென்றடையாது இருப்பது வேதனையே. கடந்த 30 ஆண்டுகளாகக் கடல்சார் மற்றும் தொல்லியல் ஆய்வுகளைத் தமிழகத்தில் நடத்தி வரும் டாக்டர்.ராஜவேலு அவர்கள் இப்பேட்டியில் அகழ்வாய்வு சான்றுகளைக் குறிப்பிடுகின்றார். தமிழி எழுத்துரு அசோகன் பிராமியிலிருந்து கிளைத்து வளர்ந்த எழுத்துரு அல்ல, மாறாக அது தமிழ் நிலத்திலேயே தமிழர்களால் உருவாக்கப்பட்ட எழுத்துரு எனத் தமது அகழ்வாராய்ச்சி ஆய்வுத்தகவல்களுடன் விவரிக்கின்றார்.

கூடுதலாக இப்பதிவில், களப்பிரர்களுக்குப் பின் தமிழக நிலப்பரப்பில் ஆட்சி செய்த பல்லவர்கள் வடக்கிலிருந்து வந்தமையாலும், வடமொழியை ஆட்சி மொழியாகத் தமிழக நிலப்பரப்பில் ஏற்படுத்திய போது அம்மொழிக்கான எழுத்துருவாகப் பல்லவ கிரந்தம் என்ற எழுத்துருவை உருவாக்கிய செய்தியையும் பகிர்கின்றார்.

II.

மண்ணின் குரல்: ஜூலை 2019 - அகழ்வாய்வுகளின் வழி தமிழ் எழுத்துக்களின் தொன்மையை அறிவோம் - பகுதி 2: https://youtu.be/gznNu5jIZQE

தமிழ் மொழியின் பண்டைய எழுத்தான தமிழி (தமிழ் பிராமி) கல்வெட்டுக்களிலும் மக்களின் புழக்கத்திலும் பயன்பாட்டிலும் இருந்திருக்கின்றன என்பது நமக்கு தொல்லியல் அகழாய்வுகளில் கிடைக்கின்ற சான்றுகளாக அமைகின்றன. கி.மு.700 வாக்கிலேயே பொதுமக்களும் தங்களது பானை ஓடுகளில் பொறித்து வைக்கக்கூடிய வகையில் இந்த எழுத்து மக்கள் பயன்பாட்டில் இருந்திருக்கின்ற சூழலில் இந்த எழுத்துரு அதற்கும் சில நூற்றாண்டுகளுக்கு முன்னரே உருவாகி செம்மை பெற்று வளர்ந்திருக்க வேண்டும் எனக் கருதலாம்.

இறந்த வீரனுக்காக மக்களால் எழுப்பப்படுபவை நடுகற்கள். நடுகற்களிலும் தமிழி எழுத்துக்கள் இடம்பெற்றுள்ளமையை மிக அண்மைய கண்டுபிடிப்பைக் குறிப்பிட்டு இந்தப் பதிவு பேசுகிறது. இதுகாறும் கிடைத்துள்ள தமிழி கல்வெட்டுக்கள் சமயம் சேராதவையாக இருப்பதும் இவ்வகை கல்வெட்டுக்கள் பொதுவாக யாரோ ஒருவர் யாருக்கோ வழங்கிய நன்கொடை, சேவை என்பதைச் சுட்டுவதாகவே அமைகின்றது என்றும், கி.பி. 4ம் நூற்றாண்டிற்குப் பிறகே, பல்லவ ஆட்சிக் காலம் தொடக்கமே சமய சார்புடனான கல்வெட்டுக்கள் பெருகின என்றும் இப்பதிவில் டாக்டர்.ராஜவேலு குறிப்பிடுகின்றார்.

பெரும்பாலோர் ஆய்வு நூல்கள் எத்தனையோ வந்திருந்தாலும் அவற்றை வாங்கி வாசிப்பதில்லை. கேள்விப்படும் செய்திகளையே நம்பி அதனையே உண்மை எனத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருப்பர். ஆனால் நாம் தொடர்ச்சியாக ஆய்வுத் தகவல்களை வழங்குவோம்.

சு.ராஜவேலு:

சிக்காகோவில் பேசிய எனது கட்டுரையின் சுருக்கத்தை மீண்டும் வெளியிட்டமைக்கு நன்றி சுபா.

தமிழருக்குச் சொந்த அறிவு இல்லை ... அடுத்தவர் வந்துதான் நமக்கு எழுத்தறிவை, கல்வி அறிவை, கலைகளை இலக்கியங்களை உருவாக்கினர் என நம்பிக் கொண்டிருப்பவர்கள் நாம் எத்தனை அறிவியல் சான்றுகள் மூலம் கருத்துக்களைச் சொன்னாலும் ஏற்க மாட்டார்கள். தமிழன் கி.மு. 700 அளவில் எழுத்துக்களைத் தரப் படுத்தி அதை கி.மு. 400 அளவில் இலங்கைக்கும், வட இந்தியர்களுக்கும் கொடையாக அளித்தான். அறிவியல் காலக்கணிப்பு இது.

பிற இந்திய மொழிகளையும் வடமொழி கல்வெட்டுகளையும் நன்கறிந்த இந்தியத் தொல்லியல் துறையின் கல்வெட்டு அறிஞர்கள்

கே.வி.இரமேஷ் சம்பத், பி.ஆர் சீனிவாசன் (இவர்கள் அனைவருமே தலை சிறந்த இந்தியக் கல்வெட்டு அறிஞர்கள்) போன்றோர் சமஸ்கிருத பண்டிதர்கள். இவர்கள் தமிழே காலத்தால் முற்பட்ட எழுத்துக்கள் கொண்டது எனச் சொன்னவர்கள். நான் 25 ஆண்டுகளுக்கு முன்பே அதற்கான சான்றுகளைப் பட்டியல் இட்டுள்ளேன். இன்னும் நாம் நாகசாமி யையும், ஐராவதத்தையும் தூக்கிப் பிடித்துக் கொண்டிருக்கிறோம்.

நான் சாதாரணமான கேள்விகளை வைக்கின்றேன்...
தமிழ் இலக்கியங்களையும் இலக்கணங்களையும் எழுத்துக்களையும் சமணர் உருவாக்கினர் என்றால் அவர்கள் பற்றிய குறிப்புகள் ஏன் அகத்திலும் புறத்திலும் இல்லை? மாறாக அவர்களின் சமயத்திற்கு முற்றிலும் எதிரான காதலும் வீரமும் மட்டுமே கருப்பொருளாகச் சங்க இலக்கியங்களில் பேசப் படுகிறதே. இதற்கு விளக்கம் அளிக்க இயலுமா? கி.மு. 700 இல் சமணமே வட இந்தியாவில் இல்லை. சமணர் கி.பி. 300 அளவில்தான் தமிழகத்தில் தொண்டை மண்டலத்திற்கு வருகின்றனர். தமிழி எழுத்துக்கள் அறிவுசார்ந்த தமிழ் மக்களால் உருவாக்கப்பட்ட எழுத்துக்கள். அதனைச் சமணர்கள், பௌத்தர்கள் வணிகர்கள் வழியாக அறிந்து அவர்களுடைய மொழிக்கு ஏற்ப வர்கங்களை உருவாக்கினர். தமிழின் அடிப்படை உயிர் எழுத்துக்கள் மற்றும் மெய்யெழுத்துக்களை அப்படியே வைத்துக் கொள்கின்றனர்.

கி.மு. 700- 600 இல் அடிப்படையான உயிர் எழுத்துக்கள் தமிழில் அ, ஆ, இ, ஈ, உ, ஊ, ஏ, ஓ ஆகிய எட்டும். மெய் எழுத்துக்கள் 18 ம் புள்ளி இல்லாமல். கி.மு. 400 இல் இலங்கையில் இவ்வெழுத்துகள் வர்கங்களை கொண்டு மாற்றம் பெறுகின்றன. இதே கால கட்டத்தில் ஆந்திராவில் பட்டிபொருலு (Bhattiprolu) இல் இருந்த பௌத்த துறவிகளும் இந்த மாற்றங்களைச் செய்கின்றனர். வட இந்தியாவில் 5 கல்வெட்டுகள் இதே கால கட்டங்களில் வெளியிடப் பட்டன. இவற்றைப் பற்றி அரிய Early South Indian Palaeography by T. V. Mahalingam; Indian Palaeography by R. B. Pandey; Indian Epigraphy by D. C. Sircar; Indian paleography by G. Buhler போன்றோர் நூல்கள் பார்க்கவும்.

1. மகன்தான் கல்வெட்டு
2. பிப்ரவா பேழை கல்வெட்டு
3. கொசுண்டி கல்வெட்டு
4. ஈரன் காசு பொறிப்பு

ஆகியவற்றின் காலம் கி.மு. 400. இந்த கல்வெட்டுகளில் கூட்டெழுத்து முறை இல்லை. இன்றைய இந்திய எழுத்துக்கள் இந்த கூட்டெழுத்து முறையில் உள்ளவை. இதனை உருவாக்கியவர் கி.மு. 300 சார்ந்த அசோகர். அல்லாது மெய், உயிர்மெய் இரண்டுமே ஒரே குறியீடு உடையவை என்பது நம் அனைவருக்கும் தெரியும். எ.கா. அக்கம் என்ற சொல். இதனைத் தொடக்க நிலையில் தமிழர்கள் மெய் எழுத்துக்கள் புள்ளி பெறாமல் எழுதினர். மேற்குறித்த வட இந்திய, பட்டிபொருலு கல்வெட்டுகள் அனைத்தும் இவ்வாறே எழுதப் பட்டன. அதாவது 'அககம' என்ற குறியீடுகளைப் படிப்பவர்கள் அதன் பொருள் உணர்ந்து 'அக்கம்' எனப் படிக்க வேண்டும். இதை உணர்ந்த அசோகன் கூட்டெழுத்து முறையைத் தனது கல்வெட்டுகளில் புகுத்துகின்றான். அதாவது க க வை மேலும் கீழும், அல்லது பக்கங்களில் சேர்த்து எழுதும் முறை.

இதனை கி.மு. 300 இல் அறிந்த தமிழர்கள் கூட்டெழுத்து முறையை முதலில் முயற்சி செய்கின்றனர். இம்முயற்சி கொடுமணலில் நடைபெறுகின்றது. கொடுமணல் வணிக நகரம். இங்கு மட்டும் 40 பானை ஓடுகளில் எழுதி முயன்றுள்ளனர். இங்கு தான் வட இந்திய வணிகர்கள் தமிழர் எழுத்துக்களை கற்று வட இந்தியாவிற்குத் தெரிவிக்கின்றனர். ஆனால் தமிழர்களுக்கு இந்த கூட்டெழுத்து முறை ஒத்து வரவில்லை.

இதனால் தொல்காப்பியர் புள்ளி முறையைப் புகுத்தி தமிழைச் சீர் செய்தார். 'மெய்யின் இயற்கை புள்ளி யொடு நிலையல் எகரமும் ஒகரமும் அவ்விதம் அற்றே', தொல்காப்பியம் கி.மு. 3 ஆம் நூற்றாண்டு. எ/ஏ மற்றும் ஒ/ஓ ஆகியவற்றுக்கும் ஒரே குறியீடு. எ பக்கத்தில் ஒரு புள்ளி வைத்தால் மாத்திரை குறையும். அவ்வாறேதான் ஒ / ஓ வும். கெட்டான்/ கெட்டான் - கெ பக்கத்தில் புள்ளி வைத்தால் அது கெட்டான். புள்ளி இல்லை

என்றால் கேட்டான். புரிந்திருக்கும். இந்த கே இரட்டைச் சுழி வீரமாமுனிவர் காலத்தில் தமிழில் புகுத்தப் பட்டது. ஓலைகளில் எழுதப் படும் இலக்கியங்கள் 50 ஆண்டுகளுக்கு ஒருமுறை படி எடுக்கும் பொழுது அவ்வவ் காலங்களில் இடைச்செருகல்கள் ஏற்படும். அவ்வாறே 'அய்', 'அவ் என்பவையும். 'ஐ' கி.பி 4 ஆம் நூற்றாண்டு சமணரால் புகுத்தப் பட்டது. 'ஔ' வீரமாமுனிவர் காலத்தில் வருகிறது. ஆயுத எழுத்தும் அவ்வாறுதான்.

படுக்கை கோடுகளையும் செங்குத்து கோடுகளையும் வைத்துத் தான் தமிழி கோடுகள் உருவாக்கப் படுகின்றன. மெய்யெழுத்துகளைச் சுட்ட முதலில் புள்ளிகள் பயன் படுத்தப் படவில்லை. பாமர தமிழன், ஆடுமாடு மேய்த்த வேளாண்மை செய்த தமிழன், கீறல் குறியீடுகளிலிருந்து தெரிவு செய்த எழுத்துகளை உருவாக்குகின்றான். தமிழன் அனைத்தையும் சோதனை செய்து பார்க்கிறான். நான் விரிவாக இதைச் சொல்லவில்லை. மூன்று நான்கு படிநிலைகள் இவற்றின் வளர்ச்சி நிலையில் உள்ளன. முதலில் உயிர் ஏறிய மெய் எ.கா: க+அ- க - கடலன். குறில்/ நெடில் வேறுபாடுகள் இல்லாமை 'க' நெடில் குறியீடு 'க' குறில் குறியீடு ஆகவும் படிக்கப் பட்டது. நம்மிடம் இருந்து எழுத்துகள் வட இந்தியா சென்றமையால் 'ஏ' குறியீடு 'ஓ' குறியீடுகளை மாற்றாமல் வைத்தனர் அவர்கள். நம்ம ஆள் அறிவியல் பூர்வமாகச் சிந்தித்தான் இன்னும் சொல்லப் போனால் 'ஆ' குறியீடு முதல் நிலையில் இல்லை.

முதலில் மெய் உயிர்மெய் குறில் நெடில் வேறுபாடுகள் காட்டப்படவில்லை. ஈகார குறியீடு இகரமாக வைக்கப்பட்டது. கி.மு. 3 ஆம் நூற்றாண்டளவில் சூத்திரதாரி தொல்காப்பியர் இவற்றைச் சீர் செய்கின்றார். குறில்களின் ஒலியையும் மெய்யையும் சுட்ட புள்ளியை அறிமுகம் செய்கிறார். மாத்திரை குறைக்கப்படுகிறது. எ/ஒ அவ்வாறே. மூன்று புள்ளிகள் இகரமாகிறது. இகரமாக இதுவரை இருந்த குறியீடு ஈகாரமாகிறது. இவை எல்லாம் இன்றைய கணினி வளர்ச்சியைப் போன்றது. இவற்றை எல்லாம் உங்களுக்குத் தனியாக வகுப்பறையில் தான் புரிய வைக்க முடியும். வெறும்

தமிழியை மட்டுமே கற்றலாகாது. இக்கால கட்ட இலங்கை பிராமி, வட இந்தியப் பிராமி ஆகியவற்றை ஒப்பு நோக்க வேண்டும்.

நம்மவர் செய்யும் தவறு ஒப்பு நோக்காதது. வட இந்தியப் பிராமியை அறியாது தமிழியின் தொன்மையை வரையறை செய்தால், பிறகு பேரறிஞர் சொல்லி விட்டார் என அரைத்த மாவையே அரைக்க வேண்டியது தான். 99 விழுக்காடு கல்வெட்டு ஆய்வாளர்களே இந்த தவறுகளைச் செய்து வருகின்றனர். அறிவியல் காலக்கணிப்பு கணிப்பு கொடுப்பதில் பொருந்தல் சான்று வந்த பிறகும் கூட, "ஐராவதம் சொல்லி விட்டார், நாகசாமி சொல்லிவிட்டார், இவர் என்ன சொல்வது?", என்பர். இவர்களை விட இந்தியக் கல்வெட்டுகளில் ஊறித்திளைத்த பி. ஆர். சீனிவாசன், கே.வி. இரமேஷ் சம்பத் போன்றோர்களையும், என்னையும் சேர்த்துத்தான் ஏற்கமாட்டார்கள்.

ஐராவதம் ஒருவேளை இன்று இருந்திருந்தால் ஏற்று இருப்பார். என்னுடைய கருத்தையும் வாசிப்பையும் நேசித்தவர் அவர். அரிக்கமேடு வாசிப்பில் தவறாக ஒரு பானையில் 'வளவன்' எனப் படித்து அவர் ஆசிரியராக இருந்த தினமணியில் சோழர் பட்டப்பெயர் பொறித்த மட்கலன் என்ற தலைப்பில் வெளியிட்டார். அந்த வாசிப்பு தவறு என்றேன். இருவருமே புதுச்சேரி சென்றோம். நான் அதனை 'குளவாய்' எனப் படித்திருந்தேன். இறுதியில் தான் படித்தது தவறு எனத் திருத்தி 'விமலா பக்லி' நூலில் அதனை எழுதினார். தரவுகள் கிடைக்கக் கிடைக்க வெளிச்சம் வரும். அவரின் பத்ரபாகு சமண கோட்பாட்டு அடிப்படையில் சமணர்களே தமிழர்களுக்கு கி.மு.200 இல் எழுத்துக்களை அறிமுகம் செய்தனர் என்றார். ஆனால் அறிவியல் காலக்கணிப்பு கி.மு. 530 என வந்துள்ளது. இந்த காலகட்டத்தில் சமணம் வட இந்தியாவிலே பெரிதாகப் பேசப்படவில்லை. பத்ரபாகு கர்நாடக வருகை கி.மு. 400 (மேலும் அதுவுமே ஒரு புராண செய்தி). அப்படி எனில் கி.மு. 530 சாத்தியமா? தமிழனே இந்தியர்களுக்கு எழுத்தறிவைத் தந்தவன். வட இந்தியச் சமணரும் இல்லை, பௌத்தரும்

இல்லை. அவர்கள் நம்மிடம் பெற்று அவர்கள் மொழிக்கு ஏற்ப மேலும் குறியீடுகளை உருவாக்கினர். இது கி.மு. 400 இல் நடந்தது.

இலக்கிய தரவுகள் பெரும்பாலும் 50 ஆண்டுகளுக்கு ஒருமுறை ஓலைகளில் மீள் பதிப்பு செய்யப்படுபவை. ஒரு கால கட்டத்தில் பதிப்பிப்பவர்கள் அந்தந்த காலகட்டத்திற்கு ஏற்ப மாற்றம் செய்து பதிப்பிப்பர். உயிர் எழுத்து 12 என்று உள்ளது. ஆனால் உண்மையில் 'ஔ' இல்லை 13 வதாக 'ஃ' இல்லை. 'ஐ' க்கு பதில் 400 வரை 'அய்' என எழுதினர். 'ஔ' க்கு பதில் 'அவ்' என எழுதினர். பிற்கால வட இந்தியத் தாக்கம் 'ஐ' திருநாதர் குன்று கல்வெட்டில் வருகிறது. இது சமணர் கல்வெட்டு. முதல் சமணக் கல்வெட்டு கடவுள் வாழ்த்துடன் 'நமோஸ்து' எனப் பறையன் பட்டு கல்வெட்டில் வருகிறது. இதுவும் சமணக் கல்வெட்டு இரண்டுமே தொண்டை மண்டலம். மதுரை சுற்றி உள்ள தமிழி கல்வெட்டுகளில் எவற்றிலும் சமயம் சார்ந்த சொற்களோ குறியீடுகளோ இல்லை. அசோகர் கல்வெட்டு கடவுள் வாழ்த்துடன் 'தேவானாம்பிய பியதஸி' எனத் தான் தொடங்கும். முதலில் கி.பி. 3 ஆம் நூற்றாண்டு தொண்டை மண்டலம் வந்த சமணர்கள், படிப்படியாகத் தென் தமிழகம் சென்று ஏற்கனவே ஊரின் வெளியிலிருந்த குகைப்பகுதியில் தங்கி அருகில் வட்டெழுத்து கல்வெட்டு களையும் சமண திருமேனி களையும் வெட்டுகின்றனர். தமிழிக்கும் இவர்களுக்கும் எவ்வித தொடர்பும் இல்லை. இந்த படுக்கைகள் பெருங்கற்கால ஈமச்சின்னங்களில் ஒருவகை. சித்தன்னவாசல் மலைப்பகுதியில் ஈமச் சின்னங்கள் அகழாய்வு செய்யப்பட்டதை இப்போதும் பார்க்கலாம்.

மதுரையைச் சுற்றி உள்ள குகைகளில் உள்ள படுக்கைகள் பெருங்கற்கால ஈமப்படுக்கைகள். இறந்தவர்களுக்காக எடுக்கப்பட்ட நினைவுச்சின்னங்கள். நடுகல் போன்றவை. இவற்றை அதிட்டானம்/ பாழி/பாளி எனக் குறித்தனர். இந்த பாழியைத் தான் சமண பள்ளி என ஐராவதம் குறிப்பிட்டார். பாழி என்பது இறந்தவர்களுக்கு எடுக்கப்படும் நினைவுக் கல் என தாதப்பட்டி நடுகல் சுட்டுகிறது. இதிலிருந்து தான் பள்ளிப்படை கோயில்கள் வருகின்றன. அமணன் என்றால் முற்றும்

துறந்தவர் என்பது பொருள். அசோகனுடைய கல்வெட்டில் சிரமண என வருகிறது. இது துறவிகளைக் குறிக்கும் சொல். தமிழன் துறவி ஆகக் கூடாதா? சமணர்கள் துணியைத் துறந்து அம்மணமாக மாறியதால் இது பின்னர் இவர்களை மட்டுமே குறித்ததானது. உறை என்பது இறந்ததைச்சொல்கிறது. உறைந்து விட்டவர், தெய்வமானவர். அவருக்காக எடுக்கப்பட்ட நினைவுப் படுக்கை, உறைதல், Fossilized. அதாவது, இது பால் உறைந்து விட்டது என்பது போன்று.

சந்திரகுப்தர் காலத்தில் வந்த மெகஸ்தனிஸ் தனது இண்டிகாவில்,"சந்திரகுப்தர் அவையில் எவருக்கும் எழுத்தறிவில்லை" எனக் குறிப்பிடுவது உண்மை. இதனை அசோகனுடைய கல்வெட்டிலும் பார்க்கலாம். தான் வெளியிட்ட கல்வெட்டுகளைப் படித்து மக்களுக்குச் சொல்வதற்குத் தர்ம மகா மாத்திரர்களையும் அவர் நியமித்தார். பெரும்பான்மை மக்கள் எழுத்தறிவு அற்றவர்தான் என்பது பொருள். அசோகரால் வெளியிடப்பட்டது அரச கல்வெட்டுகள், royal inscriptions. தமிழகத்தில் உள்ளவை மக்களால் கீறப்பட்ட மக்கள் எழுத்துகள், people script. தமிழி மக்கள் எழுத்து. அசோகன் பிராமி அரச அலுவல் எழுத்து.

அவ்வாறாகக் கீறப்பட்ட தமிழ் எழுத்துகள் தமிழி. தமிழி மக்களால் உருவாக்கப்பட்டது. சுமார் கி.மு. 3 ஆம் நூற்றாண்டு இது தரப்படுத்தப்பட்டது. ஆரம்பக் கட்டம் ஒரு சோதனை நிலை. 'ஐ' முதன் முதலாக கி.பி. 4 ஆம் நூற்றாண்டில் வருகிறது, திருநாதர்குன்று சமணர் கல்வெட்டில். அசோகன் எழுத்துக்கள் என்பது அரச அலுவல் எழுத்து, ராயல் ஸ்கிரிப்ட் ஆகும். அவர் பிராமி மட்டும் பயன்படுத்தவில்லை, க்ரோஷ்டி, அராமைக் மற்றும் கிரேக்க (Kharosthi Aramaic and Greek) மொழியையும் பயன்படுத்தினார். அவர் அனைத்து வட்டார மொழி எழுத்துக்களையும் கடன் வாங்கினார். அசோகன் எழுத்துக்களை பட்டிபொருலுவின் திறமையான புத்த பிக்குகள் உருவாக்கியுள்ளனர். அவர்கள் அடிப்படை தமிழ் எழுத்துக்களைக் கடன் வாங்கி, பிராகிருத மொழிக்கு ஏற்றவாறு வர்க எழுத்துக்களை உருவாக்கினர். நம்முடைய தமிழியின் அடிப்படை கி.மு. 7

அல்லது 6 ஆம் நூற்றாண்டு முதல் தமிழியில் படிப்படியாக வளர்ச்சியுறுவதை ஒருவர் காணலாம். தமிழி குறித்து நான் வகுப்பு அல்லது உரை நிகழ்த்தினால் வாருங்கள் சான்றுகளுடன் விளக்குகின்றேன். புள்ளி மூன்றாம் நூற்றாண்டில் தானே வருகிறது. அதற்கும் முன்பாகவே தமிழி அடிப்படையில் பட்டிபொருலு பொளத்த துறவிகள் பாகத மொழிக்கு ஏற்ப எழுத்துக்களை உருவாக்கி விட்டனர் அசோகன் காலத்தில் கூட்டெழுத்து முறை. நாம் புள்ளி வைக்க ஆரம்பிக்கின்றோம். படிப்படியாக வளர்ச்சி.

இன்னொன்று, கொடுமணல் அகழாய்வு தமிழகத்தின் தலைசிறந்த அகழாய்வு. இங்கு மட்டுமே 1000க்கும் மேற்பட்ட பானை ஓடுகளில் பெயர் பொறித்த எழுத்துக்கள் கிடைத்துள்ளன. தமிழகத்தில் இதுவரை 175 இடங்களில் அகழாய்வுகள் நடந்துள்ளன. இவற்றில் 25க்கும் மேற்பட்ட இடங்களில் மக்கள் பயன் படுத்திய மட்கலங்களில் தமிழி எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட ஆட்பெயர்கள் கிடைக்கின்றன. வட இந்தியாவில் ராமாயணம் மகாபாரதம் சொல்கின்ற ஊர்களில் அகழாய்வுகள் நடந்துள்ளன. எண்ணிக்கையும் 700க்கு மேல். ஆனால், ஒரு இடத்தில் கூட எழுத்துப் பொறித்த மட்கலன் கிடைக்கவில்லை. இதனால் தமிழி மக்கள் எழுத்து என்பதும் அசோகன் பிராமி அரச அலுவல் எழுத்து என்பதும் உறுதியாகிறது.

இன்னொன்று, கொடுமணல் வணிக நகரம். இங்கு வந்தவர் தங்கள் பெயர்களை தமிழியில் பிராகிருத மொழியை எழுதி உள்ளனர். எ.கா. நிகம (Nigama). வட இந்தியாவில் இந்த வணிகக் குழுவின் பெயர் அசோகன் காலத்திற்குப் பிறகு வர்க்க எழுத்தில் தான் எழுதப்படுகிறது. தமிழகத்தில் அவர்களது பிராகிருத பெயர் கிடைப்பதாலேயே பிராகிருதம் மிகுந்துள்ளதாகத் தவறான ஒரு விழுக்காட்டை ஐராவதம் தருகின்றார். வினைச்சொற்கள் கிடைத்திருப்பின் இதனை ஏற்கலாம். என்னுடைய பெயர் ராஜவேல் இரண்டும் கலந்த கலவை அதற்காக நான் சமஸ்கிருதம் அறிந்த பண்டிதன் ஆகிவிடமாட்டேன். வந்த வடநாட்டு வணிகர்கள் தமிழி எழுத்துக்களை கற்று எழுதிப் பழகி உள்ளனர். சென்ற ஆண்டு நடந்த

அகழாய்வில் தமிழி அகர வரிசையில் எழுதப் பட்ட பானை ஓடு கிடைத்துள்ளது.  அறிவியல் காலக்கணிப்பிற்கு அனுப்பப்பட்ட சான்றுவகை, ஸ்பெசிமன், குழியின் கீழிருந்து இரண்டு அடுக்குக்கு மேலிருந்தது அனுப்பப்பட்டது. அதற்கும் கீழ் இரண்டு அடுக்கு மண்ணுக்குள் உள்ளன. கீழ் நிலையில் கீறல் குறியீடுகள் கிடைக்கின்றன.  அடுத்து தமிழி . அதற்கடுத்த நிலை  4 பிராகிருத எழுத்துக்கள் உள்ள தமிழி மிகுந்த அடுக்கு இது. இதன் காலம் தான் கி.மு.530. அரிக்கமேடு, அழகன் குளம், பூம்புகார் மற்றும் கொடுமணல் போன்ற வணிக நகரங்களில் மட்டுமே இவை கிடைத்துள்ளன. dha, SA, SAha, bha ஆகிய எழுத்துகள் இங்கு கிடைத்துள்ளன. ஆக, பிராகிருதமே தமிழர் கொடுத்த கொடையாக இருக்க வாய்ப்பு உண்டு.

## 5. தொல் தமிழகத்து வழிபாடுகளில் இயற்கைப் பொருட்கள்- ஒரு ஒப்பீடு

*— முனைவர்.ச.கண்மணி கணேசன்*

முன்னுரை:

பண்டைத் தமிழரிடம் நிலவிய வழிபாடுகளில் இடம் பெற்ற இயற்கைப் பொருட்கள் எவை எவை? வழிபாட்டுக்கு ஆதாரமாக அமைந்த நம்பிக்கைகளும், காரணங்களும் என்னென்ன? எந்த முறையில் வழிபாடு நடந்தது ஆகியவற்றைக் கண்டறிந்து ஒப்பிடுவதே இக்கட்டுரையின் நோக்கம் ஆகும். காலத்தால் முற்பட்டனவாகக் காணப்படும் இயற்கை வழிபாடுகளின் எச்சங்களை இன்றும் நம்மால் இந்து சமயத்தில் அடையாளம் காண இயல்கிறது. எடுத்துக்காட்டாகத் தலமரங்களைக் கூறலாம். பறவை வழிபாடுகளும் இனம் தெரிகின்றன. இதனால் தமிழக வரலாற்றின் தொடக்க காலத்தில் நிலவிய இயற்கை வழிபாடு பற்றிய தெளிவான அறிவு தேவைப்படுகிறது.

எட்டுத்தொகையிலும் பத்துப்பாட்டிலும் இடம் பெறும் வழிபாடுகள் சுட்டும் இயற்கைப்பொருட்கள் மட்டுமே ஆய்வுக்குரிய எல்லையாக வரையறுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. காலத்தால் முற்பட்டனவாகக் கிடைத்திருக்கும் தொகை நூற்சான்றுகளே முதன்மை ஆதாரங்களாக அமைகின்றன. திருக்குறள், இரட்டைக் காப்பியங்கள், இன்றைய ஊடகச் செய்திகள், ஆய்வாளர் கட்டுரைகள் முதலியன இரண்டாம்நிலைத் தரவுகளைத் தருகின்றன. இயற்கைப் பொருட்களைத் தொகுக்குங்கால் மரபு வழிப்பட்ட பகுப்புமுறை ஆய்வு பின்பற்றப்படுகிறது. காக்கை, கூகை பற்றிய நம்பிக்கைகளும், வழிபாட்டு முறைகளும் ஒப்பியல்முறையில் பொருத்திக் காட்டப்படுகின்றன

[1] தொல்தமிழர் சமயக் கொள்கை:

இயற்கை வழிபாட்டுடன் மாறுபட்ட உருவவழிபாட்டை எள்ளுவது போன்ற தொகைநூற் பாடல்கள் உள்ளன.

"தோற்றம் அல்லது நோய்க்கு மருந்தாகா
வேற்றுப் பெருந்தெய்வம் பலவுடன் வாழ்த்தி"- (குறுந்.- 263)

என்னும் தலைவியின் சலிப்பான சொற்கள் தொல்தமிழகத்து மக்கள் போற்றியது இயற்கைப் பொருட்களின் வழிபாடு என்ற கொள்கையைத்தெளிவுறுத்துகின்றன.

"கண்ணிற் காண நண்ணுவழி இருந்தும்
கடவுள் நண்ணிய பாலோர் போல"- (குறுந்.- 203)

என்ற பாடலடிகள் வருணத்தார் வருகையால் தமிழகத்து இயற்கை வழிபாடு மாற்றம் அடைந்ததென வெளிப்படையாகப் பேசுகின்றன.

[2] வழிபட்ட இயற்கைப்பொருட்கள்:

தொன்மையான ஆல், கடம்பு, வேம்பு முதலிய மரங்களும்; நிழல் தருமளவிற்கு உயர்ந்த கள்ளி மரமும், நடுகல் வழிபாட்டிற்கு நிழல் தந்த ஓமை மரமும் பொது மக்களால் படையலிட்டு வழிபடப்பட்டன. அம்மரங்களில் தெய்வங்கள் உறைவதாக நம்பினர். மலை உச்சியும், அம்மலைகளில் இருந்த சுனைகளும், காடும், கடல் முதலிய பிற நீர்த் துறைகளும், மணம் பொருந்திய மலர்களும், அரவு,முதலை, ஆளி முதலிய விலங்குகளும், சுறவின் கோடும், பூமியும், நிலவும் தெய்வத் தன்மை பொருந்தியன எனக் கருதப்பட்டன.

மரங்கள்:

"எம்மூர் வாயில் ஒண்டுறைத் தடைஇய
கடவுள் முதுமரத்து"- (நற்.- 83)

என்ற பாடல்; ஊரின் வாயிலில் நீர்த்துறையின் கரையில் இருந்த முதுமரத்தைக் காட்சிப்படுத்துகிறது. அம்மரத்தைக் 'கடவுள்மரம்' என்று தலைவி அழைப்பது நோக்கத்தக்கது. இத்தகு மரங்களைக் 'குற்றமில்லாத மரம்' எனும் பொருளில் 'மாசில் மரம்' என்றனர். (நற்.- 281)

கறவைகளின் முதுகைத் தீண்டுமளவு விழுதுகள் தாழ்ந்த ஆலமரத்தைக் "கடவுள்ஆலம்" என்று சுட்டுவது நோக்கத்தக்கது (நற்.-343). இதே தொடர் புறம்- 199ம் பாடலிலும் பயின்று வருகிறது. விழுதுகளே மதில் போன்று அமைந்து பலி இடும் இட்டிகையுடன் அமைந்த ஆலமரத்தை அகம்-287 விரித்து வருணிக்கிறது.

ஏறு தழுவல் நிகழ்ச்சியின் போது காளைகள் வீரர்களின் குடலைக் குத்தி எடுத்து ஓடிய காட்சிக்கு உவமை கூறும் முல்லைக்கலிப்பாடல்,

"ஆலும் கடம்பும் அணிமார் விலங்கிட்ட
மாலை போல் தூங்கும்"- (பா- 106)

என; ஆலமரத்திலும், கடம்ப மரத்திலும் மக்கள் சுற்றிக் கட்டியிருந்த மாலையைக் காட்சிப் படுத்துகிறது. அம்மரங்களை மக்கள் மாலையிட்டு வழிபட்டமை பெறப்படுகிறது.

குறிஞ்சிப்பாட்டில் யானைக்கு அஞ்சித் தலைவனைச் சூழ்ந்து தம் கைகளைக் கோத்த தலைவியும் தோழியும் பற்றிப் புனையும் கபிலர்,

"திணிநிலைக் கடம்பின் திரளரை வளைஇய
துணையறை மாலையிற் கைபிணி" - (குறிஞ்சிப்பாட்டு- அடி.- 176-177)

விடாதவர்களாக அவர்களைப் பற்றி வருணிக்கிறார். இங்கே இரண்டு மாலைகளைச் சேர்த்து இட்ட பருத்த அடிமரம் பற்றிய 'திரளரை' என்ற தொடர் அம்மரம் முதிய மரம் என்னும் பொருளைக் குறிப்பாகத் தருகிறது.

முதிய வேப்பமரத்தில் தெய்வம் பொருந்தி இருப்பதாக நம்பியமை;

"தெய்வம் சேர்ந்த பராரை வேம்பு"- (அகம்.- 309) என்ற பாடலடி மூலம் புலனாகிறது. பருத்த அரை என்பதால் முதுமரம் என்பது தெளிவு.

கள்ளிமர நிழலில் தெய்வ வழிபாடு நிகழ்ந்தமையை;

"கள்ளி நீழற் கடவுள் வாழ்த்தி"- (புறம்.- 260) எனும் தொடர் குறிக்கிறது. நிழல் தருமளவு உயர்ந்த கள்ளி முதுமரமே எனலாம்.

வீரமரணம் அடைந்தவனின் நடுகல் ஓமைமர நிழலில் இருந்தமையால்;

"சூர்முதல் இருந்த ஓமையம் புறவு"- (அகம்.- 297) தெய்வத்தன்மை பெற்றது.

மலை உச்சி, காடு, நீர்த்துறைகள்:

மலையுச்சியைக் கடவுள் உறையும் இடம் எனக் கொண்ட தொல்தமிழகக் கொள்கையை;

"அணங்குடை நெடுங்கோட்டு"- (நற்.- 288& அகம்- 272),

"அணங்குடை நெடுவரை உச்சி"- (அகம்- 22),

"சூர்புகல் அடுக்கத்து"- (அகம்.- 359),

"பிறங்குமலை மீமிசைக் கடவுள்"- (குறிஞ்சிப்பாட்டு- அடி.- 208),

"கடவுள் காக்கும் உயர்சிமைப் பெருங்கல்"- (புறம்- 158),

"கடவுள் ஓங்குவரை"- (நற்.- 165)

என்று; பலரும் பாடியிருப்பது காட்டுகிறது.

காட்டில் தெய்வம் உறைவதாக நம்பி வழிபட்டனர்.

"காடுறை கடவுள் கடன்கழிப்பிய" (பொருநராற்றுப்படை- அடி- 52) என்ற செய்தி உள்ளது.

முல்லை நிலத்து ஆயர் ஏறுதழுவும் முன்னர் நீர்த்துறையையும், மரங்களையும் முறைப்படி வழிபட்டனர்.

"துறையும் ஆலமும் தொல்வலி மராஅமும்
முறையுளி பராஅய்ப் பாய்ந்தனர் தொழூஉ"- (கலித்தொகை.- 101)

என்ற முல்லைக்கலிப் பாடல் அவர்கள் அடுத்தடுத்துச் செய்த செயல்களை வரிசைப் படுத்துகின்றது.

மலைச்சுனைகள் இறைத்தன்மை உடையன என்பது;

"சூருடை நனந்தலைச் சுனைநீர் மல்க"- (நற்.- 7),
"கடவுட் கற்சுனை"- (நற்.- 34),
"ஏர்மலர் நிறைசுனை உறையும் சூர்மகள்"- (அகம்- 198)

எனும் பாடலடிகளால் புலப்படுகிறது.

கடற்கரையில் நின்ற பெண்ணைக் கடல்தெய்வம் என்று புனைந்துரைக்கிறது ஒரு அகப்பாடல்;

"பெருங்கடற் பரப்பின் அமர்ந்துறை அணங்கோ"- (நற்.- 155)

என்று நெய்தல் நிலப் பெண்ணைப் பார்த்துத் தலைவன் கேட்கக் காரணம் கடல் ஒரு தெய்வமாகக் கருதப்பட்டமையே எனலாம்.

கடலின் தெய்வத்தன்மை;

"தண்பெரும் பௌவம் அணங்குக"- (குறுந்.- 164),
"பெருங்கடல் தெய்வநீர் நோக்கி"- (கலி.- 131)

என்ற பாடல் அடிகளாலும் தெளிவு பெறுகிறது.

நிலமும், திசைகளும்:

காடும் மலையும் பொருந்திக் கடலால் சூழப்பட்ட நிலத்தையும், திசைகளையும் தெய்வம் என்றனர்;

"வையக மலர்ந்த தொழில்முறை ஒழியாது
கடவுட் பெயரிய கானமொடு கல்லுயர்ந்து
தெண்கடல் வளைஇய மலர்தலை உலகத்து"- (பதிற்.- 88)

என்னும் பகுதி; பூமி கடவுள் என்னும் கருத்தைத் தருகிறது.

நெடுநல்வாடை கட்டுமானப் பணியைத் தொடங்கும் முன்னர்;

"நூலறி புலவர் நுண்ணிதிற் கயிறிட்டுத்
தேஎங் கொண்டு தெய்வ நோக்கிப்
பெரும்பெயர் மன்னர்க்கொப்ப மனை"- (அடி.- 77-78)

என வகுத்த போது திசைத் தெய்வங்களை வாழ்த்தியதைக் காட்டுகிறது.

நிலவு:

பட்டினப்பாலை திங்களைக் கடவுள் என்பதாக; நிலவுக்குரிய வழிபாட்டிடம்

"மதிசேர்ந்த மகவெண்மீன்
உருகெழு திறலுயர் கோட்டத்து"- (அடி- 35-36)

எனப் பேசுகிறது.

"தொழுது காண் பிறையின் தோன்றி"- (குறுந்.- 178) என்ற உவமையும் நிலவு வழிபடப் பட்டமையைக் காட்டுகிறது.

மலர்கள்:

மணம் பொருந்திய காந்தளும், கடம்பும், அழகிய வேங்கை மலரும் தெய்வத் தன்மை பொருந்தியனவாகக் கருதப்பட்டன;

"சோலை அடுக்கத்துச் சுரும்புண விரிந்த
கடவுட் காந்தள் உள்ளும் பலவுடன்
இறும்பூது கஞலிய ஆய்மலர் நாறி"- (அகம்- 152)

என்று பாடுங்கால் மணம் காரணமாகக் காந்தளுக்குக் கடவுட்தன்மை இருப்பதாகக் கருதியமை தெளிவு.

"புகழ் பூத்த கடம்பமர்ந்து"- (பரி.- 2) என்னும் போது;

"கார்நறுங் கடம்பு"- (நற்.- 34) என்று

போற்றப்பட்ட பூவின் மணமும் முருகனும் தொடர்புபடுத்தப்படுகின்றனர்.

அழல் போல் சிவந்த வேங்கைக்கு தெய்வத்தன்மை ஏற்றப்பட்டமை;"எரிமருள் வேங்கை கடவுள் காக்கும்"- (நற்.- 216) என்ற தொடரால் தெரிகிறது.

விலங்குகளும் அவற்றின் உறுப்புகளும்:

அரவும் முதலையும் தெய்வத்தன்மை உடையனவாகக் கருதப்பட்டமை;

"அணங்குடை அரவின்"- (நற்.- 168) என்ற தொடராலும்,

"நாகத்து அணங்குடை அருந்தலை"- (நற்.- 37) என்பதாலும்,

"சுட்டுநர்ப் பனிக்கும் சூருடை முதலைய"- (அகம்- 72) என்ற அடியாலும் வெளிப்படுகிறது. சுறாவின் கொம்பு வழிபாட்டிற்குரிய பொருளானது.

தாம் வேட்டையாடிய சுறா கருவுற்றிருப்பின் அதன் கொம்பைத் தெய்வ வழிபாட்டிற்கு உரியதாக்கினர் பரதவர். பின்வரும்;

"சினைச் சுறாவின் கோடு நட்டு
மனைச் சேர்த்திய வல்லணங்கின்"- (பட்டினப்பாலை.- அடி.- 86-87)

எனும் பாடலடிகளால் அத்தெய்வம் துடியான தெய்வமாகக் கருதப்பட்டமை தெளிவாகிறது. இன்று எத்தன்மைத்து என்று அறுதியிட்டுச் சொல்ல இயலாத ஆளி என்னும் விலங்கு தெய்வத்தன்மை பொருந்தியதாகக் கருதப்பட்டது.

"ஆளி நன்மான் அணங்குடை ஒருத்தல்"- (அகம்.- 381) யானைக் கூட்டத்தின் தலைமை சான்ற களிறு வீழும்படியாகத் தாக்கி அதன் கோட்டைப் பறித்து உண்டது

காக்கை:

மக்கள் தம் இல்லங்களில் காக்கைக்குப் பலிச்சோறு படைத்தனர்.

"பொற்றொடி மகளிர் புறங்கடை உகுத்த
கொக்குகிர் நிமிரல்"- (நற்.- 258) மாந்திய காக்கை காண்க.

திருக்குறள் மழையைத் தெய்வமாகப் போற்றுவதை அந்நூற் பாயிரத்தில் காண்கிறோம் (வான் சிறப்பு). நீர்ஆதாரங்களைத் தெய்வமாகக் கருதிய வழக்காறு நீதிஇலக்கிய காலத்தில் மழைப்பராவலாகத் தொடர்ந்துள்ளது. சிலப்பதிகாரத்தில் ஞாயிறு, நிலவு, மழை, காவிரிஆறு முதலிய இயற்கைப் பொருட்கள் போற்றப் படுகின்றன. (மங்கலவாழ்த்துப்பாடல்& கானல் வரி) நிலவைத் தெய்வமாக வழிபட்டமை சிலப்பதிகாரத்திலும் பேசப் படுகிறது. (கனாத்திறம் உரைத்தகாதை- அடி- 13) இன்றும் பல கோயில்களில் சந்திரனுக்கென்று தனிச் சந்நிதி உள்ளது. முழுநிலவு நாளுக்கென்று சிறப்பு வழிபாடும் நடைமுறையில் உள்ளது. பாம்பு வழிபாடு இன்றுவரை தொடர்வதும்; அதற்கெனத் தனிச் சந்நிதிகள் உள்ளமையும் குறிப்பிடத்தக்கன. தாய்த்தெய்வ வழிபாட்டில் வேம்பு இன்றும் தனிச்சிறப்பு பெறுகிறது. சிந்து சமவெளி நாகரிகத்தில் முதலை தெய்வமாக இருந்தது. இதை அகழ்வாய்வு முடிபுகளின் துணை கொண்டு ஆய்வாளர் நிறுவியுள்ளனர். (Dr. Naga Ganesan- Gharial god and Tiger goddess in the Indus valley: Some aspects of Bronze Age Indian Religion-Museumof FineArts, Houston, TX,2007) https://archive.org/details/IVCReligionByNagaGanesan2007

[3] வழிபாட்டின் காரணம் அச்சம்:

நிலவு, நிலம், திசை தவிர்ந்த பிற வழிபாடுகள் அச்சத்தால் உருவாயின.

வறட்சி மிகுந்த காட்டு வழியில் ஆறலைப்போரின் கணைகளால் உயிரை விட்டவர்களின் புண்ணிலிருந்து வழியும் குருதியைக் குடித்த காக்கைகள் ஒற்றர் போலத் தம் குரல் ஒடுங்கிப் பயிலும் மலைக்காட்டு வருணனை காக்கை வழிபாட்டின் அடிப்படை அச்சம் என்று நிறுவுகிறது. (அகம்.- 313)

பூமியைப் பிளந்து சென்ற மாலை போன்ற விழுதுகள் வேராகும் ஆலமரப் பொந்தில் கூகை குளறுவதை வருணிக்குங்கால் ஆலமர வழிபாடு அப்பறவை காரணமாகவே அச்சத்திற்கு உரித்தாகிறது (புறம்.- 364). பெரிய ஒலியும், பிதுங்கிய கண்களும், சுடுகாட்டில் பிணத்தின் தசையை உண்ணும் செயலும்; பேய் உலவும் இரவுப் பொழுதில் இரை தேடி அலைவதும் கூகை பற்றிய அச்சத்தைக் கூட்டும். (பதிற்.- 44, குறுந்.- 393, நற்.- 218, அகம்.- 19, 122& நற்.- 319). தான் வாழும் மரப்பொந்தில் இருந்து கொண்டு; போழ்ந்தாற் போலும் வாயலகை உடைய பேராந்தை 'சுட்டுக் குவி' எனச் செத்தோரை அழைப்பது போலக் கூவுகின்ற புறங்காட்டு வருணனை கூகை தங்கும் மரத்தின் வழிபாட்டிற்கு அச்சத்தை அடிப்படை ஆக்குகிறது (புறம்.- 240& 261).

வேப்ப மரத்தில் தங்கிய கூகை அம்மரத்தை அச்சத்திற்குள்ளாக்கிற்று. (நற்.- 218).

ஆண்யானை தாக்கியும் சிதையாத வைரம் பாய்ந்த ஓமைமரத்தில் தங்கியிருந்த பருந்தால் அச்சம் தோன்றியமை (அகம்.- 397) காண்கிறோம். அதுபோல் வௌவால் தங்கிய முதுமரங்கள் விதந்து பேசப்பட்டுள்ளன (குறுந்.- 352, அகம்.- 244).

மலையுச்சியிலிருந்த குகைகள் அச்சத்திற்குக் காரணமாயின. (அகம்.- 272) "அணங்குடை நெடுங்கோட்டு அஞ்சுவரு விடர்முகை" காண்க. படமெடுத்து அச்சுறுத்தும் என்ற பொருளில் அரவின்; "அணங்குடை அருந்தலை பைவிரிப்பவை"- (அகம்.- 108) என்னும் போது பாம்புவழிபாடும் அச்சத்தையே அடிப்படையாகக் கொண்டது.

கடல்வேட்டைக்கு இடையூறாகச் சுறாக்கள் வலைகளைக் கிழித்தமையும், பரதவர் உயிரை அழித்தமையும் பற்றிக் கூறும் பாடல்கள் பல. (குறுந்.- 318, நற்.- 78, 207, 215, அகம்- 190, 300, 340, 350& கலி.- 123) தாம்

அழித்த சுறாக்கள் கருவுற்று இருப்பின்; அக்கருவைக் கொன்றமைக்கு அஞ்சி; அவற்றின் கொம்பைத் தெய்வமாக வழிபட்டுள்ளனர்.

[4] வழிபாட்டின் அடிப்படையாகும் நம்பிக்கை:

காக்கை வழிபாடு:

மரவழிபாட்டில் படைத்த பலிப்பொருட்களைக் காக்கைகள் உண்டன. காக்கை கரைவது நல்ல நிமித்தமாகக் கருதப்பட்டதால் மக்கள் தம் இல்லத்திலும் காக்கைக்குப் பலிச்சோறு இட்டனர். இதனால் காக்கைக்கும் தெய்வத்தன்மை இசைவதாயிற்று. வீரமரணம் அடைந்தவர்க்கு வழிபாடு நிகழ்த்துங்கால் அவர்களது ஆவி காக்கை உருவில் வந்து பலியை ஏற்றுக்கொள்ளும் என்ற நம்பிக்கையும் இருந்தது.

காக்கை தன் கூட்டத்தை அழைத்துக் குஞ்சுடன் சேர்ந்து மரவழிபாட்டின்

"கருனைச்செந்நெல் வெண்சோறு
சூருடைப் பலியோடு" கவர்ந்தது (நற்.- 367, 343& 281).

பெண்கள் இல்லங்களில் காக்கைக்குப் பலியிட்டதை 1.1.7ல் கண்டோம்.

உடன்போக்கில் பிரிந்து சென்ற தன் மகள் மீண்டுவர வேண்டுமென்ற விருப்புடன் காத்திருந்த தாய்; காக்கை கரைந்தவுடன் நல்ல நிமித்தமாகக் கருதி அதற்குப் பலியிட;

"பல்ஆ பயந்த நெய்யின் தொண்டி
முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெண்சோறு
எழுகலத்து ஏந்தினும் சிறிது" என்று கருதுகிறாள். (பா- 210)

வீரமரணம் அடைந்தோர்க்குக் குருதி கலந்த சோறு படைத்து வழிபாடு நிகழ்த்த; கருங்காக்கை அதை உண்டது (பொருநராற்றுப்படை- அடி- 184). சேரன் பல்யானைச் செல்கெழு குட்டுவனின் போர்முரசுக்கு விசும்பு அதிரும்படியாகச் செய்த வழிபாட்டைப் பற்றி விரிவான விளக்கம்

பதிற்றுப்பத்தில் உள்ளது (பா- 30). அச்சம் தரக்கூடிய மரபின்படி படைத்த குருதி அளைந்த பலியைப் பேய்மகளும் தொட அஞ்சி நடுங்க; எறும்பும் மூசாத அப்பிண்டத்தைக் காக்கையும், பருந்தும் அருந்துவது கண்டு அனைவரும் மகிழ்ந்தனராம்.

தென்னிந்தியாவில் சாதிப்பிரிவினை பற்றிய பழைய ஆதாரங்களைக் கட்டுரைக்கும்; முனைவர் ஜார்ஜ் ஹார்ட் மேற்சுட்டிய வழிபாடு பற்றிப் பேசுங்கால் அதில் இருக்கும் இயற்கைப் பொருளின் பங்கிற்கு உரிய இடம் அளிக்கவில்லை. (Early Evidences Of Caste In South India- 1987- http://www.tamilnation.co/caste/hart.pdf) எனவே சமயம் பற்றிய அவர் கருத்து மீள்பார்வைக்கு உரியது.

மரத்திற்குப் படைப்பது; அம்மரப்பொந்திலிருக்கும் கூகை உண்பதற்கு உரியதாயிற்று. கூகை குளறுவது தீயநிமித்தமாகக் கருதப்பட்டது. இரவுக்குறியில் தன்னைக் காணத் தலைவன் வருங்கால் கூகை குளறின் அது தீநிமித்தமாகும் என்பதால்; தன் ஊர் முதுமரத்தில் வாழ்ந்த கூகையிடம் அது குளறாமல் இருக்கக் கெஞ்சும் தலைவி;

"மையூன் தெரிந்த நெய்வேண் புழுக்கல்
எலிவால் சூட்டொடு மலியப் பேணுதும்" (நற்.- 83) என்கிறாள்.

வெள்ளைவாரணர் மேற்சுட்டிய நற்றிணைப் பாடல் தலைவி கூகைக்குப் பலிச்சோறு படைப்பது பற்றிப் பேசுவதாகக் கூறுகிறார். ஆனால் அவரது கருத்தை ஏற்கச் சான்று ஏதும் இல்லை. அவரது கருத்துக்கான ஆதாரம் எது என்று தெரிந்து கொள்ள வேண்டிய தேவை உள்ளது

'ஆண்டலைக்கொடி' என்னும் திருமுருகாற்றுப்படைத் தொடருக்கு நச்சினார்க்கினியர் மனிதத்தலையும் பறவை உடம்பும் கொண்ட வடிவம் என விளக்கம் அளிக்கிறார். ஆனால் தமிழகத்தைப் பொறுத்தவரை கோழிச்சேவலே முருகவழிபாட்டுடன் தொடர்புடையது. அவர் சுட்டும் உருவம் கொண்ட புடைப்புச் சிற்பங்களை மாமல்லபுரத்தில் காண இயல்கிறது. மாமல்லபுரத்துச் சிற்பங்களின் காலமும்(கி.பி.6ம் நூடு.); அதை

வெட்டிய பல்லவரின் நாகரிகமும் கருத்தில் கொள்ள வேண்டியவை. தம்மைப் பரத்துவாஜ கோத்திரத்தினர் என்று சொல்லிக் கொண்ட பல்லவர் வடநாட்டில் இசைக்கலைஞர்களை உயிர்ப்பலியாக்கிய ஆரிய நாகரிகத்தில் கால்கொண்டு; தமிழகம் பெயர்ந்தவராவர். அவ்வாறு கொல்லப்பட்ட கின்னரர் என்னும் இசைஞரே மனிதத்தலையும் ஆந்தை உடலும் கொண்ட தேவர் என்பர். தொல்தமிழகத்தில் பாணரோ, பொருநரோ, துடியரோ உயிர்ப்பலி கொடுக்கப்பட்டமைக்கு ஆதாரம் ஏதும் இல்லை. மாறாக வேந்தரின் வெற்றிக்கு வழிவகுக்கும் வழிபாட்டைச் செய்யும் தகுதி படைத்தவராக இருந்து உள்ளனர். ((முனைவர் ஜார்ஜ் ஹார்ட்- மேற்.) நச்சினார்க்கினியரின் உரையை ஒட்டியே நற்றிணைப் பாடலுக்கு வெள்ளைவாரணர் பொருள் கூறி உள்ளார்.

வடநாட்டுத் தாந்திரீக முறையிலிருந்து தொல்தமிழர் வழிபாடு மாறுபட்டது. இன்றும் தீபத்திருநாள் என்று அழைக்கப்படும் தீபாவளியன்று; அதாவது அமாவாசை இரவில் மாயசக்தி படைத்ததென்ற நம்பிக்கையில் கூகைகளைப் பலிகொடுத்து வேண்டிக்கொள்ளும் வழக்கம் வடக்கில் உள்ளது. அங்கு கூகை சாமுண்டா என்னும் தாய்த் தெய்வத்தின் வாகனமாகும். 'மா லோகி' என்று அழைக்கப்படும் இலக்குமியின் வழிபாட்டில் கூகை உள்ளது. (The Logical Indian- Sromana Bhattacharya- Diwali Ritual Of Sacrifice Puts Lives Of Indian Owlls At Risk - https://thelogicalindian.com/exclusive/indian-owls-sacrificed/, Traffic- India's Festival Of Lights Darkens The Future Of Owls - 7.11.2012- https://www.traffic.org/news/indias-festival-of-lights-darkens-the-future-for-owls/, Global post- Jason Overdorf- India's Secret Shame; Owl Sacrifice mars Hiduism's Biggest Holiday- Global Post- 10.11.2012 - https://www.pri.org/stories/2012-11-10/indias-secret-shame-owl-sacrifice-mars-hinduisms-biggest-holiday)

தொல்தமிழகத்தில் மேற்சுட்டிய நம்பிக்கையும் பலியும் பயின்றமைக்கு ஆதாரம் ஏதும் இல்லை. தொல்தமிழர் பறவைகளை நேசித்த பாங்கிற்கு அதிகன் என்னும் எயினன் முன்மாதிரி ஆகிறான் (அகம்.- 208& 142). மிஞிலியுடன் போரிட்டு மாண்ட போது அவன் மேல் வெயில் படாதபடி

அவன் போற்றி ஆதரித்த பறவைகள் அனைத்தும் வானில் பறந்து நிழல் செய்தன. அத்துடன் பகலில் கண் தெரியாத கூகை; எல்லாப் பறவைகளையும் போல் அவனுக்கு நிழல் தரவில்லையே என்று நாணம் கொண்டது என்று மீண்டும் பாடியிருப்பவர்; வரலாற்றைப் பதிவு செய்வதில் பேர்பெற்ற பரணர் ஆவார் (அகம்.-148). தேவை இல்லாத கற்பனை சிறிதும் இடம் பெறாத சங்க இலக்கியத்தில் இப்படி ஒரு பாடல் இருப்பது; தொல்தமிழர் பிற பறவைகளைப்போல் கூகையையும் நேசித்த தன்மையையே காட்டுகிறது. நற்றிணைத் தலைவியும் அவ்வாறே நேசிக்கிறாள். எனவே வடவர் மாயசக்தி இருப்பதாகக் கருதிச் செய்யும் கூகைப்பலியும்; தாந்திரிக வழிபாடும் தமிழகத்தில் இல்லை என்பது துணிபு. மரத்திற்கு இடும் பலியே கூகைக்கு ஆனது.

கடம்ப மரத்தில் முருகன் உறைவதாக நம்பினர். முருக வழிபாட்டிற்கான கொடியும், பலியிடுவதற்குரிய விடையும் கடம்ப மரத்திலேயே கட்டபட்டன.

"கடம்பமர் நெடுவேள்"- (பெரும்பாணாற்றுப்படை-அடி-75),
"கடம்பமர் செல்வன்"- (பரி.- 8- அடி- 126),
"கடம்பமர் அணிநிலை பகர்ந்தேம்"- (பரி.- 19- அடி- 104),
" கடம்பின் சீர்மிகு நெடுவேள்"- (மதுரைக்காஞ்சி- அடி.- 613-614),
"அணங்குடைக் கடம்பு"- (பதிற்.- 88)

என்னும் தொடர்களும்;

"கடம்பு கொடியாத்து"- (அகம்.- 382),
"விடைஅரை அசைத்த வேலன் கடிமரம்"- (பரி.- 17- அடி- 3)

என்னும் பாடலடிகளும் மேற்சுட்டிய கருத்தை நிலைநாட்டுகின்றன.

[5] வழிபாட்டில் இடம் பெற்ற பிற பொருட்கள்:

வேப்பந்தளிர், பனைமடல் குருத்து போன்றவை வழிபாட்டில் பெரிதும் இடம் பெற்றன. வேலன் வெறியாடிய போது;

"…..வேம்பின் வெறிகொள் பாசிலை நீலமோடு சூடி……
தோடும் தொடலையும் கைக்கொண்டு"- (அகம்.- 138)

என்று காட்சி அளிக்கிறான். மணம் பொருந்திய கடம்பமலர்கள் தெய்வ வழிபாட்டிற்கு உரியன எனவும், காடு முழுதும் மணம் வீசியதெனவும் பாடியுள்ளனர் (அகம்- 99). தென் கன்னடத்துக் கோயில்களில் இன்றும் பக்தர்களுக்குப் பனம்பூவே பெரிதும் பிரசாதமாக வழங்கப்படுகிறது.

முடிவுரை:

தொன்மையான ஆல், கடம்பு, வேப்ப மரங்கள், நிழல் தருமளவிற்கு உயர்ந்த கள்ளி மரம், நடுகல் அமைந்த நிழலுக்குரிய ஓமை மரம் முதலியன பொது மக்களால் படையல் இட்டு வழிபடப்பட்டன. மலையுச்சி, மலைகளில் இருந்த சுனைகள், காடு, கடல் முதலிய பிற நீர்த் துறைகள், மணமும் அழகும் பொருந்திய மலர்கள், அரவு, முதலை, ஆளி முதலிய விலங்குகள், சினைச் சுறவின் கோடு, பூமி, நிலவு முதலியன தெய்வத்தன்மை பொருந்தியனவாகக் கருதப்பட்டன. நிலவு, நிலம், திசை தவிர்ந்த பிற வழிபாடுகள் அச்சத்தின் அடிப்படையில் அமைந்தன. மரவழிபாட்டில் படைத்த பலிப்பொருட்களைக் காக்கைகளும் கூகைகளும் உண்டன. காக்கை கரைவது நல்ல நிமித்தமாகக் கருதப்பட்டதால் மக்கள் தம் இல்லத்திலும் காக்கைக்குப் பலிச்சோறு இட்டனர். வீரமரணம் அடைந்தவர்க்கு வழிபாடு நிகழ்த்துங்கால் அவர்களது ஆவி காக்கை உருவில் வந்து பலியை ஏற்றுக்கொள்ளும் என்ற நம்பிக்கையும் இருந்தது. கூகை குளறுவது தீய நிமித்தமாகக் கருதப்பட்டது. கூகைப்பலியும்; கூகைக்கு வழிபாடும் தமிழகத்தில் இல்லை. கடம்ப மரத்தில் முருகன் உறைவதாக நம்பினர். வேப்பந்தளிர், பனைமடல் குருத்து போன்றவை வழிபாட்டில் பெரிதும் இடம் பெற்றன.

துணை நூற் பட்டியல்:

எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும்

Arbar Ahmed- A Traffic India Report- 2010

George L. Hart- Early Evidences Of Caste In South India- 1987

(Dr. Naga Ganesan- Gharial god and Tiger goddess in the Indus valley: Some aspects of Bronze Age Indian Religion-Museumof FineArts, Houston, TX,2007)

(The Logical Indian- Sromana Bhattacharya- Diwali Ritual Of Sacrifice Puts Lives Of Indian Owlls At Risk

Traffic- India's Festival Of Lights Darkens The Future Of Owls- 7.11.2012

Global post- Jason Overdorf- India's Secret Shame; Owl Sacrifice mars Hiduism's Biggest Holiday- Global Post- 10.11.2012)

சுருக்கக் குறியீட்டு விளக்கம்:

நற்.- நற்றிணை

பரி.- பரிபாடல்

பதிற்.- பதிற்றுப்பத்து

குறுந்.- குறுந்தொகை

குறிப்பு:

11.10.'19 அன்று சென்னை உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனமும்; சென்னை குரு நாணக் கல்லூரியும் இணைந்து 'ஆசியப் பண்பாட்டிற்குத் தமிழ்ச் சமய இலக்கியங்களின் பங்களிப்பு' என்ற பொருண்மையில் நடத்திய கருத்தரங்கில் வாசித்து அளிக்கப்பட்டது. 12.10.'19 அன்று வெளியிடப்பட்ட கருத்தரங்க மலரில் பதிப்பிக்கப்பட்டது.

தொடர்பு:

முனைவர். ச.கண்மணி கணேசன் (kanmanitamilskc@gmail.com)

முதல்வர் (ஒய்வு)

ஸ்ரீ காளீஸ்வரி கல்லூரி(தன்னாட்சி), சிவகாசி

## 6. கீழடி

*— ருத்ரா இ.பரமசிவன்*

தமிழா!
உன் காலடி கீழடியில்
உன் இமயம்.
பனை ஏடுகள்
பாதி திறந்தன.
பானை ஓடுகள்
மீதி திறந்தன.
இவர் மீறல்கள்
உன் கீறல்களில்
உடைந்து போயின.
உன் தன்மையே
உன் தொன்மை தான்.
நீ தந்த சமக்கிருதமா
உனக்கு சமாதி ஆவது?

தமிழா!
இப்போதாவது விழி.
இது தான் உன் ஒளி.
இதுவே உன் வழி.
அர்ச்சனை மந்திரங்கள்
இப்போதாவது மற!
இல்லெனில்
உன் வீடு உனக்கில்லை.
உன் கூடும் உனக்கில்லை.
பிறகு
ஏது சிறகு?

ஈசன்கள் தேடி
ஈசல்கள் ஆனாய்.
நீ கட்டிய
பெரும் கோவில்களில்
வெறும்
படிக்கட்டுகளே நீ!
சிந்து வெளி
வெளிச்சம்
உனக்கு உண்டு.
சமக்கிருதம் எனும்
"சிந்துபாத்"கிழவனா
உன் தோளில் ?
அந்தக் கீறலில்
ஒரு "அந்துவன்"உண்டு.
நம் கலித்தொகைக்
கவிஞன்
"நல் அந்துவனும்"
அதில் உண்டு.

தமிழா
இதைக்கண்டு
அறி !
இந்த நாடு எனும்
பட்டா
உனக்கே உண்டு
அறி !

தொடர்பு: ருத்ரா இ.பரமசிவன் (ruthraasivan@gmail.com)

## 7. தொல்லியலின் அழகடி ...கீழடி

*— கவிஞர் அமீர்*




ஆதியிலே பிறந்த மொழி
தமிழ் மொழி!
அதை
அகழ்வாய்வில் சொல்லுதடி
கீழடி!

கலாச்சாரம்
நாகரீகம்
கொடிபிடித்து முன்னெடுத்த
தமிழ்மொழி!
அதைச் சுவரினிலே காட்டுதடி
ஈரடி வாசகத்தில்
அதே கீழடி!

பொதிகையிலே பிறந்தது
வைகையிலே வளர்ந்தது
தொல்லுலகில்
முதன்மையானது...
அது கீழடியில் வெளிச்சமானது...

தமிழுக்கு நிகரேது
தமிழருக்குக் குறையேது
எனும் வெண்பா கேளடி...
இன்னும்
மதம்
இனம்
வெறி
அடையாளக் குறியில்லா கீழடி!
இது
தொல்லியலின் அழகடி
தொன்மைக்கு பெருமையடி!

தமிழ்ச்சாமியின்
காலடி மண்ணெடுத்து
நெற்றியிலே
பொட்டு வைக்க வாடி
அதற்கு ஏற்ற இடம்
இந்த கீழடி!

தொடர்பு: கவிஞர் அமீர் (ameerjann@gmail.com)

## 8. அசோகனின் கிர்னார் பாறைக்கல்வெட்டில் சங்ககாலத் தமிழ் அரசர்

*— துரை.சுந்தரம்*

முன்னுரை:

அண்மையில் முகநூல் பகுதியில், முனைவர் பவானி அவர்கள் (கல்வெட்டியல் துறை), கிர்னாரில் அமைந்துள்ள இரண்டாம் பாறைக்கல்வெட்டு பற்றிய செய்தியைப் பகிர்ந்து கொண்டிருந்தார். அதில், கல்வெட்டில் கூறப்பட்ட முதன்மைச் செய்திகளோடு, அதன் சிறப்புச் செய்தியாக ஒரு செய்தியைக் குறிப்பிட்டிருந்தார். அசோகரின் இணைக்காலத்தில் சங்ககாலத் தமிழ் மன்னர் வாழ்ந்துள்ளனர் என்பதற்கான அகச்சான்றாகக் கல்வெட்டின் பாடம் அமைந்துள்ளது என எழுதியிருந்தார். மேற்படிப் பாறைக்கல்வெட்டு, பிராகிருத மொழியில் (அசோக)பிராமி எழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. கல்வெட்டின் பாடத்தைத் தமிழ் எழுத்துகளால் எழுத்துப் பெயர்ப்பு (Transliteration) வடிவாக்கி வெளியிட்டிருந்தார்.

வடபுல மக்களின் 'வர்க்க' எழுத்துகளின் மிகச் சரியான ஒலிப்பைத் தமிழ் எழுத்துகள் வாயிலாகக் காட்டுவது கடினம். ஆகவே, பல்லவ கிரந்த எழுத்துகளில் 'ஸ', 'ஜ', 'ஹ' ஆகியவற்றை மட்டிலும் கையாண்டிருக்கிறார். அசோகனின் இந்தக் கல்வெட்டினைப் பற்றிச் சற்றுக் கூடுதலாகச் செய்திகளை அறியும் தேடுதலில் கிடைத்த செய்திகளையும் இங்கே பகிர்ந்துகொள்கிறேன்.

முனைவர் பவானி அவர்களின் முகநூல் பகிர்வு:
அசோகரின் கிர்னார் இரண்டாம் பெரும்பாறைக் கல்வெட்டு
[முனைவர் மா.பவானி, உதவிப் பேராசிரியர், கல்வெட்டியல் துறை]



அசோகனின் உருவப்படம்

அசோகரது கிர்னார் இரண்டாம் பெரும்பாறைக் கல்வெட்டு குஜராத் மாநிலம் கத்தியவாரில் கிடைக்கப்பெற்ற முக்கியமான ஒரு கல்வெட்டாகும்.

அரசன்: அசோகன்
வம்சம்: மௌரியர்
காலம்: கி.மு. 3 ஆம் நூற்றாண்டு
மொழி: பிராகிருதம்
எழுத்து: அசோகன் பிராமி
நோக்கீடு : Inscriptions of Asoka by D.C. Sircar, 1957, Corpus Inscriptionum Indicarum

அசோகர் கல்வெட்டு பாடம் (தமிழில்):
1. ஸர்வத் விஜிதே(ம்)ஹி தேவாநாம்பிர்யஸ பிர்யதர்ஸினோ ராஞோ
2. ஏவமபி ப்ர சந்தேஸீ யதா சோடா, பாடா ஸதியபுதோ கேதளபுதோ ஆ தம்ப
3. பர்ணி அன்தியோகோ யோன ராஜா யே வாபி அன்தியகஸ் ஸாமிநோ
4. ராஜானோ ஸவத தேவனாம் பியஸ ப்ரிய (பிய) தஸினோ ராஞோ த்வே சிகீச்சா கதா
5. மனுஸ சிகிச்சா ச பஸீ சிகிச்சா ச ஔஸீதானி ச யாநி மனுசோபதானி ச
6. பஸோ ப கானி ச யத் யத் நாஸ்தி ஸர்வத்ர ஹாரா பிதானி ச ரோபா பிதானிச
7. முலானி ச ஃபலானிச யத் யத் நாஸ்தி ஸர்வத் ஹாரா பிதானி ச ரோபாபிதானி
8. பந்தேஸீ கூபா ச கானாபிதா வ்ருச்சா ச ரோபா பிதா பரிபோக்ய பஸீ மனுஸாநம்

செய்தி:

அசோகர் வழக்கம்போல் இக்கல்வெட்டிலும் தேவனுக்குப் பிரியமானவன் என கவுதம் குறிப்பிடப்பெறுகின்றார். அசோகர் தமது ஆட்சிக்குட்பட்ட பகுதியில் மட்டுமின்றி அண்டை நாடுகளான சேர, சோழ, பாண்டிய, ஸத்தியபுத்திரர், யோன அரசரான அன்டியோகஸ் மற்றும் அவருடைய அண்டைநாடுகளுக்கும் இரு வகைச் சிகிச்சைகள் அளிக்கப்படவேண்டும் என்பதை வலியுறுத்தியுள்ளதை இக்கல்வெட்டு உணர்த்துகிறது. அதாவது மனிதருக்கும் விலங்கினங்களுக்கும் சிகிச்சை அளிக்கப்பெறுதல் வேண்டும். எங்கெல்லாம் மூலிகைச் செடிகளும் பழம் தரும் மரங்களும் இல்லையோ, கிடைக்கும் இடங்களிலிருந்து தருவித்து இல்லாத இடங்களில் நடப்படவேண்டும் என்றும் பசுக்கள் நீர் அருந்த கிணறு போன்ற நீர் நிலைகள் ஏற்படுத்தவேண்டும் என்றும் அறிவுறுத்துகின்றது. இவ்விதமாகப் பசுக்களும், மனிதர்களும் பரிபோக்யமாக, சுபமாக வாழவேண்டும் என்று கல்வெட்டு கூறுகிறது.

முக்கியத்துவம்:

இக்கல்வெட்டில் தமிழகத்தில் சங்க காலத்தில் வாழ்ந்த அரசர்களின் வம்சங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

இதனால் அசோகருக்கு இணையான காலத்தில் (பொ.ஆ.மு 3ஆம் நூற்றாண்டுகளில்) தமிழ் மன்னர்கள் வாழ்ந்தது விளங்கும்.

தமிழக வரலாற்றை குறிப்பாகச் சங்க காலத்தை பொ.ஆ.8ஆம் நூற்றாண்டு என மிகவும் பின்னோக்கிக் கொண்டு செல்லும் "டிக்கன்" போன்ற அறிஞர்களின் கருத்துக்களைத் தவறானவை என இக்கல்வெட்டு கொண்டு மெய்ப்பிக்கலாம்.

தமிழ் மன்னர்கள் மட்டுமின்றி தமிழ் அரசர்களின் சிற்றரசர்களாக விளங்கிய அதியமான் போன்றோரும் அசோகர் அறியும் வண்ணம் சிறப்புற்று விளங்கியுள்ளனர் என்பது தெளிவு.

அசோகருக்கு அண்டை நாடாகக் குறிப்பிடப்படுவதால் அசோகரின் ஆட்சியோ படையெடுப்போ தமிழகத்தில் நிகழவில்லை என்பதை அறியலாம். தமிழ் மன்னர்கள் இக்காலத்தில் மிக வலிமைகொண்டு விளங்கியுள்ளனர் எனக் கூறலாம்.

குஜராத்-கத்தியவார்-கிர்னார்:

குஜராத் மாநிலத்தின் கத்தியவார் பகுதியைச் சேர்ந்த கிர்னார் (GIRNAR) என்னும் ஊரில் அமைந்துள்ள பாறைக்கல்வெட்டு அசோகனின் பாறைக்கல்வெட்டுகளில் இரண்டாவதாக வரிசைப்படுத்தப்பட்டுள்ளது. இந்த இரண்டாம் பாறைக்கல்வெட்டின் பாடம் (வாசகம்), ஷாபாஜ்கடி (SHAHBAZGARHI), கால்சி (KHALSI), கிர்னார் (GIRNAR), தவுலி (DHAULI), ஜவுகதா (JAUGADA) ஆகிய ஐந்து இடங்களிலும் ஒன்றுபோல் பொறிக்கப்பட்டுள்ளது. சிறு சிறு சொற்கள் மாறுபடுகின்றன.

கல்வெட்டின் முதன்மைச் செய்தி:

மனிதருக்கும், விலங்கினங்களுக்கும் ஒன்றுபோல் மருத்துவ உதவி அளிக்கப்படவேண்டும் என்னும் அசோகனின் முதன்மை நோக்கத்தைக் கல்வெட்டு இயம்புகிறது. எனவே, ஆதுல சாலைகள் அமைப்பதற்கான அசோகனின் ஆணை என்றே இதைக் கொள்ளலாம். அதற்கான மருந்துச் செடிகள் (மூலிகைச் செடிகள்), மூலங்கள் (ROOTS), பழமரங்கள் ஆகியன மருத்துவ உதவி அளிக்கப்படும் இடங்களில் அமையவேண்டும்; அவ்வாறு இவை அவ்விடங்களில் இல்லாத போது, அவை வேறிடங்களிலிருந்து வரவழைக்கப்பட்டுப் பயிரிடப்படல் வேண்டும். பெருவழிகளில், மனிதர்க்கும் விலங்கினங்களுக்கும் பயன் தருகின்ற வகையில் மரங்கள் நடப்படுதல் வேண்டும்; மேலும், அப்பெருவழிகளில் மனிதர்க்கும் விலங்குகளுக்கும் பயன்படுகின்ற கூவல்கள் (கிணறுகள்) தோண்டப்படுதல் வேண்டும். இந்த ஆணையைத் தெரிவிக்கும் அசோக மன்னன் 'பியதசி" என அழைக்கப்படுகிறான். அவன் கடவுளின் அன்பைப் பெற்றவன்.

எங்கெல்லாம் மருத்துவச் சாலைகள்?

அசோகன் வென்றுகொண்ட நாட்டுப்பரப்புகளிலெல்லாம் இந்த மருத்துவ உதவி அமையவேண்டும் என்று கல்வெட்டு கூறுவதோடு வேறு சில நாட்டுப் பகுதிகளிலும் இம்மருத்துவ அமைப்பு செயல்படவேண்டும் என்று கூறும் வகையான் சங்ககாலத்தமிழ் மன்னர்களின் பெயர்கள், இலங்கையின் நாட்டுப் பெயர், யவன அரசன் அந்தியாகோவின் பெயர் ஆகியன இக்கல்வெட்டில் குறிப்பிடப்படுகின்றன. இக்குறிப்பில், சோடா, பாண்டா, சதியபுத, கேதலபுத ஆகியோர் காணப்படுகின்றனர்.

கல்வெட்டில் காணப்பெறும் பிற அரசர்கள்-
சோடா, பாண்டா, சதிய புத, கேதல புத:

இக்கல்வெட்டினை, பிரின்செப் (PRINSEP), வில்சன் (WILSON) என்னும் மேலை நாட்டு அறிஞர் இருவர் படித்துப் பொருள் அறிந்துள்ளனர். அவர்களுள் பிரின்செப் என்பார், அசோகனின் மேற்படி அரசாணை அறிவிப்பானது அசோகன் வென்ற நாட்டுப் பரப்பு அனைத்திலும் (CONQUERED PROVINCE) மற்றும் நம்பிக்கைக்குரிய (FAITHFUL) அரசர்களின் ஆட்சிப்பகுதிகளிலும் செயல்படுத்தப்படுகிறது என்பதாகக் குறிப்பிடுகிறார். நம்பிக்கைக்குரிய அரசர் வரிசையில் மேற்படி சோடா, பாண்டா, சதியபுத, கேதலபுத மற்றும் தொலைவில் இருக்கும் தாம்பபண்ணி (THANBAPANNI) என்னும் இலங்கை (பிரின்செப், CEYLON என்று குறிப்பிடுகிறார்) ஆகியோர் குறிப்பிடப்படுகிறார்கள். மேலும், ஆண்ட்டியோக்கஸ் (ANTIOCHUS) என்னும் கிரேக்க அரசனின் ஆளுகைக்குட்பட்ட பகுதியும் குறிப்பிடப்படுகிறது.



இப்பெயர்களின் சரியான பாடம் சோழா, பாண்டியா, சதியபுத்ர, கேதலபுத்ர ஆகிய அரசர் என்றும், தாம்பபனி நாடு என்றும் கன்னிங்காம் (CUNNINGHAM) குறிப்பிடுகிறார். இவ்வரசர்கள், அசோகனின் ஆட்சி எல்லையில் அமைந்த நாடுகளின் தலைவர்கள் என்பதும் அவர் தருகின்ற குறிப்பு. முதலிரண்டு பெயர்கள், இந்திய நாட்டின் தென்கோடியில் அமைந்த ஆட்சிப்பகுதிகள். தாம்பபனி என்பது 'சிலோன்' தீவு; கிரேக்கர் இதைத் 'தாப்ரொபனே' (TAPROBANE) என்று அழைப்பர். கேதலபுத்ர என்பது மேலைக்கடற்கரையின் கேரளாவைக் குறிக்கும். சதியபுத்ர என்னும் பெயர் யாரைக் குறிக்கும் என்பது உறுதியாகவில்லை. ஆனால், லாசன் (LAASSEN) என்பார் சதியபுத்ர என்னும் பெயர் பிடா/பிதா (PIDA) எனப்படும் பாண்டியனின் பௌத்தப்பெயராகும் எனக்கருதுகிறார். கோதாவரி ஆற்றுப்பகுதியில் அமைந்திருந்த பைத்தான் (BAITHANA or PAITHAN) பகுதிக்கு மேற்குக் கரையிலிருந்த சாதினி (SADINI) என்பவரைக் குறிக்கும் என்பது கன்னிங்காம் (CUNNINGHAM) அவர்களின் கருத்தாக உள்ளது. இதற்குச் சான்றாக அவர் சுட்டுவது தாலமியின் வரைபடமாகும் (PTOLEMY's MAP).

இவர்கள் கடற்கொள்ளையர் என்னும் கருத்தும் உள்ளது. கோதாவரிப்பகுதியில் வழங்கும் ஆந்த்ரி பைரேட்டி (ANDRI PIRATAE) என்னும் பெயரையும் நோக்குகையில், சாதினி (SADINI), சாதவாகனர் (SADAVAHANS), சாதகர்னி (SATAKARNIS) ஆகிய மூன்று பெயர்களும் ஆந்த்ரி (ஆந்திரர்) என்னும் பெயரும் ஒருவரையே குறிக்கும் எனலாம். அசோகன் காலத்தில் ஆந்திரர் ஒரு வலுவான நாட்டை ஆண்டவர்கள் என்பதைக் கன்னிங்காம், தாம் படித்த ஷாபாஜ்கடி (SHAHBAZGARHI), கால்சி (KHALSI) கல்வெட்டுகள் (அசோகனின் 13-ஆம் பாறைக் கல்வெட்டு) வாயிலாக நிறுவியுள்ளதாகக் குறிப்பிடுகிறார். நாசிக் கல்வெட்டு ஒன்றில், சாதகர்னி என்பது சாதவாகன என்று எழுதப்பட்டுள்ளது. சாதகர்னி என்பதே தாலமியின் நூலில் சாதனி என மருவி வந்துள்ளது. 'பெரிப்ளுஸ்' (PERIPLUS) நூலில் காணப்படும் 'சரகனோஸ்' (SARAGANOS) என்னும் சொல் சாதவாகனரையே குறிக்கும்.

சதியபுத - அதியமான்:

சதியபுத என்பது மேற்குறித்தவரையெல்லாம் சுட்டாது என்பதும், அதியமான் என்னும் குறுநில மன்னனையே குறிக்கும் என்பதும் பின்னாளில் நிறுவப்பட்டுள்ளது. "அதிய" என்னும் தமிழ்ச் சொல் வட இந்தியச் சாயல் பெறும்போது "சதிய" என மாற்றம் பெறுவது இயல்பு. அதியமான், தொண்டைமான், மலையமான் போன்ற தமிழ்ச் சொற்களில் காணப்பெறும் "மான்" என்னும் சொல் "மகன்" என்னும் பொருள் ஏற்றுப் பிராகிருத மொழியில் "புத" என்று வழங்கியிருத்தல் வேண்டும். இச்சொல் சமற்கிருத வடிவம் பெறும்போது "புத்ர" என அமையும். பிராகிருதச் சொல்லான "தம்ம" என்பது சமற்கிருதத்தில் "தர்ம" என அமைவதை ஒப்பிடுக. சமண->ஸ்ரமண, சுத்த->சூத்ர ஆகிய சொற்களையும் இவ்வகையில் ஒப்பீடு செய்யலாம். விழுப்புரம் மாவட்டம், திருக்கோயிலூருக்கருகில் உள்ள ஜம்பை என்னும் ஊரில் அமைந்த குகைத்தளத்தில் தமிழி (தமிழ் பிராமி) எழுத்துகளால் வெட்டப்பட்ட கல்வெட்டு ஒன்று அதியமானைப் பற்றியதாகும். 1987-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை கல்வெட்டுப் பயிற்சி மாணவரான கே.செல்வராஜ், தனது கள ஆய்வின்போது இக்கல்வெட்டு இருப்பதைக் கண்டறிந்தார். அப்போதைய துறை இயக்குநர் இரா. நாகசாமியால் இது படிக்கப்பட்டுத் தமிழிலும், ஆங்கிலத்திலும் படத்துடன் கட்டுரையாக நாளிதழ்களில் வெளியிடப்பட்டது. அண்மைக் காலத்தில் கண்டுபிடிக்கப்பட்ட மிகச் சிறப்பு வாய்ந்த அரிய கல்வெட்டு இது." வரலாற்றை வரையறை செய்யத் துணை நின்ற சிறப்புடைய கல்வெட்டு இந்த ஜம்பைக்கல்வெட்டாகும்.

ஜம்பை-அதியமான் கல்வெட்டு:

கல்வெட்டுப்பாடம்:

**சதியபுதோ அதியந் நெடுமாந் அஞ்சி ஈத்த பளி**



ஜம்பை-அதியமான் கல்வெட்டு

கலவெட்டுப்பாடம்

சதியபுதோ அதியந் நெடுமாந் அஞ்சி ஈத்த பளி

ஸதிய புதோ - ஜம்பைக்கல்வெட்டில்



ஸதிய புதோ - கிர்னார் கல்வெட்டில்

அசோகனின் கல்வெட்டில் இடம்பெறும் சதியபுத என்பது மேற்படி ஜம்பைக் கல்வெட்டில் 'சதியபுத' அடைமொழியோடு கூறப்பட்ட அதியமான் நெடுமான் அஞ்சியையே குறிக்கிறது என்னும் செய்தி நூறு ஆண்டுகளுக்குப் பின்னர் நிறுவப்பட்டுள்ளது. மூவேந்தர்களான சேர, சோழ, பாண்டியருக்கு இணையாக ஒரு குறுநில மன்னனான அதியனும் அசோகன் போன்றதொரு பேரரசனால் சுட்டப்பெறுகிறான் என்பது அதியனின் சிறப்பு நிலையைக் காட்டுகிறது.

கல்வெட்டில் வரும் பாண்ட என்னும் சொல்லை வில்சன் (WILSON), பலய (பழய?) என்று படித்துள்ளார். ஆண்ட்டியோக்கஸ் (ANTIOCHUS) என்னும் பெயர் யோன என்கிற யவன ராஜா என்று குறிக்கிறார். கல்வெட்டிலும் “அந்தியகோ (நாம) யோன ராஜயே” என்னும் தொடர் உள்ளது. இந்திய நாட்டிலிருந்த சேர, சோழ, பாண்டிய, அதிய அரசரை அசோகன் சுட்டுவது எதற்காக? தன்னுடைய ஆட்சிக்குட்பட்ட நாட்டுப்பரப்பு மட்டுமல்லாது தன் எல்லையில் தனியாட்சியில் இருக்கும் இந்தத் தமிழரசர் நாட்டிலும் மருத்துவம் சார்ந்த பணிகள் நடக்க வேண்டும் என்று அசோகன் விழைந்தான் என்று கொள்ளலாமா? அவ்வாறெனில், அசோகன் தமிழரசர்களோடு ஒரு பிணைப்பை ஏதோ ஒரு வகையில் கொண்டிருந்தான் எனக் கொள்ளலாம். அந்தத் தொடர்பு, அவன் அனுப்பிய தூது வழி ஏற்பட்டிருக்கக் கூடும். இத்தொடர்புக்கான சான்றுகள் எங்கேயும் கிடைத்துள்ளனவா? தெரியவில்லை.

ஆண்ட்டியோக்கஸ் (ANTIOCHUS) - கிரேக்க அரசன்:

அசோகனின் கல்வெட்டில் ஆண்ட்டியோக்கஸ் (ANTIOCHUS) என்னும் கிரேக்க அரசனின் பெயர் இடம்பெறக் காரணம் என்ன? அசோகனின் மருத்துவம், மரம் நடுதல் ஆகிய பணிகள் எவ்வாறு கிரேக்க நாட்டுப்பகுதியோடு தொடர்புள்ளவை? இக்கேள்விகளுக்கு, கல்வெட்டில் இடம்பெறும் சில சொற்றொடர்களிலிருந்து விளக்கம் பெறுகிறோம். அசோகனின் ஆட்சிக்காலம் கி.மு. 268 - கி.மு. 232. இக்காலத்திலிருந்த கிரேக்க அரசன் இரண்டாம் ஆண்ட்டியோக்கஸ் (ANTIOCHUS) ஆவான். (கி.மு.261-கி.மு.246) இவனது ஆட்சிக்காலத்தில் கிரேக்க ஆட்சியின் ஒரு பகுதியாக ’கிரீக்கோ பாக்ட்ரியா’ (GRECO BACTRIA) என்னும் நாட்டுப்பகுதி விளங்கியது என அறிகிறோம். இப்பகுதியை இரண்டாம் ஆண்ட்டியோக்கஸ் (ANTIOCHUS) சார்பில் அவனுடைய சாமந்தர்கள் ஆட்சி செய்தனர் என அறிகிறோம். இந்த சாமந்தரின் ஆளுகையிலிருந்த ’கிரீக்கோ பாக்ட்ரியா’ (GRECO BACTRIA) தற்போதைய வடக்கு ஆப்கானிஸ்தான் ஆகும். இது அசோகனின் ஆட்சிப்பகுதியின் வடமேற்குப் பகுதியில் அமைந்துள்ளதால்

கல்வெட்டில் இந்தப் பகுதியையும் அசோகன் சேர்த்திருக்கிறான் எனலாம். அசோகன் ஆண்ட்டியோக்கஸ் (ANTIOCHUS) என்னும் கிரேக்க அரசனுடன் உறவு/தொடர்பு கொண்டிருந்தான் என்னும் கருத்து காணப்படுகிறது. இதற்குச் சான்றாகக் கல்வெட்டில் ஆண்ட்டியோக்கஸ் (ANTIOCHUS) பெயரும் தொடர்ந்து இப்பெயரோடு சாமந்தர் அரசர் பற்றியும் குறிப்பிட்டுள்ளதைக் கொள்ளலாம்.



ஆண்ட்டியோக்கஸ் உருவம் பொறித்த நாணயம்

கல்வெட்டு வரிகள்:

**அந்தியகோ (நாம) யோன ராஜயே வாபித ஸ அந்தியக ஸ சாமினம் ராஜனோ சவத**

இவ்வரிகளில் உள்ள "அந்தியக ஸ ஸாமினம் ராஜ" என்னும் தொடர் சாமந்தரின் ஆட்சியைக் குறிக்கிறது எனலாம். ஷாபாஜ்கடி (SHAHBAZGARHI), கால்சி (KHALSI), ஜவுகதா (JAUGADA) ஆகிய இடங்களில் உள்ள கல்வெட்டுப் பொறிப்புகளில் 'சாமந்த' என்னும் சொல்லே எழுதப்பட்டுள்ளமை உன்னுதற்குரியது.

தம்பபண்ணி:

அடுத்து, "தம்பபண்ணி" என்னும் சொல் இலங்கையைக் குறிக்கிறது என்று கன்னிங்காம் (CUNNINGHAM) சுட்டுகிறார். தம்பபண்ணி



அசோகனின் சாரநாத் தூண் கல்வெட்டு- பார்வைக்காக



அசோகனின் லும்பினி கல்வெட்டு- பார்வைக்காக

அல்லது தாம்பபண்ணி என்னும் சொல் தாமிரவர்ணி என்னும் சொல்லின் பாலி வடிவமாகும். தாம்ரபர்ணி, தாம்பபண்ணி எனத் திரிந்தது. தாமிரம் அல்லது செம்புக் கனிமத்தின் நிறத்தைக் குறிக்கும் இச்சொல், பழங்கால இலங்கையில் அமைந்த முதல் அரசைக்குறிக்கும். ராஜரதா அரசு என்னும் பெயரும் இதற்கிருந்தது. இவ்வரசின் தலை நகரின் பெயரும் தாம்ரபர்ணியாகும். இவ்வரசின் அரசன் விஜயன் என்பானின் ஆட்சிக்காலம்

கி.மு. 543 - கி.மு. 505 என்றும், ஓர் அரசன், ஓர் அரசு என்பதோடு இவ்வரசு முடிந்தது எனவும் ஒரு வரலாற்றுக் குறிப்புள்ளது.

அசோகன் - பிராமி

கல்வெட்டில் காணப்பெறும் சில பிராகிருதச் சொற்கள்:

விஜிதம் - அசோகன் வெற்றி கொண்ட பரப்பைக் குறிப்பதாகக் கொள்ளலாம். பிரின்செப் CONQUERED PROVINCE எனப் பொருள்கொள்ள இச்சொல்லையே அடிப்படையாகக் கையாண்டிருக்கலாம். ஆனால், அவர் குறிப்பிடும் FAITHFUL என்னும் சொல்லுக்கு நேரான பிராகிருதச் சொல் எது எனத் தெரியவில்லை. அதுபோலவே அவர் 'countries bordering on the dominions of Asoka' என்று தமிழகத்தைச் சுட்டுகின்ற பொருளுக்குரிய பிராகிருதச் சொல் கல்வெட்டில் எது எனவும் தெரியவில்லை.

சோடா - சோழா என்பதன் வடமொழிச் சாயல். சிறப்பு 'ழ'கரம் வடவர் ஒலியில் 'ட' என ஒலிப்பதுண்டு. இச்சொல் அனைத்துக் கல்வெட்டுகளிலும் 'சோடா' என்றே பொறிக்கப்பட்டுள்ளது.

பாண்டா - பாண்டா என்பது பாண்டியரைக் குறிப்பதாகப் பிரின்செப் எழுதுகிறார். இரண்டாம் பாறைக்கல்வெட்டின் பாடம் (வாசகம்), ஷாபாஜ்கடி (SHAHBAZGARHI), கால்சி (KHALSI), கிர்னார் (GIRNAR), தவுலி (DHAULI), ஜவுகதா (JAUGADA) ஆகிய ஐந்து இடங்களிலும் ஒன்றுபோல் பொறிக்கப்பட்டுள்ளது; சிறு சிறு சொற்கள் மாறுபடுகின்றன என முன்னரே குறிப்பிட்டுள்ளோம். பாண்டா அல்லது பாண்ட என்னும் சொல் அவ்வகையானது. கிர்னார் கல்வெட்டில் 'பாண்டா' என்று எழுதப்பட்டிருப்பினும் தவுலியைத் தவிர்த்து மற்ற மூன்று இடங்களில் 'பாண்டிய' என்றே எழுதப்பட்டுள்ளது.

கேதலபுத - சேர அரசரைக்குறிக்கும் இச்சொல் அனைத்துக் கல்வெட்டுகளிலும் ஒன்றுபோலவே பொறிக்கப்பட்டுள்ளது. கேரளபுத என்பதன் மருவிய வடிவமே கேதலபுத.

சதியபுதோ - ஷாபாஜ்கடி (SHAHBAZGARHI) கல்வெட்டில் மட்டும் 'ஸதியபுத்ர' என எழுதப்பட்டுள்ளது. மற்றவற்றில் சதியபுதோ.

தம்பபண்ணி - இச்சொல் ஷாபாஜ்கடி (SHAHBAZGARHI) கல்வெட்டில் தம்பபனி எனவும், கால்சி (KHALSI) கல்வெட்டில் 'தம்பபன்னி' எனவும் எழுதப்பட்டுள்ளது. ஆனால், கிர்னார் (GIRNAR) கல்வெட்டில், தம்பபண்ணி என 'ட'ண்ணகரத்தில் எழுதப்பட்டுள்ளது. அது மட்டுமல்லாது இச்சொல்லின் 'பண்ணி' என்னும் எழுத்துச் சேர்க்கை, "ப + அனுஸ்வாரம் + ணி" என்னும் அமைப்பில் எழுதப்பட்டுள்ளது. அனுஸ்வாரம் என்பது எழுத்தல்ல. வடமொழி எழுத்துகளில் 'ட'கர வர்க்க எழுத்துகளில் இரண்டாவதான 'ட' எழுத்தின் சிறிய வடிவமே அனுஸ்வாரமாகப் பயன்படுத்தப்படுகிறது. இந்த 'ட'கரம் ஒரு பெரிய வடிவ வட்டம் என்றால், அனுஸ்வாரம் என்பது ஒரு சிறிய வடிவ வட்டமாகும். ஓர் எழுத்தின் முன்னொட்டாக அது எழுதப்பெறும்போது அவ்வெழுத்தின் இரட்டிப்பாகவோ, அல்லது மெல்லோசையாகவோ ஒலிக்கும். அவ்வாறே, "ப + அனுஸ்வாரம் + ணி" என்பது "பண்ணி" என அமைந்தது. தமிழில் க-ங, ச-ஞ, ட-ண த-ந ஆகிய இசைவெழுத்துகளைப் போல

அனுஸ்வாரம் பயன்படுகிறது எனவும் கூறலாம். எடுத்துக்காட்டாக "ச + அனுஸ்வாரம் + கு" என்பது "சங்கு" என அமையும்.

த்வெ - இரண்டு என்னும் பொருளுடைய சொல்; இரண்டு வகையான மருத்துவம் பற்றிக் கல்வெட்டு குறிப்பிடுவது. மனிதர்க்கும், விலங்குகளுக்கும் ஆனது.

சிகீச்ச - நாம் தற்போது தமிழிலும் பரவலாகப் பயன்படுத்தும் 'சிகிச்சை' என்னும் வடசொல்.

மநுஸ - மனித(ன்) என்பதன் மாற்று வடிவம். மனுசன் என்று நாட்டுப்புறங்களிலும் வழங்கும் எளிய சொல்.

பஸூ - பசு என நாம் வழங்கும் மற்றோர் எளிய சொல். ஆனால், விலங்கு என்னும் பொருளுடையது. முனைவர் பவானி அவர்கள் தம் கட்டுரையில் "பஸீ" என எழுதியுள்ளார்.

ஒஸூதாநி - ஔஷத என்னும் வடசொல்லின் பிராகிருத வடிவமாகலாம். முனைவர் பவானி அவர்கள் தம் கட்டுரையில் "ஔஸீதானி" என எழுதியுள்ளார். அசோகன் பிராமியில் 'ஔ' எழுத்து இல்லை எனத்தோன்றுகிறது. உறுதி செய்யவேண்டும்.

மூலாநி - மூலம் - நிலத்தடியில் இருக்கும் வேர் அல்லது கிழங்கைக் குறிக்கும் சொல். இங்கே மருத்துவ வேரைக் குறிக்கிறது எனலாம்; பிரின்செப் அவர்களும் 'ROOTS' என்றே குறிப்பிடுகிறார்.

கூபா - பிரின்செப் 'WELL' - கிணறு எனக்குறிக்கிறார். கூவல் என்பது தமிழிலும் கிணற்றைக் குறிக்கும் ஒரு சொல் என்பது கருதுவதற்குரியது. (கொங்கு நாட்டில் காஞ்சிக்கோவில் என்றோர் ஊர் உள்ளது. இப்பெயர் 'காஞ்சிக்கூவல்' எனபதன் திரிபாகலாமோ என்னும் ஐயம் எழுகிறது.)

யோன ராஜா - யோன என்பது 'யவன' என்பதன் இன்னொரு வடிவம். கிரேக்க, ரோம நாட்டாரை 'யவனர்' என்று பழங்காலத்தில் தமிழர் அழைத்தனர். சங்ககால நூல்களில் 'யவனர்' பற்றிய குறிப்புகள் உள்ளன.


துணையாக நின்றவை:

1 CORPUS INSCRIPTIONUM INDICARUM - Vol-I by A. CUNNINGHAM

2 தமிழ் - பிராமி கல்வெட்டுகள் - தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை; முதல் பதிப்பு-2006.

3 இணையம் - விக்கிப்பீடியா



தொடர்பு: துரை.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.

doraisundaram18@gmail.com, அலைபேசி : 9444939156.

## 9. தூத்துக்குடியில் கி.பி. 17ம் நூற்றாண்டு டச்சு கிழக்கிந்திய கம்பெனியின் செயலாக்கம்

– *முனைவர்.க.சுபாஷிணி*

கி.பி. 1658 முதல் 1661 வரையிலான பாதிரியார் பிலிப் பால்டியூஸ் அவர்களது குறிப்புக்கள் தூத்துக்குடி பரதவ மக்களின் சமூக நிலையைப் பற்றிய முக்கியத் தரவுகளை வழங்குகின்றன.

டச்சுக்காரர்கள் போர்த்துக்கீசியர்களிடமிருந்து தூத்துக்குடி துறைமுகப் பகுதியைக் கைப்பற்றிய பின்னர், அங்கிருந்த தேவாலயங்களிலிருந்த கிருத்துவ தெய்வ வடிவங்களை அகற்றி தேவாலயத்திற்குள் கிருத்துவக் கோட்பாட்டின் 10 கட்டளைகளைப் பிரதானமாக வைத்து கிருத்துவ நெறிகளை வளர்க்கும் முயற்சிகளை மேற்கொள்ள முயன்றிருக்கின்றனர். அதுமட்டுமன்றி இரு தரப்புக்கும் இடையிலான போரின் போது தேவாலயம் ஓரளவு சேதமும் அடைந்திருந்தது. இது தூத்துக்குடி பரதவ மக்களுக்கு டச்சுக்காரர்கள் மேல் பெரும் கோபத்தை ஏற்படுத்தியது என்று பதிவு செய்கிறார் பால்டியூஸ். தேவாலயத்தின் மணியை அடித்து மக்களை ஒன்று திரட்டி தேவாலயத்திற்கு அழைத்து டச்சுக்காரர்கள் புதிய முறையில் வழிபாட்டை அறிமுகப்படுத்திய பொழுது, மக்கள் டச்சுக்காரர்களை தமது எதிரிகளாகப் பார்ப்பதாகக் கூறியதைப் பாதிரியார் பால்டியூஸ் பதிகின்றார்.

தனது சமய முயற்சி தூத்துக்குடியில் தோல்வியடைந்ததை ஏற்றுக்கொண்டு அங்கிருந்து அவர் வேறு பகுதிக்குச் சென்ற பின்னர் ரெவரண்ட் ஜோன் ஃபெரைரா அல்மெய்டா (Rev. John Fereira Almeyda) என்ற லிஸ்பன் போர்த்துகல் நாட்டைச் சேர்ந்த போர்த்துக்கீசியர் அங்கு சமய போதனை செய்ய வந்ததாகவும், ஆனால் அவரும் தனது முயற்சியில் தோல்வியடைந்ததாகவும் குறிப்பிடுகின்றார். அதுமட்டுமன்றி அவர் மீது

நம்பிக்கையில்லாத் தீர்மானம் எடுக்கப்பட்டு தனது சமயத்திலிருந்து விலகியவர் எனக் குற்றம் சுமத்தப்பட்டதாகவும், அது மட்டுமன்றி அவரது உருவ பொம்மை கொடும்பாவி கோவாவில் எரிக்கப்பட்டதாகவும் அறிகின்றோம். ஆக, இக்காலகட்டத்தில் போர்த்துக்கீசியர் அறிமுகப்படுத்திய கத்தோலிக்க கிருத்துவமே இப்பகுதியில் ஆழமாக வேரூன்றி இருந்தது என்று அறியமுடிகின்றது.

தூத்துக்குடி பரதவ மக்களின் முக்கியத் தொழிலாக அன்றைய நிலையில் முத்துக்குளித்தலும் மீன் பிடித்தலும், கைத்தறி நெய்தலும் இருந்தன. இன்று முத்துக்குளித்தல் பெருமளவில் குறைந்து விட்டது என்றாலும் ஆழ்கடலில் மூழ்கி சங்கெடுக்கும் தொழில் இன்றும் நடைபெறுகின்றது.

முத்துக்களைப் பற்றி பாதிரியார் பால்டியூஸ் இப்படி விவரிக்கின்றார். முத்துக்கள் ஒரு வகை சிப்பி ஓட்டுக்குள் இருக்கும். இவ்வகை சிப்பிகளைச் சாப்பிட முடியாது. ஓரளவு ஆழ்கடலுக்குள் மூழ்கிச் சென்று தான் இந்த சிப்பிகளைப் பொறுக்கி எடுத்து வர வேண்டும். முத்து எடுத்தல் தொழில் என்பது, ஆண்டின் எல்லா நாட்களிலும் அனுமதிக்கப்படுவதில்லை. குறிப்பிட்ட சில மாதங்களில் தான் இவை நடைபெறும். சில நேரங்களில் சிப்பிக்குள் மணல் மட்டுமே நிறைந்திருக்கும். முழுமையாகத் தயாராகாத நிலையிலேயே எடுக்கப்பட்ட சிப்பிகள் இவை. இவற்றினால் பலனில்லை. முத்துக்குளிக்கும் பரதவர்கள் திறமையானவர்கள். அவர்கள் ஒரு சில சிப்பிகளை மட்டும் முதலில் கொண்டு வந்து சோதித்து பின்னர் எப்பகுதியில் சிப்பிகளைப் பொறுக்கி எடுக்கலாம் என முடிவு செய்து கொள்வார்கள். அப்படி முத்துக்கள் தயாரான சிப்பிகள் இருப்பது தெரிந்து விட்டால் அவர்கள் குடும்பம் குடும்பமாக வந்து கடற்கரை பகுதிகளில் கூடாரம் அமைத்துத் தங்கி விடுவார்கள். முத்துக்குளித்தல் காலகட்டம் முடிவுக்கு வரும் வரை அவர்கள் அங்கேயே தங்கியிருப்பார்கள்.

டச்சு கிழக்கிந்திய கம்பெனி இவர்களது ஆழ்கடல் முத்துக்குளித்தல் தொழிலுக்குச் சில பாதுகாப்பு முயற்சிகளை அச்சமயத்தில் ஏற்படுத்தித் தந்ததாகவும், இதனால் முத்துக்குளித்தல் வியாபாரத்தில் வரும் வருமானத்தில் ஒரு குறிப்பிட்ட பகுதியை அவர்களுக்கு மக்கள் வழங்கினர் என்றும் அவரது குறிப்புக்கள் சொல்கின்றன. ஆக, டச்சு கிழக்கிந்திய கம்பெனிக்கு வருமானம் ஈட்டும் ஒரு பகுதியாக இப்பகுதி இருந்துள்ளதை நாம் மறுக்க முடியாது.

பொதுவாகவே பரதவ மக்கள் தூத்துக்குடி சந்தையிலேயே தங்கள் முத்துக்களை அன்று வியாபாரம் செய்தனர். பல நாட்டு வணிகர்களும் அப்பகுதிக்கு வந்து முத்துக்களை வாங்கிச் செல்வது இயல்பாக நடந்திருக்கின்றது. முத்துக்களை நீக்கிய உடைந்த சிப்பிகளின் துகள் ஐரோப்பாவிற்கு ஏற்றுமதி செய்யப்பட்டது. இவை ஒருவித மருந்து தயாரிப்பிற்குப் பயன்பட்டதாகத் தெரிகின்றது.

தூத்துக்குடியில் மேலும் ஒரு முக்கியத் தொழிலாக நீண்ட காலம் கைத்தறி தொழிலிருந்தது. இதன் சான்றாக சாயர்புரம் பகுதியில் இன்றும் தறிகள் இயங்கும் ஒலியை நாம் கேட்கின்றோம். விவசாய நிலங்களில் அரிசி மற்றும் காய்கறி உற்பத்தியும் தூத்துக்குடி பகுதியில் மக்களின் தொழிலாக இருந்தது என்று பாதிரியார் பிலிப் பால்டியூஸ் சுட்டிக்காட்டுகின்றார்.

தூத்துக்குடி மாவட்டத்தில் 19ம் நூற்றாண்டில் இறுதியில் நிகழ்த்தப்பட்ட ஆதிச்சநல்லூர் அகழ்வாய்வுகள் தொடங்கி அண்மைய அகழாய்வுகள் வரை இப்பகுதியில் பல்வேறு இனக்குழு மக்கள் வந்து புழங்கிச் சென்றதற்கான நீண்ட கால சான்றுகளைப் பறைசாற்றுகின்றன. அதன் தொடர்ச்சியினைப் பாதிரியார் பால்டியூஸின் குறிப்புக்களின் வழி கி.பி 17 வாக்கிலும் காண்கின்றோம். இதன் அடிப்படையில் நோக்கும் போது தமிழகத்தின் வரலாற்றில் மிக முக்கிய இடம் பிடிக்கும் ஒரு மிக முக்கிய நகரங்களில் தூத்துக்குடி சிறப்பிடம் பெறுகின்றது. இங்கு இதுகாறும்



நிகழ்த்தப்பட்ட தொல்லியல் அகழ்வாய்வுகளும் சரி, சமூகப் பண்பாட்டுத்தளத்திலான ஆய்வுகளும் சரி, மிகச் சிறிய அளவிலேயே நிகழ்த்தப்பட்டுள்ளது என்றே கருதக் கூடியதாக அமைகின்றது. இது வருத்தப்பட வேண்டிய விடயம். மிக விரிவான அகழாய்வுப் பணிகளும் மக்கள் வாழ்வியல் கூறுகளை வெளிப்படுத்தும் சமூக மானுடவியல் கண்ணோட்டத்திலான ஆய்வுகளும் அறிவியல்பூர்வமான கருதுகோள்களின் அடிப்படையில் இப்பகுதியில் நிகழ்த்தப்பட வேண்டிய தேவை இருக்கின்றது. இதனைத் தமிழக கல்வி ஆய்வு நிறுவனங்களும், தமிழக அரசின் கீழ் இயங்கும் தொல்லியல் துறையும் கவனத்தில் எடுக்க வேண்டியது மிக அவசியம்.

குறிப்பு: "A Description of EAST INDIA Coast of MALABAR and CORMANDEL with their adjacent Kingdoms & Provinces & of the Empire of CEYLON and of the Idolatry of the Pagans in the EAST INDIES" - Philip Baldaeus, Minister of the Word of God in Ceylon, Printed in Amsterdam, 1672.

தொடர்பு: முனைவர்.க.சுபாஷிணி (ksubashini@gmail.com)

## 10. சற்று அரிதாய் ஒரு கல் தொட்டி

*— துரை.சுந்தரம்*

முன்னுரை:

ஜூன், 2019 10-ஆம் நாள். நம்பியூரிலிருந்து ஹரி கிருஷ்ணன் என்னும் இளைஞர் தொலைபேசியில் அழைத்துப்பேசினார். தாம் நம்பியூருக்கருகில் இருக்கும் கிடாரை என்னும் ஊரைச் சேர்ந்தவர் என்றும், தொல்லியலில் ஆர்வம் உண்டு என்றும், தம் ஊர்ப்பகுதியில் சில கல் தொட்டிகளைக் கண்டறிந்து வைத்துள்ளதாகவும், அவற்றில் இரண்டு தொட்டிகளில் எழுத்துப் பொறிப்புகள் இருப்பதாகவும் கூறி இக்கட்டுரை ஆசிரியரை நேரில் வந்து பார்க்கும்படிக் கேட்டுக்கொண்டார். கிடாரை என்னும் ஊர்ப்பெயரே சற்று வியப்பை அளித்து ஆர்வத்தை ஏற்படுத்தியது. கேள்விப்பட்டிராத ஒரு பெயர். கொங்குப்பகுதியில் மழைக் காலம் என்பதால் ஜூன் மாதத்தில் நம்பியூர் செல்ல இயலாது போனது. ஜூலை மாதம் 24-ஆம் நாள் கட்டுரை ஆசிரியர் நம்பியூர் சென்று கல் தொட்டிகளைப் பார்வையிட்டதில் புதிய செய்தி ஒன்றைத் தெரிந்து கொள்ளும் வாய்ப்புக் கிடைத்தது. அது பற்றிய பகிர்வு இங்கே.

கல் தொட்டிகள்:

வரலாற்றில் கொங்குப்பகுதி, கால்நடை வளர்ப்பு மற்றும் மேய்ச்சல் தொழிலுக்குப் பெயர் பெற்றது. “ஆ கெழு கொங்கு” என்னும் இலக்கிய வரி பலரும் அறிந்த ஒன்று. எனவே, ஆங்காங்கே, சிற்றூர்கள் பலவற்றில் கால்நடைகள் நீர் அருந்த வகை செய்யும் கல் தொட்டிகள் இருப்பதைக் காணலாம். இதில் வியப்பொன்றுமில்லை. அவற்றில் ஒரு சில கல் தொட்டிகளில் எழுத்துப் பொறிப்புகளும் இருந்துள்ளன. அக் கல்தொட்டிகளை அமைத்துக் கொடுத்தவர் பெயர் பொறிக்கப்பட்டவையாக அவை பெரும்பாலும் அறியப்படுகின்றன.

சாலைவழி நடைப்பயணம்:

மேலே குறிப்பிட்ட கல்தொட்டிகள் ஊருக்குள் காணக்கிடைப்பவை. இவ்வகைக் கல்தொட்டிகள் தவிர வேறுவகைக் கல்தொட்டிகளும் உண்டு. அவை, சாலைப் புறங்களில் காணப்படும் கல்தொட்டிகள். பழங்காலத்தில், சாலைப்போக்குவரத்தில் இன்றுள்ளவாறு வண்டி-ஊர்திகள் மிகுதியாய் இருக்கவில்லை. சாலைகளில் நடந்து செல்வோர் மிகுதியாய் இருந்தனர். வணிகப்பண்டங்களை ஊர் விட்டு ஊருக்கு எடுத்துச் செல்வோர், மாட்டுவண்டிகளில் எடுத்துச் சென்றனர். சிறு வணிகர்கள் தம் வணிகப் பண்டங்களைப் பொதிகளாகச் செய்து கழுதை அல்லது மாடுகளைச் சுமக்கவைத்துச் சென்றனர். கால்நடைகளை மேய்க்கும் தொழிலிலிருந்தவர்கள் தம் கால்நடைகளை இடம் மாற்றிக் கொண்டு செல்லும்போது சாலைகளில் நடைப்பயணமாகவே செல்வர். கால் நடைகளுக்கான சந்தைகளுக்கும் இவ்வாறே ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்துக்குக் கால்நடைகளை ஓட்டிச் செல்வோருக்கும் நடைப்பயணமே வழி. இவ்வாறாகப் பல்வேறு தரப்பினர்க்கும் சாலை வழி நடைப்பயணமே பயன்பாட்டிலிருந்தது. நடைப்பயணர்கள் மற்றும் கால்நடைகள் ஆகியோரின் நீர் வேட்கையைத் தீர்க்கும் பொருட்டுச் சாலைகளில் ஆங்காங்கே கிணறுகள் அமைத்து அவற்றின் அருகிலேயே கல்லால் சமைக்கப்பட்ட தண்ணீர்த் தொட்டிகளை வைத்து அறச் செயல்களில் ஈடுபட்ட பெரியோர்கள் பலர் ஊர்களில் இருந்துள்ளனர்.

மணியம்பாளையம் கல் தொட்டி:

நம்பியூர்-பெருமாநல்லூர் சாலையில் அமைந்துள்ள ஊர் மணியம்பாளையம். நம்பியூரிலிருந்து ஆறு கி.மீ. தொலைவில் உள்ளது. இங்கிருந்து பெருமாநல்லூர் பதினைந்து கி.மீ. தொலைவில் உள்ளது. 15 கி.மீ. என்று பொறிக்கப்பட்ட நெடுஞ்சாலைக் கல்லின் அருகில்தான் கிடாரை ஆர்வலர் கூறிய கல் தொட்டியும் காணப்படுகிறது. சாலையோரத்தில், ஆனால் சாலைக்குச் சற்றுத் தள்ளி, அம்மன் கோயிலுக்கு முன்புறத்தில் மண் தரையில் இந்தக் கல் தொட்டி உள்ளது. வெள்ளை நிறக்கல்லால் அமைக்கப்பட்ட தொட்டி. கல்லின் பரப்புச் செம்மையாக இல்லை; கரடு

முரடாக உள்ளது. தொட்டியின் முன்புற நீளவாட்டுப்பகுதியில் ஐந்து வரிகளில் எழுத்துகள் பொறிக்கப்பட்டுள்ளன. எழுத்துக்கள் அமைந்த கல் பரப்பும் சமன் செய்யப்படாமல் சிறு சிறு மேடு பள்ளங்களைக் கொண்டுள்ளது. எனவே, எழுத்துகள் சில இடங்களில் படிக்க இயலாதவாறு உள்ளன. கல்தொட்டிக்குத் தொடர்ந்து சுண்ணம் பூசி வந்துள்ளனர். எனவே, எழுத்துகள் சுண்ணப்பூச்சு காரணமாக மறைந்து தெளிவில்லாமல் இருந்தன. உடன் வந்தவர்கள், சுண்ணப்பற்றை நீக்க நீண்ட நேரம் ஆனது. அகற்றிய பின் எழுத்துகள் படிக்கப்பட்டன.

துளையுடன் கூடிய பண்ணையோடிக் கல்தொட்டி



கல்வெட்டுப் பாடம்:

1 துந்துமி வருஷம் ..... மாதம் திறவலூர் யிருக்கு
2 ம் பாலை வேளாள(ரில்)........ணி.... சின்ன
3 ய கவுண்டன் மகன் (மாலை கவுண்டன் பண்
4 ணையோடி வச்ச உபயம்
5 அழகப்பெருமாள் லட்சிக்க

கல்வெட்டுச் செய்திகள்:

கல்வெட்டு, துந்துமி வருடத்தில் பொறிக்கப்பட்டது எனக் கல்வெட்டில் குறிப்புள்ளது. துந்துமி என்கிற துந்துபி ஆண்டு வியாழவட்டத் தமிழ் ஆண்டுப்பட்டியலில் கி.பி. 1862, கி.பி. 1922 ஆகிய இரு ஆண்டுகளில் அமைகிறது. எழுத்தமைதியை அடிப்படையாகக் கொண்டால், கல்வெட்டு

பொறிக்கப்பட்ட ஆண்டு, கி.பி. 1862-ஆம் ஆண்டு எனக்கொள்ள வாய்ப்பு உள்ளது. எனவே, கல்வெட்டு நூறாண்டுக்கு மேல் பழமையானது எனக் கருதலாம். கல்வெட்டில் வருகின்ற திறவலூர் பெருமாநல்லூருக்கருகில் அமைந்த துரவலூர்/தொரவலூர் ஊராகலாம். அவ்வூரைச் சேர்ந்த பாலைகுல வேளாளர்களில் சின்னய கவுண்டர் என்பாரின் மகன் மாலைக்கவுண்டர் என்பார் இந்தக் கல்தொட்டியைச் செய்துகொடுத்துள்ளார் என்று கல்வெட்டு கூறுகிறது. இந்தத் தர்மத்தை அழகப்பெருமாள் காக்கவேண்டும் என்று கல்வெட்டு வரி முடிகின்றது. மேற்கண்ட துரவலூரில் இருக்கும் பெருமாள் கோயிலின் இறைவன் பெயரான அழகப்பெருமாள் என்பதுதான் கல்வெட்டிலும் குறிக்கப்படுகிறது. எனவே, கல்வெட்டில் வரும் திறவலூர், தற்போதுள்ள துரவலூரே என்பதில் ஐயமில்லை. காக்கவேண்டும் என்னும் கருத்தைக் கல்வெட்டில் எழுதப்பட்ட “லட்சிக்க” என்னும் சொல்லால் அறிகிறோம். “ரக்ஷிக்க” என்னும் வடமொழிச் சொல்லே "லட்சிக்க" என்று எழுதப்பட்டுள்ளது. 'ர', ‘ல’ ஆகிய இரண்டெழுத்துகளும் தம்முள் இடம் மாறிக்கொள்வது தமிழில் நாம் காணுகின்ற ஒன்றே. கொடை அல்லது தர்மம் என்பதைக் கல்வெட்டில் உள்ள “உபயம்” என்னும் சொல் குறிக்கிறது.

வேளாளர் குலப்பிரிவு - பாலைக் கூட்டம்:

பாலவேளாளர் என்று தற்போது அழைக்கப்பெறும் குலப்பிரிவினர், கல்வெட்டில் குறிப்பிடப்பட்டவாறு முற்காலத்தில் பாலை வேளாளர் எனப்பட்டனர். நம்பியூரில் அமைந்திருக்கும் தான்தோன்றீசுவரர் கோயில் கல்வெட்டுகளில் வேளாளர் குலப்பிரிவைச் சேர்ந்த மேன்மணியர், கழஞ்சியர், சோழர் ஆகியோர் குறிக்கப்பெறுகிறார்கள். 'கொங்கு குலகுருக்கள்' என்னும் வலைப்பூத் தளத்தில், பாலவேளாளர்களாகப் பைத்தலை, வெள்ளேலி, மேல்மணியன், குண்டெலி, கழஞ்சியர் ஆகியோர் குறிக்கப்படுகிறார்கள். இவர்களில், பைத்தலை என்பார் சேவூர்ப் பகுதியிலும், வெள்ளேலி என்பார் தொரவலூரிலும், மேல்மணியன் என்பார் கிடாரையிலும் தற்போது இருப்புக்கொண்டுள்ளனர் என்று மேற்படி வலைத்தளம் குறிக்கிறது. நமது கல்தொட்டி அமைக்கப்பட்ட ஊர் மணியம்பாளையம், மேல்மணிய குலப்பிரிவினரின் பெயரால் அமைந்த ஊராகலாம் எனக் கருத இடமுண்டு.

இக்கருத்துக்குச் சான்றாக இங்குள்ள மக்கள், மேல்மணிய குலப்பிரிவினர் பத்தொன்பதாம் நூற்றாண்டில் இடம்பெயர்ந்து இவ்வூருக்கு அருகில் உள்ள வெள்ளாளபாளையம், கிடாரை ஆகிய ஊர்களில் குடியேறியுள்ளனர் என்று கூறுகின்றனர். கல்வெட்டிலும் கொடையாளி தொரவலூரைச் சேர்ந்த பாலைப் பிரிவினர் என்று குறிப்பிடுவதைக் காணலாம். கிடாரை, மணியம்பாளையம், வெள்ளாளபாளையம் ஆகிய ஊர்கள் நம்பியூரைச் சுற்றிலும் மிகுந்த அண்மையில் உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. வெள்ளாளர் புதிதாகக் குடியேறிய பகுதி என்பதாலேயே வெள்ளாளபாளையம் என்று ஊர்ப்பெயர் அமைந்தது எனலாம். வெள்ளாளபாளையத்திலும் ஒரு கல்தொட்டி எழுத்துப் பொறிப்புகளுடன் இருப்பதைப் பார்த்தோம். ஆனால், முற்றிலும் கல் பொரிந்து போனதால் எழுத்துகள் அழிந்துவிட்டன.

கல்தொட்டியின் இன்னொரு பயன்பாடும் அது தெரிவிக்கும் அரிய செய்தியும்:

கல்வெட்டில், கல்தொட்டி என்னும் பெயர் குறிப்பிடப்படவில்லை. மாறாகப் ”பண்ணையோடி” என்னும் சொல் காணப்படுகிறது. “பண்ணையோடி வச்ச உபயம்” என்பது கல்வெட்டுத் தொடர். இங்குள்ள கல்தொட்டி “பண்ணையோடி” என ஏன் குறிப்பிடப்பெறுகிறது என மேலே ஆய்வு செய்யும்போது, இச்சொல் குறித்துக் கல்வெட்டு அகராதியின் துணையை நாடினோம். ”பண்ணையோடி” என்னும் சொல் அதில் காணப்பட வில்லையெனினும், ‘பண்ணை” என்னும் சொல்லுக்கு “நீர்நிலை” என்று பொருள் கொடுத்திருந்ததோடு, அதற்கு எடுத்துக்காட்டாக, கி.பி. 950-ஆம் ஆண்டுக் கல்வெட்டுத் தொடரான “துலாசெய்க்கிறைக்கும் தேயாற பண்ணையினின்றும் தெற்கு நோக்கி” என்பது கொடுக்கப்பட்டிருந்தது. இந்தக் கல்வெட்டு, TRANSACTIONS OF ARCHAEOLOGICAL SOCIETY OF SOUTH INDIA நூலில் உள்ளது. இத்தொடரோடு பண்ணையோடி என்னும் தொடரையும் இணைத்துக் கல்வெட்டு அறிஞர் பூங்குன்றன் அவர்களிடம் கருத்துக் கேட்டபோது, அவர் கூறிய விளக்கம் அரியதோர் செய்திக்கு அடித்தளம் இட்டது.

பண்ணையும் பண்ணையோடியும்:

கிணறுகளில் ஏற்றம் வைத்து நீர் இறைத்த முற்காலத்தில், கவலை (கமலை என்னும் வழக்கும் உண்டு) என்னும் தோல் பை முகந்துவருகின்ற நீர் முதலில் கொட்டப்படும் நீர்த்தொட்டியே பண்ணையோடி என்று வழங்கப்பட்டிருக்கவேண்டும். பண்ணை என்பது நீர்நிலையாகிய கிணற்றைக் குறித்தல் வேண்டும். (இந்த நீர்நிலை, ஒரு சிறிய குளமாகவும் இருக்கலாம். இக்கட்டுரையில் கிணறுதான் களப்பொருள்) பண்ணையோடியாகிய நீர்த்தொட்டியில் சேருகின்ற நீர், தொட்டியின் கீழ்ப்புறத்தில் அமைந்த துளையினூடே வெளியேறிக் கால்களின் வழியே செய் என்னும் வயல் பரப்புக்குப் பாயும் வகையில் நீர் மேலாண்மை அமைப்பு செயல்பட்டது எனலாம். இக்கருத்தை உறுதி செய்யும் வகையான், மணியம்பாளையம் கல்தொட்டியின் கீழ்ப்பகுதியில் துளை அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. வேளாண் தொடர்பான இந்த அமைப்பு ஒரு புதிய அரிய செய்தியாக நம்முன் வெளிப்படுகிறது.

மணியம்பாளையம் ஊர்ப்பெரியவர்கள் கூறுகையில், இக் கல்தொட்டி, அருகில் இருக்கும் கிணற்றுக்கருகில் நீண்ட காலம் இருந்துள்ளதாகவும் தற்போதுதான் இங்கு மாற்றப்பட்டதாகவும் குறிப்பிட்டனர். கிணற்றிலிருந்து ஏற்றம் வழியாக நீர் இறைக்கும்போது பயன்பாட்டிலிருந்த இந்தக் கல்தொட்டிக்குச் சற்று அருகிலேயே கிணறு ஒன்று தற்போதும் உள்ளதைக் காணலாம். ஆனால், பழைய ஏற்றத்தின் அமைப்பு - கல் தூண்கள், அவற்றை இணைக்கும் குறுக்குச் சட்டம், கப்பி, உருளை - ஆகியனவற்றை இன்று காண இயலாது. சுற்றுச் சுவர் எழுப்பப்பட்டுக் கிணற்றின் தோற்றமே முற்றும் மாறியுள்ளது.

பண்ணை என்னும் வழக்கு:

பண்ணை என்னும் சொல் தற்போது வேளாண்(பயிர்) நிலம், வேளாண் தோட்டம் என்கின்ற பொருளில் வழங்குகிறது. ஆனால், சென்ற இரு நூற்றாண்டுகளில் 'பண்ணை' , நீர் தொடர்பாக வழங்கியது என்று இக்கல்வெட்டின் மூலம் அறிகிறோம். இதற்குச் சான்றாக, கோவைக்கருகில்

இருக்கும் வெள்ளலூரில் ஆனைமலையம்மன் கோயிலில் இக்கட்டுரை ஆசிரியர் கண்டறிந்த கல்வெட்டு அமைகிறது.


78. வெள்ளலூர் ஆனைமலையம்மன் கோயில் கல்வெட்டுகள்

ஆவணம் 30, 2019

வெள்ளலூர்க் கல்வெட்டு

கோவிலில், நீர்ப் பயன்பாட்டுக்காகக் கிணறு ஒன்றை வெட்டிக் கொடுத்த செய்தியைக் குறிப்பிடும் கல்வெட்டு, கிணற்றை வெட்டிக் கொடுத்தவர் கிணற்றோடு கூடி “கல்லுப்பண்ணையும்” போட்டதாகக் குறிப்பிடு வதினின்று, ‘பண்ணை” என்னும் சொல் வழக்கில் இருந்துள்ளது என்றும், கல்லால் பண்ணை அமைக்கப்பட்டமை வழக்கம் என்றும் அறிகிறோம். இக்கல்வெட்டு, தொல்லியல் கழகத்தின் 2019-ஆம் ஆண்டுக்கருத்தரங்கில் வெளியிட்ட “ஆவணம்” நூலில் பதிவாகியுள்ளது. வரி 14-15 -இல் ”கல்லுப்பண்ணை” என்னும் சொல்லைக் காண்க. அதன் ஒளிப்படம் பார்வைக்கு:

தொடர்பு: துரை.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.
doraisundaram18@gmail.com, அலைபேசி : 9444939156.

## 11. கோப்பெருஞ்சிங்கனின் அண்ணமங்கலம் கல்வெட்டு

*— கோ.செங்குட்டுவன்*

**“சொக்கப் பல்லவன் வாய் சொல்லும் வன்னிய மணாளன்”**

நீண்டு வளர்ந்த பாறை. அதன் ஒரு முனையில், ஆண் யானையின் பிடரியைக் கவ்வி இருக்கிறது, ஒரு ஆண் சிங்கம். சிங்கத்தின் கண்கள் உருண்டு திரண்டு இருக்கிறது. அதன் ஒருபக்கப் புருவத்தின் மீதுதான் மேற்காணும் வாசகம் கல்வெட்டாக வெட்டப்பட்டு உள்ளது. இதன் காலம் கி.பி.13ஆம் நூற்றாண்டு!

விழுப்புரம் மாவட்டம் செஞ்சி அருகே உள்ள அண்ணமங்கலத்தில் செங்காட்டுக் குன்று என்றும் ஆனைமலை என்றும் அழைக்கப்படும் மலையின் மீதுதான் மேற்காணும் சிற்பமும் கல்வெட்டும் காணப்படுகின்றன.

**யானை: மூன்றாம் ராஜராஜன்.**
**அதன் பிடரியைக் கவ்வி நிற்கும் சிங்கம்: கோப்பெருஞ்சிங்கன்.**

**ஆகா… அழகிய உவமை! அழகான சிற்பம்!**

மாபெரும் வரலாறு இங்கே அமைதியாகக் காட்சி அளிக்கிறது! பாண்டிய மன்னனிடம் தோற்ற சோழப் பெருவேந்தன் மூன்றாம் ராஜராஜன், குந்தள அரசனிடம் ஓடினான். தெள்ளாறு அருகே அவனை வழிமறித்த காடவ மன்னன் கோப்பெருஞ்சிங்கன், சோழ வேந்தனையும் அவன் படையினரையும் சிறைபிடித்தான் என்கின்றன வரலாற்றுக் குறிப்புகள்.

சிறைபிடிக்கப்பட்ட சோழ மன்னனும் அவனதுப் படை பரிவாரங்களும், சேந்தமங்கலம் கொண்டு செல்லப்படுவதற்கு முன்பு அண்ணமங்கலம் மலைக் குகையில் சிறிது காலம் சிறை வைக்கப்பட்டு இருக்கலாம் என்கிறார் அண்ணமங்கலம் அரசு மேனிலைப் பள்ளி தலைமை ஆசிரியரும் செஞ்சிக் கோட்டை தொல்லியல் விழிப்புணர்வு மன்றச் செயலாளருமான திரு.நா.முனுசாமி அவர்கள்.

தன் சொந்த ஊரின் மீதும் அதன் வரலாற்றின் மீதும் இவருக்கு அவ்வளவு ஈடுபாடு: அக்கறை! வரலாற்றுத் தடயங்களைத் தேடி ஊருக்கு வரும் ஒவ்வொருவரையும் சளைக்காமல் மலைக்கு அழைத்துச் சென்று காண்பிக்கிறார், திரு.முனுசாமி.

மலைமீது மட்டுமல்ல, நிலப்பரப்பிலும் ஏரியிலும் வரலாற்றுத் தடயங்கள் நிறைந்த சுரங்கமாக இருக்கிறது அண்ணமங்கலம்.

நீங்களும் ஒரு முறை இங்குப் போய் வரலாம்!

குறிப்பு:
அண்ணமங்கலம்: செஞ்சியிலிருந்து வளத்தி செல்லும் சாலையில் அமைந்துள்ளது.
தலைமை ஆசிரியர் திரு.முனுசாமி அவர்களின் தொடர்பு எண்: 99949 43787

தொடர்பு: கோ. செங்குட்டுவன் (ko.senguttuvan@gmail.com)

## 12. மூவர் கோயில் கொடும்பாளூர்

*— முனைவர். ப. தேவி அறிவுசெல்வம்*

விராலிமலைக்கு அருகே புதுக்கோட்டையிலிருந்து 36 கி.மீ. தொலைவில் திருச்சி-மதுரை சாலையில் கொடும்பாளூர் அமைந்துள்ளது. சங்ககாலம் முதலே புகழ்பெற்ற இவ்வூர் கொடும்பை நகர் என்றும் அழைக்கப்பட்டதை அறிகிறோம்.

கோயில் அமைப்பு:

பத்தாம் நூற்றாண்டில் கட்டப்பட்ட மூவர் கோயிலானது, தெற்கு வடக்காக மேற்கு நோக்கிய நிலையில் இரண்டு கோயில்கள் முழுமையானதாகவும் மற்ற ஒரு கோயில் அடித்தளத்தை மட்டும் கொண்டதாகவும் காணப்படுகின்றது. மூவர் கோயிலின் மூன்று கோயில்களுக்கும் பொதுவான மகா மண்டபம், நந்தி மண்டபம், பலிபீடமும் மற்றும் பிரகார சுற்றில் 16 பரிவார தெய்வங்களுக்கான சன்னிதியின் அஸ்திவாரங்கள் மட்டுமே உள்ளன. மேற்கே ஒரு கோபுரமும் இருந்த அடையாளம் காணப்படுகிறது. இது அதிட்டானம் முதல் கலசம் வரை கல்லாலான கல் கோயிலாகும். இக்கோயில் சதுரவடிவ இரு தள விமான அமைப்பு உடையதாக உள்ளது. முழுமையாக உள்ள ஒரு கோயிலின் கருவறை உள்ளே மட்டும் ஆவுடையார் இல்லாத லிங்க வடிவில் மூலவர் உள்ளார். விமானத்தின் உள் பகுதியானது உள் கூடாகக் காணப்படுகிறது.

சிற்பங்கள்:

இந்த இரண்டு கோயில்களின் கோட்டங்களிலும் மற்றும் விமானத்திலும் காலசம்ஹாரமூர்த்தி, கங்காதரர்,அந்தகாசுர வதை மூர்த்தி, உமா சகிதர், கஜசம்ஹாரர், அர்த்தநாரீஸ்வரர், போன்ற சிற்பங்கள் உள்ளன. கண்ட பகுதியின் நான்கு மூலைகளிலும் நந்தி காணப்படுகிறது. துவார பாலகர்களும் மகரத் தோரணமும் சிறப்பாக வடிவமைக்கப்பட்டுள்ளன.



மூவர் கோயில் - சிற்பக்கலை சிறப்பு

அதிட்டானத்தின் சிறப்பு:

பாதபந்த அதிட்டானத்தில் ஜகதியானது பத்ம ஜகதியாகவும், குமுதம் விருத்தம் ஆகவும் அலங்காரம் செய்யப்பட்டுள்ளது. பட்டிகை வரி வியாள வரியாகக் காட்டப்பட்டுள்ளது. கருவறை சுவரின் மேலே பூதகண வரிசை அமைக்கப்பட்டுள்ளது.

இருபதாம் நூற்றாண்டில் இக்கோயில் புதுப்பிக்கப்பட்டுள்ளது. புதுப்பிக்கப்படும் போது கட்டுமான கற்களை ஒன்றின் மீது ஒன்றாக அடுக்கி வைத்திருப்பது சில இடங்களில் பொருத்தமில்லாததாகக் காணப்படுகிறது.

தொடர்பு:
முனைவர். ப. தேவி அறிவுசெல்வம்,
மருந்தாக்கவியல் பேராசிரியை மதுரை.
https://www.facebook.com/devipharm

## 13. கல்வெட்டுகளில் உப்பளம்

*— துரை.சுந்தரம்*

முன்னுரை:

கல்வெட்டுகள் தொடர்பாகப் பல நூல்களைப் படிக்கும்போது, கல்வெட்டுகளில் பேசப்படும் முதன்மைப் பொருள் நெல்லாகவே இருக்கக் கண்டிருக்கிறேன். இடையிடையே, உப்பு, உப்பளங்கள் பற்றிய செய்தி எங்கேனும் காணப்படுகின்றதா என்னும் எண்ணம் தோன்றும். அவ்வப்போது திருவாங்கூர் தொல்லியல் வரிசை (TRAVANCORE ARCHAEOLOGICAL SERIES) நூலினைப் படித்தல் வழக்கம். அண்மையில், மேற்படி நூலின் எட்டாம் தொகுதியினைப் படிக்கையில் - தொகுத்துப் பதிப்பித்தவர் தொல்லியல் அறிஞர் கோபிநாத ராவ் அவர்கள் (T.A. GOPINATHA RAO) - கன்னியாகுமரியில் சோழர் கல்வெட்டு ஒன்றில் உப்பளம் பற்றிய செய்தியைக் காணநேர்ந்தது. அக்கல்வெட்டுச் செய்தியினைப் பற்றிய பகிர்வு இங்கே.

உப்பும் உப்பளமும்:

உப்பு. ஓர் எளிய பொருள் என்று புறந்தள்ள இயலாது. உப்பின்றி உணவில்லை. உணவுண்டு உயிர்வாழ உப்பு இன்றியமையாதது. உண்மையில் அதன் மதிப்பு பெரிது. உப்பின் பயன்பாடு பற்றிப் பேராசிரியர் தொ.பரமசிவன் அவர்கள் கூறுவதைக் காண்க:

"உப்பு விற்பவர்களைச் சங்க இலக்கியத்தில் உமணர்கள் என்று அழைக்கிறார்கள். நெல்லின் நேரே வெண் கல் உப்பு என, உப்பு விலையும் நெல் விலையும் சமமாக இருந்திருக்கிறது. சோழர் காலத்தில் நெல்லின் விலையும் உப்பு விலையும் அருகருகே இருந்தன. பழந்தமிழ் நாட்டின் மிகப் பெரிய சந்தைக்குரிய உற்பத்திப் பொருளாக உப்புதான் விளங்கியிருக்கிறது. உப்பு விளையும் களத்துக்கு அளம் என்று பெயர். பெரிய உப்பளங்களுக்கு அரசர்களின் பட்டப் பெயர்களைச் சூட்டியிருக்கிறார்கள். பேரளம், கோவளம்

(கோ அளம்) என்ற பெயர்களில் வழங்கப்பட்டுள்ளன. சோழ, பாண்டிய அரசர்கள் உப்புத் தொழிலை அரசின் கட்டுக்குள்ளேயே வைத்திருந்தார்கள்" (எனது இந்தியா- ஜூனியர் விகடன் 29-பிப்ரவரி-2012.)

மேலே உமணர்கள் பற்றிய குறிப்புள்ளது. சிறுபாணாற்றுப்படை இலக்கியத்தில், உப்புப் பண்டமேற்றிய மாட்டு வண்டிகளில் (நோன் பகட்டு ஒழுகை) உமணர் உப்பு விற்கச் சென்றதாகக் குறிப்பு வருகிறது. உமணர்களின் மனைவியர் உமட்டியர் என்றழைக்கப்பெற்றனர். உமட்டியரும் அவர் தம் புதல்வரும் உமணரோடு உடன் சென்றனர். உமட்டியர் ஈன்ற புதல்வரோடு மந்திகள் கிலுகிலுப்பை விளையாடும் காட்சியைச் சிறுபாணாற்றுப்படை காட்டுகிறது.

"நோன்பகட் டுமண ரொழுகையொடு வந்த
மகாஅ ரன்ன மந்தி.......
....... உமட்டிய ரீன்ற
கிளர்பூட் புதல்வரொடு கிலுகிலி யாடும்"
- சிறுபாணாற்றூப்படை (55-61)

தொ.பரமசிவன் அவர்கள், பழந்தமிழ் நாட்டின் மிகப்பெரிய சந்தை உற்பத்திப்பொருளாக உப்பு விளங்கியதைக் குறிப்பிடுகிறார். உப்பு வணிகர்கள் வண்டிகளில் (CARAVAN) பயணம் செய்து வணிகம் செய்துள்ளனர். இவ்வணிகர்கள், கல்வெட்டுகளில் குறிப்பிடப்பெறும் பதினெண்விஷயத்தார் என்னும் வணிகக் குழுவினரைச் சேர்ந்தவராக இருந்திருக்கலாம்.

"தமிழக ஊரும் பேரும்" என்னும் நூலில் பேராசிரியர் ரா.பி. சேதுப்பிள்ளையவர்கள், உப்பு நிலத்தைக் களர் நிலம் என்று கூறுவர் என்றும், உப்பு விளையுமிடம் அளம் எனப்படும் என்றும், தஞ்சையில் நன்னிலத்துக்கருகில் பேரளம் என்னும் ஊருண்டு என்றும் கூறுகிறார்.

சம்பளம் என்னும் சொல் பற்றிய விளக்கத்தைப் பாவாணர் கூற்றால் அறியலாம். ”பழங்காலத்தில் சம்பளம் கூலமும் (கூலமாகக் கொடுக்கப்படுவது கூலி.) உப்புமாகக் கொடுக்கப்பட்டது. கூலம் என்பது தானியம் . கூலத்திற் சிறந்தது நெல்லாதலின், நெல்வகையிற் சிறந்த சம்பாவின் பெயராலும், உப்பின் பெயராலும், சம்பளம் என்னும் பெயர் உண்டாயிற்று. சம்பும் அளமும் சேர்ந்தது சம்பளம். சம்பு என்பது சிறந்த நெல்வகைக்கும் சிறந்த கோரை வகைக்கும் பொதுப்பெயர்.

ஓங்கிவளர்ந்த சம்பாநெற்பயிரும் சம்பங்கோரையும் ஒத்த தோற்றமுடையனவாக இருத்தல் காண்க.நெல்லைக் குறிக்கும் சம்பு என்னும் பெயர் இன்று சம்பா என வழங்குகின்றது. உகரவீற்றுச் சொற்கள் ஆகார வீறு பெறுவது இயல்பே.
எ-டு: கும்பு - கும்பா, தூம்பு - தூம்பா, குண்டு - குண்டா. கும்புதல் = திரளுதல்.”

கடலை ஒட்டிய கழிமுகப்பகுதி காயல் எனப்படும். இக்கழிமுகப்பகுதி உவரி நீர் நிரம்பிய பரப்பை உடையது. இவ் உவரி நீர்ப்பரப்பில் உப்பு விளைவிக்கப்படுவதால், காயல் அல்லது கழி என்னும் பெயர் உப்பளம் என்னும் பொருளிலும் வழங்கும். கடற்கரையை ஒட்டி அமைந்த இவ் உப்பளங்கள் தமிழ் நாட்டில் சோழ நாட்டிலும் பாண்டிய நாட்டிலும் மிகுதியும் இருந்துள்ளன எனலாம். உப்பு விளைவிக்கும் இடங்களாகத் தற்காலத்தே எண்ணூர், மரக்காணம், கோவளம், வேதாரண்யம், தூத்துக்குடி ஆகிய ஊர்கள் அறியப்படுகின்றன.

கன்னியாகுமரி-குஹநாதசுவாமி கோயில் கல்வெட்டு:

குமரி என்றதும் நாம் அறிந்தது குமரிப் பகவதியம்மன் கோயிலே. குமரி நகரில் குஹநாதசுவாமி கோயில் என்றொரு கோயிலும் உள்ளது. இங்கே தமிழில் பொறிக்கப்பட்ட ஆறு கல்வெட்டுகள் உள்ளன. ஒரு கல்வெட்டு, முதலாம் இராசேந்திரனின் ஆட்சியாண்டான கி.பி. 1036-ஆம் ஆண்டைச் சேர்ந்தது. அதில், இராசேந்திரனுக்கு உணவு சமைக்கும் (அடும்) பணிப்பெண் (பெண்டாட்டி) சோழ குலவல்லி என்பவள் ஆவாள் என்ற செய்தி

கன்னியாகுமரி-குஹநாதசுவாமி கோயில்

## கல்வெட்டுப்பாடம்:

**Text** [1]

1. ஸ்ரீ [||*] வீரபாண்டியன் தலை[யு]ம் சேரலன் நாடும் இலங்கையும் தண்டாற் கொண்ட [கோ]ராஜகேச[ரி]-
2. பந்மரான உடையார் ஸ்ரீ ராஜாதிராஜதேவர்க்கு யாண்டு முப்பதாவது ராஜராஜப்பாண்-டிநாட்டு உத்தமசோழவளநாட்டு புறத்-
3. தாயநாட்டுக் கழிக்குடி ஸ்ரீ வல்லவப்பெருஞ்சாலையா[ன] ராஜராஜ பெருஞ்சாலைக்கு நாஞ்சிநாட்டு மணற்குடியான மதுரி-
4. பா[ள] (2) குலகாலப்பேரளத்து நெ(ய்)தலுறை சொன்னுறுப்பு முட்டிடையமை-யில் ராஜாதிராஜதேவர்க்கு உலகுடையபிராட்டியா-
5. ர் திருப்பள்ளித் தொங்கலுடையான் திட்டையபிருலகேசரியான பவித்திரமாணிக்-கத்தொங்கப்பே[ர*]ரையன் விண்ணப்பஞ் செய்துகொடுவந்த திரு-
6. முகப்படி [||*] கோனேர் இன்மைதொண்டான் ராஜராஜப்பாண்டிநாட்டு ராஜராஜத்-தென்னாட்டு உப்பளக்கழுக்கு (3) கூற செய்வார் கழுக்கு (4) கண்காணி செய்வார் கழுக்-கும் (5) குமரி ஸ்ரீ-
7. வல்லவப்பெருஞ்சாலையான ராஜராஜப்பெருஞ்சாலைக்கு உத்தமசோழவளநாட்டு நாஞ்சி-நாட்டு மணற்குடியான மயில்வால (2) குலகாலப்பேரளத்து உப்புமு-
8. தலிலும் செலவிலும் கலத்துவாய் நாழிகெய்புறெகொண்டு இச்சாலைக்கு முன்புவிவ-ர்த்தம் செலு[த்]திவந்தமையில்லிப்போது உப்பு உறை பிடிநது.
9. கொள்ள [வி?] டுகவென்று கேட்டோம் [||*] முன்பு இப்படி[ச்] செய்-
10. து வரு[ம்] ...ில் உறை உப்பு மு[த]லிலும் செலவிலும் கல-
11. த்துவ[ாய்] நா [ழி] உறை உப்பு ராஜராஜன் பெருஞ்சாலை ச-
12. . . வச[ம] . . டட[ு]டுக்க [எ]ன்று திருமந்திரவோலை செம்பியன் தென்-
13. . னாட்[டு]க்கோனேர் எழுத்தினால் திருமுகம் பிரசாதஞ்செய்த[ரு]ளி வச்ச திருமுக-ப்படி.

மணற்குடி உப்பளம் குஹநாதசுவாமி கோயில் கல்வெட்டு

காணப்படுகிறது. மற்றொரு கல்வெட்டு, உப்பளம் பற்றிப் பேசுகிறது. இக்கல்வெட்டு, மேற்படிக் கோயிலின் கருவறையின் மேற்கு அதிட்டானத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. கல்வெட்டில் குறிக்கப்பெறும் அரசன் இராசகேசரிவர்மன் இராஜாதிராஜதேவர். ஆட்சியாண்டு முப்பது. இவன், வீரபாண்டியன் தலையும், இலங்கையும், சேரலன் சாலையும் கொண்டவனாகக் குறிக்கப்பெறுகிறான்.

குமரி ஸ்ரீ வல்லபப் பெருஞ்சாலை:

கல்வெட்டில், குமரி நகரின் பழம்பெயராகக் கழிக்குடி என்னும் பெயர் குறிக்கப்படுகிறது. கழி என்பது உப்பங்கழியைக் குறிக்கும் சொல்லாதலால், குமரியின் சுற்றுப்புறத்தில் உப்பளங்கள் மிகுந்திருந்தமையின் குமரி என்னும் இயற்பெயருடன் கழிக்குடி என்னும் சிறப்புப் பெயரும் அமைந்ததுபோலும். குமரி, பாண்டிய நாட்டைச் சேர்ந்திருந்தது ஆனால், பாண்டிய நாடு சோழர் ஆட்சிக்குக் கீழ் இருந்தமையால், பாண்டியநாடு இராஜராஜனின் பெயரால் இராஜராஜப்பாண்டி நாடு என அழைக்கப்பெற்றது. சோழர் கால நாட்டுப்பிரிவுகளில், குமரி நகர் இருந்த பகுதி புறத்தாய நாடு என்னும் நாட்டுப்பிரிவில் அடங்கியிருந்தது. புறத்தாய நாடும், உத்தம சோழ வளநாடு என்னும் பிரிவின் கீழ் அமைந்திருந்தது.

குமரியில் ஒரு சாலை, ஸ்ரீவல்லபப் பெருஞ்சாலை என்னும் பெயரில் இயங்கிவந்துள்ளது. பாண்டியர் காலத்தில், பாண்டிய அரசன் ஸ்ரீவல்லபன் பெயரால் அமைந்த இச்சாலை, முதலாம் இராசராசனின் ஆட்சிக்காலத்தில் பெயர் மாற்றம் பெற்றது. புதிதாக ஆட்சியைப் பிடித்த அரசர்கள், ஊர்களின் பெயர்கள் போன்றவற்றை மாற்றித் தம் பெயரிட்டு அழைத்தல் மரபு. இருப்பினும், மக்கள் வழக்கினின்று ஒரு பழம்பெயர் விரைவில் அழிந்துபோகாதென்னும் அடிப்படையில் சிறிது காலம் பழம்பெயரோடே அதன் புதுப்பெயரும் வழக்கில் இருக்கும். மிக அரிதாக, காலப்போக்கில் புதுப்பெயர் மறைந்து அதன் பழம்பெயரே நீடித்து நிலைத்துவிடுதலும் நேர்கிறது. எடுத்துக்காட்டாக, கர்நாடகத்தில், மைசூருக்கருகில் உள்ள தலைக்காடு, சோழர் ஆட்சியில் தழைக்காடான இராசராசபுரம் என்னும் பெயரில் வழங்கினாலும், பின்னர் அதன் பழம்பெயரே

நிலைத்துவிட்டதைக் காண்கிறோம். இன்றும் தலைக்காடு என்னும் பெயரே உள்ளது.

சாலை என்பது ஒரு பயிற்சி நிலையம் என்று கொள்ளலாம். கல்வி, அரசியல் சார்ந்த மேலாண்மை, போர்ப்பயிற்சி ஆகிய அனைத்தும் ஒருங்கிணைந்த ஒரு சிறப்பு வாய்ந்த இப்பயிற்சிச் சாலைகளை இன்றுள்ள IAS ACADEMY என்னும் ஆட்சியாளர் பதவிக்குத் தேர்வானவர்கள் பெறுகின்ற உயர்தரப் பயிற்சிக் கூடங்களுடன் ஒப்பிடலாம். இச் சாலைகளில் பயின்றவர்கள், சேர, சோழ, பாண்டிய மூவேந்தர்களிடம் அமைச்சராகவோ, பெரும் படைத்தளபதிகளாகவோ, அல்லது இரண்டு பொறுப்பும் கொண்ட பெரும் பதவிகளிலோ பணியாற்றும் அரசியல் தலைவர் தகுதி பெறுகின்றனர். இவர்கள், மூவேந்த வேளார் என்றும், பிரம்மமாராயர் என்றும் பட்டப்பெயர் கொண்டவர்களாகச் சோழர் கல்வெட்டுகளில் சுட்டப்பெறுகிறார்கள். முதலாம் இராசராசன் மற்றும் அவன் மகன் முதலாம் இராசேந்திரன் ஆகிய இருவரிடமும் அமைச்சராகவும், பெரும் படைத்தளபதியாகவும் பணியாற்றிய சேனாதிபதி ஸ்ரீ கிருஷ்ணன் இராமனான மும்முடிச்சோழ பிரம மாராயன் என்பானை மேற்படி அரசர்களின் கல்வெட்டுகளும் பெரிய லெய்டன் செப்பேடும் குறிக்கின்றன. இவன், தஞ்சைப்பெருவுடையார் கோயிலின் திருச்சுற்று மாளிகையை எடுப்பித்தவன் ஆவான்.

இனி, குமரியில் ஸ்ரீவல்லபப் பெருஞ்சாலை இருந்துள்ளதாக நமது குமரிக் கல்வெட்டில் அறிகிறோம். காந்தளூர்ச் சாலையை அடிப்படைக் கருத்தாகக் கொண்டு பார்த்திவேந்திரபுரம் என்னுமிடத்தில் கருநந்தடக்கன் காலத்தில் ஒரு சாலை அமைக்கப்பட்டதாக வரலாற்றுக் குறிப்புகள் உள்ளன. அது பாண்டிய நாட்டுப்பகுதியாகும். அது போலக் குமரியிலும் பாண்டிய அரசன் ஸ்ரீவல்லபன் பெயரால் சாலை ஒன்று செயல்பட்டு வந்துள்ளது என்பதை இக்கல்வெட்டு வாயிலாக அறிகிறோம். பின்னர், சோழர் ஆட்சியின்போது பெயர் மாற்றம் பெறினும் இரண்டு பெயர்களும் இக்கல்வெட்டில் சுட்டப்படுகின்றன.

மணற்குடி உப்பளமும் குமரி ஸ்ரீவல்லபப் பெருஞ்சாலையும்:

குமரி ஸ்ரீவல்லபப் பெருஞ்சாலைக்குத் தேவையான உப்புப் பயன்பாட்டுக்காக, மணற்குடி உப்பளத்திலிருந்து உப்பு நிவந்தமாக வழங்கப்பட்டு வந்துள்ளது என்று குறிப்பிடும் கல்வெட்டு, இந்த உப்பு வழங்கலில் முட்டுப்பாடு (இடை நிறுத்தம்) ஏற்பட்டது என்பதையும் கூறுகிறது. மணற்குடி என்னும் ஊர் நாஞ்சி(ல்) நாட்டில் அமைந்திருந்தது. நாஞ்சில் நாடு இன்றைய நாகர்கோயில் பகுதி எனலாம். ஆனால், குமரி, நாஞ்சில் நாட்டுப்பகுதியில் அமையவில்லை. நாஞ்சில்நாட்டைத் தொட்டவாறு அணுகியுள்ள புறத்தாய நாட்டில் அமைந்திருந்தது. மணற்குடி என்பது அவ்வூரின் இயற்பெயர் எனினும், அவ்வூருக்கு "மஹிபால குலகாலப் பேரளம்" என்னும் சிறப்புப் பெயர் அமைந்திருந்தது. இச்சிறப்புப் பெயர் ஒரு காரணப்பெயர். முதலாம் இராசேந்திரன் வென்ற அரசர்களுள் ஒருவன் மஹிபாலன். அவனை வென்றதால் "மஹிபால குலகாலன்". எனவே, மணற்குடிக்கு, இராசேந்திரன் பெயரால் "மஹிபால குலகாலப் பேரளம்" என்னும் பெயர் உண்டாயிற்று. குமரியைக் காட்டிலும் சிறியதொரு ஊரான மணற்குடியின் பெயரோடு சோழ அரசனின் பட்டப்பெயர் எவ்வாறு இணைந்தது? ஏனெனில், இவ்வூரில் பேரளம் இருந்துள்ளது. உப்பு வணிகத்துப் பெரு மையமாகத் திகழ்ந்த காரணத்தாலே, அதன் வணிக வருவாய்ச் சிறப்புகொண்டு இராசேந்திரன் காலத்தில் முதன்மை அளித்து இப்பெயர் அமைந்தது எனலாம். (மஹிபால என்பது கல்வெட்டில் மயில்வாள என எழுதப்பட்டுள்ளது).

ஸ்ரீவல்லபப் பெருஞ்சாலையான ராஜராஜப்பெருஞ்சாலைக்கு வழங்கப்பட்டுவந்த உப்பு நிவந்தம் 'முட்டிக்கிடந்தமையில்' நிவந்தத்தை மீண்டும் கிடைக்கச் செய்யப் பவித்திரமாணிக்கத் தொங்கப்பேரரையன் என்பவன் அரசனிடம் விண்ணப்பம் செய்து வேண்டிக்கொண்டு அரசனின் ஆணையைப் (திருமுகம்) பெற்றான். பவித்திரமாணிக்கத் தொங்கப்பேரரையன், அரசியார் உலகுடைய பிராட்டியரின் கீழ் பணியாற்றிய ஓர் அதிகாரி ஆவான். இவனது இயற்பெயர் அரிகுலகேசரி. பவித்திரமாணிக்கத் தொங்கப்பேரரையன் என்பது சிறப்புப் பெயர். தஞ்சைக்கருகில் உள்ள திட்டை என்னும் ஊரைச் சேர்ந்தவன். கல்வெட்டு இவனை, "உலகுடைய பிராட்டியார்

திருப்பள்ளித்தொங்கலுடையான்" எனக் குறிக்கிறது. அரசியார் பெயரை அடைமொழியாகக் கொண்டு திருப்பள்ளித்தொங்கலுடையான் என்னும் பெயர் அமைவதால், பதிப்பாசிரியர் கோபிநாத ராவ் அவர்கள், திருப்பள்ளித்தொங்கல் என்னும் தொடர் ஒரு பதவியின் பெயர் எனக்குறிக்கிறார். அவர் கூற்று ஆங்கிலத்தில் :

**"Tittai Arikulakeesari alias Pavithramanikka-ttonga-pperaraiyan, who was (or held the office of) the tiruppallittongal under Ulagudaiyapirattiyar, the queen of Rajadhirajadeva .."**

இக்குறிப்புப்படி, திருப்பள்ளித்தொங்கல் என்பது ஒரு பதவியைக்குறிக்கும் பெயர் என்றும் திருப்பள்ளித்தொங்கலுடையான் என்பது அப்பதவியைக் கொண்டவன் என்பதும் பெறப்படும். சோழப்பேரரசில் பெருந்தன அதிகாரிகள் இருந்தனர். பெருந்தனம் என்பது பெருந்தரம் என்றும் மாறி வழங்கும். அது, சோழ அரசாங்க உயர் அலுவலர்களின் வகை என்று கல்வெட்டுச் சொல்லகராதி கூறுகிறது.

ஆனால், "திருப்பள்ளித்தொங்கல்" என்பதற்குக் கல்வெட்டுச் சொல்லகராதி, "சுவாமியின் குடை" என்று பொருள் கூறுவதோடு அப்பொருளுக்குச் சான்றாக அல்லது எடுத்துக் காட்டாகக் கீழ்க்கண்ட கல்வெட்டு வரியைச் சுட்டுகிறது.

**"திருப்பள்ளித்தொங்கல் பிடிக்கும் ஆளுக்கு உள்படுவான் ஒருவனுக்குப் பங்கு ஒன்றும்" - SII vol-II, 66**

அதே அகராதியில், "திருப்பள்ளித்தொங்கல் உடையாந்" என்பதற்கு "(அரசன்) குடையைத் தாங்குபவன்" என்று குறிப்பிட்டு, எடுத்துக்காட்டாகக் கீழ்க்கண்ட கல்வெட்டு வரியைச் சுட்டுகிறது.

"எயினங்குடையான் ஆன மூத்த வகைத் திருப்பள்ளித்தொங்கலுடையாந் சிந்தாமணி சங்கரன்"

கல்வெட்டுச் சொல்லகராதியின் அடிப்படையில் திருப்பள்ளித்தொங்கலுடையான் என்னும் சொல்லின் பொருள் முரண்படுகிறது.

திருப்பள்ளித்தொங்கல் என்பது குடையைக் குறிக்கும் என்றால் - அது இறைவனுக்கானது எனினும் அரசனுக்கானது எனினும் - அது ஓர் உயர் நிலைக் குறியீடு. ஒரு பெருமைச் சின்னம். இறைவன், அரசன், சமயத்தலைவர், பெருந்துறவிகள் ஆகியோருக்குக் கையில் பிடித்துக்கொள்ளும் கோல் ஒரு சிறப்பு அல்லது பெருமைக்குரிய அடையாளமாய் அமைவது போலக் குடையும் சிறப்புக்குரியது. குடையைப் பயன்படுத்தும் சிறப்பு உரிமையை ஓர் அரசன் தன்னுடைய பெருந்தரத்து அதிகாரிக்கும் வழங்குதல் மிக இயல்பான ஒரு நடைமுறையாய்ப் பண்டு இருந்திருக்கக்கூடும். பல்லக்கு வைத்துக்கொள்ளும் உரிமை, யானை அல்லது குதிரை மேல் ஊர்வலமாகப் போதல், அனுமக் கொடி வைத்துக் கொள்ளும் உரிமை போன்ற சிறப்புரிமைகள் பற்றிய வரலாற்றுக் குறிப்புகள் உள்ளன. வலங்கை-இடங்கை முரண்பாடு காரணமாகப் போராடிய கண்மாளர்கள் தாங்கள் போகுமிடங்களுக்குச் செருப்பணியலாம் என்பதும், தங்கள் வீடுகளுக்குச் சாந்து பூசிக்கொள்ளலாம் என்பதும், நன்மை தின்மைக்கு இரட்டைச் சங்கு ஊதிக்கொள்ளலாம் என்பதும் அரசன் வழங்கிய உரிமைகள் எனக் கல்வெட்டுகள் கூறுவதைக் காண்கிறோம். இந்த அடிப்படையில், கல்வெட்டில் குறிக்கப்பெறும் பெருந்தனத்து அதிகாரி அரசனால் குடை வைத்துக்கொள்ளும் உரிமையைப் பெற்றவன் என்று பொருள் கொள்ளலாம்.

சோழர் கைக்கொண்ட பாண்டி மண்டலம் முழுதும் இராஜராஜப் பாண்டி நாடு என்று வழங்கினாலும், பாண்டி நாட்டின் தென்கோடிப்பகுதி இராஜராஜத்தென்னாடு என்று வழங்கியதாகக் கல்வெட்டு குறிக்கிறது. குமரிப்பெருஞ்சாலைக்கு உப்பு வழங்குதல் மீண்டும் தொடரக் கொடுக்கப்பெற்ற அரசாணை, இராஜராஜத் தென்னாட்டில் இருந்த எல்லா உப்பளங்களுக்கும் பொறுப்பேற்று வரி விதித்த நிர்வாக அதிகாரிகளான "கூறு செய்வார்" மற்றும் உப்பளங்களை மேலாண்மை செய்த "கண்காணி செய்வார்" ஆகியோருக்கு அளிக்கப்பட்டது.

உப்பு அளத்தல் - பண்டைய வழக்கம் - கையுறை:

நெல் போன்ற தானியங்களையும், உப்பு போன்ற பொருள்களையும் முகத்தல் அளவுக் கருவிகொண்டு அளக்கும்போது, ஒவ்வொரு முறையும் அளந்ததன் எண்ணிக்கையை வாயால் உரக்கச் சொல்லி அளத்தல் வழக்கமாய் இருந்தது. ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையை எட்டியதும், அளக்கப்படும் பொருளின் ஒரு கைப்பிடி அளவு தனியே அருகில் வைக்கப்படும். திருச்சி, தஞ்சை போன்ற இடங்களில் இவ்வழக்கம் இன்றும் நடைமுறையில் உண்டு என்பதாக, கோபிநாத ராவ் அவர்கள் குறிக்கிறார். எடுத்துக்காட்டாக, மரக்கால் கொண்டு நெல் அளக்கையில், ஒவ்வொரு மரக்கால் அளவுக்கும் ஒன்று, இரண்டு என எண்ணிக்கொள்வதும், குறிப்பாக அறுபது மரக்கால்கள் எண்ணி முடியும்போது ஒரு கைப்பிடி அளவு நெல்லைத் தனியே குவித்து வைத்து அடையாளப்படுத்துவது இன்றும் காணுகின்ற வழக்கம். இவ்வகையில், கைப்பிடி நெல்லின் எண்ணிக்கை, நெல்லின் பெருங்கொள்ளளவினை எளிதில் கணக்கிட உதவும். இந்த ஒரு கைப்பிடி அளவு, கை-உறை (கையுறை) என்னும் பெயரால் குறிக்கப்படுகிறது. நெல் அளப்பவர், அறுபது மரக்கால்கள் அளந்ததும் “அறுபதுக்கு உறை” என்று உரக்கச் சொல்வார்.

குமரி உப்பளத்திலும் கையுறை:

குமரி உப்பளங்களிலும் மேற்படி அளக்கும் முறையும் கையுறை உப்புக் குவித்தலும் வழக்கத்தில் இருந்ததைக் கல்வெட்டு குறிக்கிறது. “கலத்துவாய் நாழி கைய்யுறை கொண்டு” எனக் கல்வெட்டில் வரும் தொடரைக் காண்க. இங்கே, கைப்பிடி அளவு உப்பு தனியே வைக்கப்படவில்லை. ஒரு கலத்துக்கு ஒரு நாழி அளவு உப்பு, கையுறையாகத் தனியே வைக்கப்படுகிறது. (நாழி என்பதைச் சென்ற நூற்றாண்டில் புழக்கத்திலிருந்த “படி” அளவாகக் கருதலாம்). எட்டு நாழி கொண்டது ஒரு மரக்கால்; பன்னிரண்டு மரக்கால் கொண்டது ஒரு கலம். எனவே, கையுறையாக வைத்த உப்பின் அளவு ஒரு விழுக்காடு எனலாம். ஒரு கலத்துக்கு ஒரு நாழி என்னும் பொருளைக் கல்வெட்டின் “கலத்துவாய் நாழி” என்னும் தொடர் சுட்டுகிறது.

ஒரு கலத்துக்கு ஒரு நாழி என்னும் கையுறை உப்பு முன்பு வழங்கப்பட்டதைப் போலவே இப்போதும் வழங்கப்படவேண்டும் என்று அரசாணை அறிவிப்பதன் மூலம் உப்பு விளைச்சலின் மிகுதியை அறியலாம்.

சென்ற நூற்றாண்டில் இக்கல்வெட்டை ஆய்வு செய்த கோபிநாத ராவ் அவர்கள், அக்காலகட்டத்திலேயே மணற்குடி, உப்பு விளைச்சலில் ஒரு பெரும் மையமாகத் திகழ்ந்தது என்று குறிப்பிடுகிறார். மணற்குடி, திருவாங்கூர் மாநிலத்தில் அகத்தீசுவரம் வட்டத்தில் அமைந்திருந்தது.

மதுராந்தகம் – செய்யூர் உப்பளம்:

மதுராந்தகம் வட்டத்தில் செய்யூர் என்னும் ஊரில் தொண்ணூறு உப்பளங்கள் இருந்ததாக இவ்வூர் வால்மீகநாதர் கோயில் கல்வெட்டு (A.R. 445/1902) குறிப்பிடுகிறது. கல்வெட்டின் காலம் இரண்டாம் குலோத்துங்கனின் நான்காம் ஆட்சியாண்டான கி.பி. 1137-ஆம் ஆண்டாகும். செய்யூரின் சிறப்புப்பெயர் ஜயங்கொண்ட சோழநல்லூர் என்பதாகக் கல்வெட்டு குறிக்கிறது. இவ்வூர்ச் சபையினர் மேற்படிக்கோயிலுக்கு நிவந்தமாக இவ்வூர் உப்பளங்களில் விளைந்த உப்பில் உப்புப்பிடியாக வைத்த உப்பினைக் கொடையளிக்கின்றனர்.

இக்கல்வெட்டில் வருகின்ற “உப்புப்பிடி” என்பது குமரிக் கோயில் கல்வெட்டில் உள்ள “கையுறை”யைக் குறிக்கும். தொண்ணூறு உப்பளங்கள் இருந்தமையால் மதுராந்தகப் பகுதி உப்பு உற்பத்தியில் பெரிய வணிக மையமாகத் திகழ்ந்தமை கண்கூடு. உப்பு விளைச்சலைக் கல்வெட்டு “உப்புப் படுத்தல்” என்பதாகக் குறிக்கிறது. விளைச்சலில் சிறிதளவு, பரதேசிகளுக்கு விலையில்லாமல் அளிக்கப்பட்டது. மற்றுள்ளது காசுக்கு விற்பனை செய்யப்பட்டது. கல்வெட்டு இதனைக் ”காசுக்குக் கொண்டார்” என்று குறிப்பிடுகிறது. இவர்கள் உப்பு கொள்முதல் செய்த வணிகர் ஆகலாம். கல்வெட்டின் வரிகள் சில:

**1 ஸ்வஸ்திஸ்ரீ குலோத்துங்க சோழதேவற்கு யாண்டு நாலாவது செய்யூரான ஜயங்கொண்ட சோழநல்லூர் ஊரோம் இவ்வூர் தேவ**
**2 ர்களுக்குத் திருப்படி மாற்றுக்கு உடலாக இவ்வூர் உப்புப் படுக்கும் அளம் தொண்ணூற்றிலும் உப்புப்படுத்த அளங்களில்ப் பரதேசிகளுக்கும் மற**
**3 றும் காசுக்குக் கொண்டார்க்கும் அளந்து முற்ப்பட்ட உப்பில் உப்புப்பிடி வைத்த பரிசாவது வேளூரளத்தில் .........**

வடமுட்டைகால் அளம், தென்முட்டைகால் அளம், தெற்குத்தாங்குவான் அளம், கங்கைகொண்டான்கால் அளம், தெற்கிற்பெரிய அளம், கங்கைகொண்ட சோழப் பேரளம் ஆகிய பல உப்பளங்களின் பெயர்கள் கல்வெட்டில் குறிக்கப்படுகின்றன.

ஆந்திரம்-குண்டூர்-பாபட்லா தமிழ்க் கல்வெட்டில் உப்பளம்:

முதலாம் இராசராசன் காலத்தில் சோழரின் ஆட்சி கருநாடகம், ஆந்திரம் ஆகிய மாநிலங்களில் தமிழகத்தை ஒட்டியிருந்த பகுதிகள் வரை பரவியிருந்தது. அவ்வகையில், குண்டூர் மாவட்டமும் சோழர் ஆட்சியிலிருந்துள்ளது என்பதை அறிகிறோம். இம்மாவட்டத்தில் பாபட்லா என்னும் ஊரில் பாவநாராயணர் கோவில் என்னும் விண்ணகரம் அமைந்துள்ளது. அங்குள்ள சோழர் காலக் கல்வெட்டு உப்பளத்தைப் பற்றிக் கூறுகிறது. இக்கல்வெட்டு தமிழ் மொழியில் தமிழ் எழுத்துகளில் பொறிக்கப்பட்டுள்ளது. கல்வெட்டின் காலம் முதலாம் குலோத்துங்கனின் நாற்பத்திரண்டாம் ஆட்சியாண்டான கி.பி. 1112 ஆகும். இக்கோயிலில் சோழர் காலக் கல்வெட்டுகள் இருபத்தைந்து உள்ளன. (SII-Vol VI) அவை கீழ்வருமாறு:

| சோழ அரசன் | காலம் | மொழி | எண்ணிக்கை |
|---|---|---|---|
| முதலாம் குலோத்துங்கன் | 1107-1113 | தெலுங்கு | 2 |
| முதலாம் குலோத்துங்கன் | 1107-1113 | தமிழ் | 2 |
| இரண்டாம் குலோத்துங்கன் | 1136-1149 | தெலுங்கு | 10 |
| இரண்டாம் இராஜராஜன் | 1150-1168 | தெலுங்கு | 10 |
| பெயரில்லை | ………… | தமிழ் | 1 |

தமிழ்க் கல்வெட்டுகள் வாயிலாக அறியப்படும் செய்திகளாவன:
பாபட்லா (BHAPATLA) ——

குண்டூர் (GUNTUR) மாவட்டத்தில் உள்ள ஊர் பாபட்லா. பாபட்லா என்பது தற்போதைய பெயர். முதலாம் குலோத்துங்கனின் கி.பி. 1107-ஆம் ஆண்டுக் கல்வெட்டில் இவ்வூரின் பெயர் "படுவிறேவான பிரமபள்ளி" என்று குறிக்கப்படுகிறது. ஊரின் இயற்பெயர் படுவிறேவு என்றும் சிறப்புப்பெயர் பிரமபள்ளி என்றும் அறிகிறோம். தமிழகத்தில் சோழர் கைக்கொண்ட தொண்டை மண்டலம் ஜயங்கொண்ட சோழமண்டலம் என்றும், பாண்டிய நாடு இராஜராஜப் பாண்டி மண்டலம் என்றும், தமிழகம் அல்லாத கருநாடக மைசூர்ப் பகுதி முடிகொண்ட சோழ மண்டலம் என்றும் வழங்கியதுபோல் சோழர் கைக்கொண்ட ஆந்திரப் பகுதி "குலோத்துங்கசோழ மண்டலம்" என்று வழங்கியது. சோழநாட்டுப் பிரிவுகளைப்போல் ஆந்திரத்திலும் வளநாடு, நாடு ஆகிய நிருவாகப் பிரிவுகள் இருந்துள்ளன. குண்டூர்ப் பகுதி உத்தமசோழ வளநாட்டுப் பிரிவில் கம்பை நாட்டில் அமைந்திருந்தது. (தெலுங்குக் கல்வெட்டுகளில், நாட்டுப்பெயர் கம்ம நாடு என்றும், ஊர்ப்பெயர் பிரேம்பள்ளி என்றும் குறிக்கப்பெறுகின்றன; பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதியில் இவ்வூர் பாவபட்டு என்று வழங்கியுள்ளது).

தற்போது பாவநாராயணர் (BHAVA NARAYANA) என்னும் பெயருடைய இறைவர், மேற்படி கல்வெட்டுக் காலத்தில் பாவதேவாழ்வார் என்னும் பெயரால் அழைக்கப்பட்டார். கோயிலில் உணவளிக்கும் கொடைக்காக (சாலாபோகம் என்னும் நிவந்தம்) இராஜராஜன் மாடை என்னும் பெயருடைய காசு முப்பது அளிக்கப்பட்டது. கொடை அளித்தவர் சோழ அரசில் பெரும்பதவியில் இருந்த முடிகொண்டசோழப் பிரமமாராயர் என்பவர் ஆவார். முப்பது மாடைக்காசுகளைப் பெற்று நிவந்தத்தை நிறைவேற்றும் பொறுப்பை ஏற்றுக்கொண்டவர்கள் கோயிலின் பொறுப்பதிகாரிகளான பதிபாதமூலத்தார், பட்டுடையார், பஞ்சாசாரியார், தானத்தார் ஆகிய தேவகன்மிகள் ஆவர். இவர்களில், கோயில் கருவூலத்தின் பொறுப்பேற்ற பண்டாரியும் ஸ்ரீவைஷ்ணவக் கண்காணியும் அடங்குவர். கோயிலின் கருவூலம் சோழர் காலத்தில் ஸ்ரீபண்டாரம் என்று வழங்கிற்று. அதன் நிருவாக அலுவலர் பண்டாரி (பண்டாரம் என்னும் மாற்றுச் சொல்லும் உண்டு) எனப்பட்டார்.

பதவிப்பெயரான பண்டாரி (பண்டாரம்) பின்னாளில் ஒரு குடிப்பெயராகவும், சாதிப்பெயராகவும் மாற்றம் பெற்றது.

இன்னொரு தமிழ்க்கல்வெட்டு, கோயில் இறைவரைப் பாவநாராயண ஆழ்வார் என்று குறிக்கிறது. இப்பகுதியில் திருவகம்படி என்னும் ஊர் இருந்துள்ளமை கருதத்தக்கது.

முதலாம் குலோத்துங்கனின் உப்பளம் பற்றிய கல்வெட்டின் செய்திகள்:

இக்கல்வெட்டு, பாபட்லா ஊரைப் படுவூறேவான இராஜமாணிக்கபுரம் என்று குறிப்பிடுகிறது. இங்கு முதலாம் இராஜராஜன் பெயரால் "அருமொழிதேவப் பேரளம்" என்ற பெரிய உப்பளம் இருந்துள்ளது. இங்கு உப்பு எடுத்தலை "அளம் செய்தல்" என்று கல்வெட்டு குறிக்கிறது. இந்த அளத்தின் நிலத்தில் சிறிது நிலம் கடல் கொண்டதால், உப்புப் படுத்தும் மாற்று இடமாகக் கோயிலின் தேவதான நிலத்தில் ஒரு பகுதியைத் தேர்வு செய்து அதற்கு "சோழன் சக்கரப்பேரளம்" என்று பெயரிடுகிறார்கள். இப்பகுதியில், சிறிய அளவில் கடல் நீரால் நிலம் அழிந்தமை அறிகிறோம். உப்பள நிலம் கோயிலுக்குரியதாகையால், உப்பு விளைச்சலில் இருபதில் ஒரு பங்கு கோயில் ஸ்ரீபண்டாரத்துக்குச் செலுத்தவேண்டும். முன்பு அருமொழிதேவப் பேரளத்தில் உப்புச்செய்து வருகின்ற ஆள்கள் புது நிலத்திலும் வேலை செய்யலாம்.

பாபட்லா - உப்பளம் பற்றிய கல்வெட்டு-பகுதி-1


No. 167.

(A.R. No. 207 of 1897).

IN THE SAME PLACE.

1 . . . . . . . . . . [ம]ாது விரும்ப நிலமகள் நிலவ மலர்மகள் புணர உரிமையிற் சிறந்த மணிமுடி [சூ]டி மீனவர் க[லை]கெட வில்லவர் [கு]லைதர விக்கல[ர்] செங்கண- . . . கடல் பாயத் திக்கனைத்தி . க் தன் சக்கர நடாத்தி வீரஸிம்ஹாஸநத்து

2 . . . . . . . திருக்கருளிய கோவிராஜகேசரிபன்மரான சக்கரவத்திகள் ஸ்ரீகுலோத்துங்கசோழதேவர்க்கு யாண்டு நாற்பத்திரண்டாவது . . . உப்பிரட் . . அரு-மொழிதேவப்பே[ர]ளத்து அளஞ்செய்து வருகிற நிலத்திலே சிறிது நிலங் கடல்கொ-

நிலம் கடல் கொண்டமை-கல்வெட்டில் குறிப்பு

கல்வெட்டு குறிப்பிடும் “விலைக்குக் கொள்ளும் சாத்தவர்” என்பவர், உப்பை விலைக்கு வாங்கி விற்பனைக்குக் கொண்டு செல்லும் வணிகர் என்பது தெளிவு. வணிகப்பண்டங்களைக் கொண்டுசெல்லும் வணிகர் குழு “சாத்து” என்னும் பெயரால் வழங்கிற்று. உமணர் (உப்பு வணிகர்) குழுவாகச் செல்வதைச் சங்க இலக்கியமான அகநானூறு “உமண் சாத்து” என்று குறிப்பிடுகிறது (அகம்-119). வணிகப்பண்டங்களைக் கழுதைகளின் மேல் ஏற்றிச் செல்வதைப் பெரும்பாணாற்றுப்படை “கழுதைச் சாத்து” என்று குறிப்பிடுகிறது. எனவே, கல்வெட்டு ”சாத்தவர்” என்று குறிப்பது உப்பு வணிகரையே.

பாபட்லா - உப்பளம் பற்றிய கல்வெட்டு-பகுதி-2



3 . . . . . . . த்தமசொழவளநாட்டுக் கம்ம[பந]ாட்டுப் படுவூரெவான ராஜமாணிக்க-புரத்து பாவதெவ ஆழ்வார் தெவதாநம் [உ]ருவியில் மனையிற் சுற்றுநிலத்தில் இவ் ஊர் [ந]த்தத்துக்குக் கிழக்கு[ம்] பொராற்றுக்கு மெற்கும் பிராயம்ப[ழு]த்துக்கு வடக்கு -

4 . . . . . . . மான சவுட்டுத்தறையிலெ உப்புப்படு[க]லாம் நிலம் சொழன் சக்கரப்-பெரளமென்று உப்பிரட்டி உப்பு . . ராசியிலு முன்பு உப்புச் செய்துவருகிற ஆட்-களையும் ஆட்குடிமக்களையு மிட்டு உப்புச்செய்தால் இந்நிலத்திற் படு முதலான உப்பு . . ஆழ்வார் தெவதாநத்துக் குடலாக இருபதிலொன்ற . . -

5 . . . . . . . டித்தாற் சொதகையாளுள்ள உப்பு . . யுவிலைக்குக் கொள்ளுஞ் சாத்த[வ]ர் உப்புவிலைக்கு . . டுடை . . [மா]டைவாய்க் குறிணி உப்பாலுள்ள து-[ங்] கொயிலில ஸ்ரீவை(ஷ்)ணவர் கங்காணிப்படி . . . . . டாரத்துக்கு உப்-ப்பெறக்கடவதாக இவ்வளங்களுக்குக் கூறு ராஜராஜப்பா . . .

6 . . . . . . முடையாந செமத்துணை சூரியதெவநாந [பழ]த்தி[வ]ராஜன் இக்கொ-[யி]ல் ஸ்தாநாபதிகளும் தெவகன்மிகளும் ஸ்ரீவைஷ்ணவக் கங்காணி செய்வார்களும் உப்பிரட்டி . . . . . உபையச . . . . . . . .

7 . . . . . . . ண்டாரத்து க்குடலான பொன் திருவ[ஶ்ர]ம் நிசதம் பன்-னிரண்டு கலம் சாலை உண்கைக்கும் சக்கிரவர்த்திகள் ஸ்ரீ[கு]லொத்துங்கசொழதெ-வர் திருந[க்ஷ]த்ரமான பூசம் திருநாளெழுந்தரு . . . . . . ல் நொ . .

8 . . . . . . . ணை சூரியதெவநான பழந்திவராஜநென் [||*]

சாத்தவர் - உப்பு வணிகர் - கல்வெட்டில் குறிப்பு

கோயிலில் பிராமணர்க்கு உணவு அளிக்கும் சாலை இருந்துள்ளது. இது அக்ரசாலை எனப்படும். (அக்ரம்-agra- =உணவு). இக்கோயில் சாலையில் உணவளித்தலைக் கல்வெட்டு, “திருவக்ரம்” என்று குறிக்கிறது. இதற்கான பொன் முதலீட்டிலிருந்து பெறப்படும் பன்னிரண்டு கலம் (நெல்?) குலோத்துங்கசோழனின் பிறப்பு நாள் (நட்சத்திரம்) பூசத்தன்று “சாலை

உண்கை”க்குப் பயன்பட்டது. கோயிலுக்குச் சேரவேண்டிய உப்பு கோயிலின் கருவூலமான ஸ்ரீபண்டாரத்தில் செலுத்தப்படவேண்டும். மேற்படி நிவந்தச் செயல்பாடுகள் அனைத்தையும் தானத்தார், தேவகன்மிகள், ஸ்ரீவைஷ்ணவக் கண்காணிகள் ஆகியோர் கண்காணித்து வருவார்கள்.

முடிவுரை:

பண்டைய நாளில் உப்பு, நெல்லுக்கு நேரான ஒரு பண்டமாகவும், மிகப்பெரிய வணிகப்பண்டமாகவும் விளங்கியது என்றும், உப்பளங்களுக்கு அரசர்களின் பெயரிட்டு வழங்கியமை அரசு வருவாய் அடிப்படையில் உப்பளங்களின் முதன்மையைக் காட்டுகிறது என்றும், கோயில் நிருவாகத்துக்கென கோயில் கூறு செய்வார் என்பவர் இருந்தது போலவே, உப்பளங்களுக்கு வரி விதித்து நிருவாகம் செய்யக் கூறு செய்வாரும், மேலாண்மை செய்யக் கண்காணி செய்வாரும் பணியிலிருந்தனர் என்றும், சமூக மரபில் உப்பு அளக்கின்ற “கையுறை” என்னும் வழக்கு இருந்துள்ளது என்றும், கடலை ஒட்டி அமைந்திருந்த உப்பள நிலங்கள் சில போது கடல் நீரால் அழிந்துபோதலும் நிகழ்ந்தது என்றும், பல நகரங்கள் உப்பு வணிகப் பெருமையங்களாகத் திகழ்ந்தன என்றும், கல்விப் பெருஞ்சாலைகளின் பயன்பாட்டுக்கு உப்பளங்களிலிருந்து உப்பு விலையின்றி வழங்கப்பட்டது என்றும் பல்வேறு செய்திகளைக் கல்வெட்டுகளின் வாயிலாக அறிகிறோம்.

தொடர்பு:
துரை.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.
doraisundaram18@gmail.com, அலைபேசி : 9444939156.

## 14. குமரிக் கண்ட குழப்பங்கள்

*— திரு. சிங்கநெஞ்சம் சம்பந்தம்*

திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக்கழகத்தின் ரிமோட் சென்சிங் துறையைச் சேர்ந்த பேராசிரியர்கள் சோமசுந்தரம் ராமசாமி மற்றும் ஜே. சரவணவேல் ஆகியோர் செயற்கைக்கோள் படங்களை வைத்து மேற்கொண்ட ஆய்வின் முடிவுகள் 2019 ஜூன் 25ஆம் தேதியிட்ட Current Science இதழில் வெளியாகியிருக்கின்றன. குமரிக்கண்டம் குறித்து இந்த ஆய்வு சொல்வது என்ன?

"எங்களுடைய கண்டுபிடிப்பின்படி குமரிக்குத் தெற்கே சுமார் 2 -3 லட்சம் சதுர கி.மீ. பரப்புள்ள நிலப்பரப்பு இருந்திருக்கலாம். அவ்வளவுதான். மடகாஸ்கரிலிருந்து ஆஸ்திரேலியா வரை இந்த நிலப்பரப்பு இருந்திருக்க வாய்ப்பில்லை" என்கிறார்கள் ஆய்வாளர்கள்."

லெமூரியா கருதுகோள் மேலை நாடுகளில் ஓரங்கட்டப்பட்ட வேளையில், அது நம் தமிழ்நாட்டில் புகுந்து குமரிக் கண்ட கருதுகோள் உருவாகக் காரணமாக அமைந்தது. உரையாசிரியர்களின் இடைக்காலத்திற்குப் பின்னர் கிட்டத்தட்ட ஐந்நூறு ஆண்டுகள் உறங்கியிருந்த குமரிக் கண்ட கருதுகோள் 19 ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் மீண்டும் உயிர்பெற்று எழுந்தது ( உரையாசிரியர்கள் செய்த குழப்பங்களைப் பின்னர் பார்க்கலாம்).

தமிழிலும், ஆங்கிலத்திலும், வடமொழியிலும் வித்தகராக விளங்கிய பரிதிமாற் கலைஞர் 1903 ஆம் ஆண்டு தான் எழுதிய 'தமிழ் மொழி வரலாறு' எனும் நூலில் ஐந்தாம் அத்தியாயத்தில், உரையாசிரியர் அடியார்க்குநல்லார் கூறும் 49 நாடுகளையும் பட்டியலிட்டு, அந்த நாடுகள் அடங்கிய பகுதியை "குமரி நாடு' என்று அழைத்தார்.

நீளத்தில் இக்கால குமரிமுனையிலிருந்து, கேர்கியுலன் தீவின் தென்முனை வரையிலும் அகலத்தில் மடகாஸ்கர் தீவு முதல் கிழக்கே ஜாவா, சுமத்ரா ஆகியவற்றை அடக்கிய சந்தா தீவு வரையிலும் குமரிநாடு பரந்து கிடந்தது என எழுதும் இவர், இதுவே இலெமுரியா நிலப்பரப்பு என்றும் உலகின் நடுப் பகுதியாகத் திகழும் இங்கிருந்துதான் மனிதன் நாலாபுறமும் பரவினான் என்றும் கூறுகிறார். அடியார்க்கு நல்லார் கூறும் எழுநூறு காதம் இவர் கருத்தில் ஏழாயிரம் மைல்கள் ஆகிறது. இந்த நூல் 1908-09 ஆம் ஆண்டில் சென்னைப் பல்கலைக் கழகத்தில் முதுகலை மாணவர்களுக்குப் பாட நூலக அறிவிக்கப் பட்டது.

பரிதிமாற் கலைஞரின் நூலை, மறைமலை அடிகள், சோம சுந்தர பாரதியார் போன்ற சான்றோர்களும் ஆதரித்தனர். சோம சுந்தர பாரதியார்(1912) தன் "தமிழகம்'" நூலிலும், பூர்ணலிங்கம் பிள்ளை அவர்கள் 1904 ஆம் ஆண்டு "தமிழ் இலக்கியம்" எனும் நூலிலும், ஆப்ரஹாம்பண்டிதர் 1917 இல் தான் எழுதிய நூலிலும் குமரிக்கண்டத்திற்கு ஆதரவாக விரிவாக எழுதினர். இவர்கள் குமரிநாட்டை மாந்தன் பிறந்தகம் என்றும் தமிழ் இங்கேதான் பிறந்தது என்றும் வலியுறுத்தினர். ஸ்ரீநிவாசப்பிள்ளை (1927), கந்தையாபிள்ள(1934) ஆகியோரும் தங்கள் நூல்களிலும் கட்டுரைகளிலும் குமரிக் கண்டம் பற்றி விரித்துரைத்தனர். அறிஞர் கந்தையா அவர்கள் குமரிஆறு இன்றைய குமரிமுனைக்குத் தெற்கே சற்று தொலைவில் இருந்திருக்கலாம் அதற்கும் தெற்கே குமரிமலை இருந்திருக்கலாம் என்று தனது "தமிழகம்"(1934) நூலில் குறிப்பிடுகிறார். குமரி ஆறு, குமரி மலை பற்றியெல்லாம் இவர் நூலில்தான் பார்க்கிறோம்.

எனவே "குமரி மலை" பற்றிய கற்பனை இதற்குச் சற்று முந்தைய காலத்தில்தான் தோன்றியிருக்க வேண்டும். குமரிக் கண்டம் அழியக் காரணமாக இருந்த கடல்கோள் எப்படி உருவாகியிருக்கும் என்று இவர் சொல்வது சற்று வித்தியாசமாக இருக்கிறது 1927 ஆம் ஆண்டில் பூர்ணலிங்கம் பிள்ளை அவர்கள், குமரிக் கண்டம் அழிந்து போனதால் அங்கே

வாழ்ந்த மக்கள் வடக்கே சென்று சிந்துவெளி நாகரிகத்தை ஆரம்பித்தனர் எனக் கூற, தொடர்ந்து வி.ஆர். நெடுஞ்செழியன் (1953) ஆம் ஆண்டு, சிந்து வெளிக்கு மட்டுமல்ல, குமரி மக்கள் சுமர், அரேபியா, எகிப்து, கிரீஸ், இத்தாலி, ஸ்பெயின் போன்ற நாடுகளுக்கும் அதற்கு அப்பாலும் சென்று குடியேறினர் என்றார். 1927 ஆம் ஆண்டிலேயே பள்ளிப் பாட நூல்களில் குமரிக் கண்டம் இடம் பெற ஆரம்பித்து விட்டது. ஐரோப்பியர்கள் கூறிய இலெமூரியாவே தமிழர்களின் குமரிநாடு என்று 1940 ஆம் ஆண்டில் ஒன்பதாவது வகுப்பு பாட நூலில் கூறப்பட்டது. தொடர்ந்து 1967 இல் திராவிட முன்னேற்றக் கழகம் ஆட்சிக்கு வந்த பிறகு, குமரிக் கண்டம் பற்றிய அன்றைய தமிழ் அறிஞர்கள் மற்றும் ஆர்வலர்களின் கருத்துகள் வேகமாகப்பரவின. தமிழின் தொன்மை பற்றி ஆராய அறிஞர் மு.வ. அவர்கள் தலைமையில் அமைக்கப்பட்ட குழுவின் பரிந்துரையின் பேரில் 1981 ஆம் ஆண்டு முதல் தமிழ்நாடு அரசின் வரலாற்றுப் பாட நூலிலும் குமரிக் கண்டம் இடம் பெற்றது.

1902 ஆம் ஆண்டு முகிழ்த்த குமரிக் கண்ட கருதுகோள், நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து, தி.மு.கழக ஆட்சியில் செழித்தோங்கியது. இவை அனைத்திற்கும் மகுடம் வைத்தாற்போல், மதுரையில் 1980 இல் நடைபெற்ற ஐந்தாவது உலகத் தமிழ் மாநாட்டில் குமரி கண்டம் குறித்து, ப. நீலகண்டன் அவர்கள் இயக்கிய ஆவணப் படம் ஒன்று அன்றைய முதல்வர் எம்.ஜி. இராமச்சந்திரன் அவர்கள் முன்னிலையில் திரையிடப் பட்டது. PLATE TECTONICS, கடல்கோள் என எல்லாவற்றையும் கலந்து மசாலா செய்து உருவாக்கப் பட்ட இந்த படத்தை லட்சக் கணக்கான பொது மக்களும் பார்த்து மகிழ்ந்தனர்.

தேவநேயப் பாவணரின் (இவரது கருத்தைப் பின்னர் விரிவாகப் பார்ப்போம்) மாணவர்களில் ஒருவரான மதிவாணன் அவர்கள்(1991) குமரி நாகரிகம் 50000 ஆண்டுகளுக்கு முன் செழித்திருந்தது; பின்னர் சுமார் 16000 ஆண்டுகளுக்கு முன் படிப் படியாக பல்வேறு கடற்கோள்களால் அழிந்துபோயிற்று எனும் கருத்தை தன ஆசானின் வழி நின்று வெளியிட்டார்.

கொஞ்சம் யோசிக்க வேண்டும். இன்றைக்குக் கிடைத்துள்ள தொல்லியல் மற்றும் மொழியியல் தரவுகளின் அடிப்படையில் தமிழ் மொழி 50000 ஆண்டுகளுக்கு முன்னரே இலக்கிய வளம் பெற்றிருந்தது எனக் கூற இயலுமா?

குமரி நாடு பற்றி பலரும் பலப்பல பேசியும் எழுதியும் வந்த போதும், அந்த கற்பனை நிலப்பகுதியின் நீளம், அகலம், பரப்பளவு ஆகியவை பற்றி அவர்களிடம் ஒத்த கருத்து இல்லை என்பது இங்கே குறிப்பிடத்தக்கது. அதைப் போலவே குமரிக் கண்டத்தை அழித்த கடல்கோள்கள் எப்போது நிகழ்ந்தன என்பது பற்றியும் குமரிக் கண்ட ஆதரவாளர்களிடையே கருத்தொற்றுமை இல்லை.

குமரி முனைக்குத் தெற்கே எவ்வளவு தூரம் நீண்டிருந்தது குமரிக் கண்டம்?




• பரிதிமாற் கலைஞர் (1903), தனது “தமிழ் மொழியின் வரலாறு” எனும் நூலில், ஒரு காதம் என்பது பத்து மைல், எழுநூறு காதம் என்பது ஏழாயிரம் மைல்; எனவே குமரி நாடு இன்றைய குமரி முனைக்குத் தெற்கே கெர்கியிலன் தீவு வரை இருந்திருக்கலாம் என்கிறார். கெர்கியிலன் தீவு எங்கேயுள்ளது என்பதைப் படத்தைப் பார்த்து அறிக.

• பூர்ணலிங்கம்பிள்ளை(1904) , பரிதிமாற்கலைஞர் அவர்களின் கருத்தையே வழி மொழிகிறார்.

• அரசன் சண்முகனார் (1905) குமரி நாடு பல ஆயிரம் மைல்கள் நீண்டிருந்திருக்கும் எனக் கருதுகிறார்.

• சோமசுந்தர பாரதியார் (1912), சுமார் 6000 முதல் 7000 மைல்கள் வரை இருக்கலாம் எனக் கணக்கிடுகிறார்.

• ஆப்ரகாம் பண்டிதர் (1917), இராகவ அய்யங்கார் ஆகியோர் இந்த தூரம் 1400 முதல் 3000 மைல்கள் வரை இருக்கலாம் என எண்ணுகிறார்கள்.

• ந.சி. கந்தையா பிள்ளை (1934), யாப்பருங்கல விருத்தி எனும் நூலில் குறிப்பிட்டுள்ள கணக்கின்படி, 700 காதம் என்பது 2800 மைல் எனும் முடிவுக்கு வருகிறார்.

• மறைமலை அடிகள் (1948) குமரிக் கண்டம் தென் துருவம் வரை நீண்டிருந்திருக்கும் எனக் கருத்து தெரிவிக்கிறார்.

• தேவநேயப் பாவாணர் (1956) தனது “தமிழர் வரலாறு” நூலில் குமரிக் கண்டம் தென்வடலாக ஏறத்தாழ 2500 கல் நீண்டிருந்தது என்கிறார்.

இவை அனைத்திற்கும் மாறாக,

• உ.வே.சாமிநாத அய்யர், இரு கூற்றம் அளவிற்கு சில கிராமங்கள் மூழ்கி இருக்கலாம் எனக் கருதுகிறார்.

எழுநூறு காதத்தில் நாற்பத்து ஒன்பது நாடுகள் இருந்தன என உரையாசிரியர் கூறுவதால் அது நீட்டல் அளவையாக இல்லாமல் பரப்பு அளவையாக இருக்க வாய்ப்புகள் உண்டு. எனின் 2800 ச.கி.மீ. (நாடு என்பது இன்றைக்கும் கொல்லிமலைப் பகுதிகளில் சிறு கிராமத்தையே குறிக்கும், எனவே அதில் ஒன்றும் சிக்கல் இல்லை). கடற்கரையோரம் சுமார் 280 கி.மீ. துரத்திற்கு( கடற்கரையின் நீளத்தைச் சொல்கிறேன்) சுமார் 10கி.மீ. அளவிற்குக் கடல் உட்புகுந்திருந்தால் (இதற்கு வாய்ப்புகள் உண்டு) அடியார்க்கு நல்லாரின் கணக்கு சரியாகிறது. ஹோலோசீன் கடல் மட்ட உயர்வின் போது இது நடந்திருக்க வாய்ப்பு உள்ளது.

ஹோலோசீன் கடல்மட்ட உயர்வு பற்றிப் பேசுவதற்கு முன் இலெமூரியாகண்ட கருதுகோள் எழ எது காரணம் அல்லது என்ன காரணம் என்பதைப் பார்த்து விடலாம். பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் தொழிற்புரட்சி உச்சக் கட்டத்தை எட்டியபோது, இயந்திரங்களை இயக்க ஆற்றல் தேவைப்பட்டது. புவியியலாளர்கள் நிலக்கரி படிவங்களைக் கண்டறியும் முயற்சியில் தீவிரமாக ஈடுபட்டனர். நிலக்கரி படிவங்கள் படிவப் பாறைகளில் மட்டுமே கிடைக்கும். தொல்லியல் எச்சங்களும் படிவப் பாறைகளில் மட்டுமே கிடைக்கும் என்பதையும் இங்கே குறிப்பிட வேண்டும். நிலக்கரியைத் தேடிச்சென்ற புவியியலாளர்களுக்கு, குறிப்பாக, தொல்லுயிரியலாளர்களுக்கு (PALAEONTOLOGIST) பல வியப்புகள் காத்திருந்தன. பலவிதமான தொல்லுயிர் எச்சங்கள் கண்டறியப்பட்டன. இந்த கண்டுபிடிப்புகள் பூமியின் தொல்நிலஅமைப்பை (PALAEO GEOGRAPHY) அறிந்துகொள்ளும் வேட்கையைத் தூண்டின. இந்தியாவில் கிடைத்தத் தொல்லுயிர் எச்சங்களும், மடகாஸ்கர் தீவில் கிடைத்த தொல்லுயிர் எச்சங்களும் ஒன்றையொன்று பெரிதும் ஒத்திருந்தன. இவற்றுள், இலெமூர் எனும் உயிரினத்தின் தொல்லுயிர் எச்சங்களும் அடங்கும். இன்றும் இலெமூர் உயிரினம் ஆப்ரிக்கா, மடகாஸ்கர், இந்தியா போன்ற பகுதிகளில் வாழ்ந்து வருகின்றது. ஆப்ரிக்காவில் 20 வகை, மடகாஸ்கரில் 18 வகை, இந்தியாவில் மூன்று வகை இலெமூர்கள் இருப்பதாக உயிரியலாளர்கள் சொல்கிறார்கள்.



இன்றைக்கு சுமார் நான்காயிரம் கி.மீ. அகல கடலால் பிரிக்கப் பட்டிருக்கும் இரண்டு இடங்களில் ஒரே மாதிரியான உயிரினங்கள் வாழ்ந்தனவா? அப்படியெனில் இந்தியாவிலிருந்து மடகாஸ்கருக்கு, ஏதேனும் இணைப்பு இருந்திருக்குமோ, அந்த இணைப்பின் அல்லது பாலத்தின் வழியே உயிரினங்கள் அங்கும் இங்கும் சென்றிருக்குமோ எனும் எண்ணம் பல அறிஞர்கள் நடுவே உருவானது.

கண்டங்கள் LAND BRIDGE மூலமாக இணைக்கப்பட்டிருக்க வேண்டும் எனும் எண்ணம் 1850 களில் வலுப் பெற்றது. ஜெர்மனியைச் சேர்ந்த எர்நெஸ்ட் ஹெய்ன்ரிச் ஹேக்கல் எனும் உயிரியலாளர் மனிதன் தெற்கு ஆசியாவில் தோன்றி இந்த LAND BRIDGE வழியே ஆப்பிரிக்கா சென்றிருக்க வேண்டும் என்று எண்ணினார்.




தொடர்ந்து பிலிப்ஸ் ஸ்க்லேட்டேர் எனும் ஆங்கிலேய விஞ்ஞானி தான் வெளியிட்ட MAMALAS OF MADAGASKAR எனும் கட்டுரையில், இந்தியாவிற்கும் மடகாஸ்கருக்கும் இடையே இருந்ததாக எண்ணப்பட்ட LANDBRIDGE ற்கு (இங்கே LANDBRIDGE எனக்குறிப்பிடப்படுவது ஒரு பெரும் நிலப் பரப்பு) இலெமூரியா என்று நாமகரணம் சூட்டினார்.

இலெமூர்கள் வாழ்ந்த இடம், ஆதலின், ஸ்க்லேட்டேர் இலெமூரியா எனப் பெயரிட்டார் அவரின் கட்டுரை THE QUARTERLY JOURNAL OF SCIENCE (1864) இதழில் வெளியானது.

உலகெங்கும் பேசப்பட்டது. கண்டங்களை இணைத்ததாகக் கருதப்படும் "இலெமூரியா கண்ட கோட்பாடு" தோன்ற முக்கிய காரணம், கண்டங்கள் நிலையானவை, அவை அசைவதில்லை என்னும் தவறான கருத்து அந்நாட்களில் நிலவியதுதான்.

கண்டம் எனும் சொல்லிற்கு 'துண்டு' என்பது பொருள். (எ.கா. "கண்ட துண்டமா வெட்டிப் போட்டான்",'உப்புக்கண்டம்' போன்றன.) இதற்கு எதிர்ச் சொல் 'அகண்டம்' (எ.கா. அகண்ட இந்தியா).

தற்போது இலெமூரியா எனும் பெயர் தமிழ்கூறும் நல்லுலகில் மிகப் பரவலாகப் பேசப்படும் பெயர். இந்த கற்பனைக் கண்டத்திற்கு இலெமூரியா என ஏன் பெயரிடப்பட்டது என்பதற்கு உண்மைக் காரணத்தை விட்டு விட்டு நம் மக்கள் பல்வேறு கதைகள் சொல்கிறார்கள். அவற்றில் ஒன்றை மட்டும் பார்ப்போம்.

"இந்தக்கண்டத்தில் மூலிகைகள் நிறைந்திருந்தன. அவை அனைத்தும் இலை மூலிகைகள். மூலிகை என்பது மூரிகை எனத் திரிந்தது. இலைமூலிகை, இலைமூரிகை, இலைமூரிகை - இலெமூரியா என மாறிவிட்டது." இது ஒரு விளக்கம். இதைப்போல நிறைய உள்ளன. ஏடு இட்டோர் இயல்தான் EDITORIAL , தோற்றோர் இயல்தான் TUTORIALஎன்பதுபோல்தான் இதுவும்.).

கிட்டத்தட்ட அரை நூற்றாண்டு காலம் கொடி கட்டிப் பறந்த "இலெமூரியா கண்ட கருதுகோள்" இருபதாம் நூற்றாண்டின் துவக்கத்தில் தோன்றிய 'CONTINENTAL DRIFT' கருத்தால் சற்று ஆட்டம் காண ஆரம்பித்தது. தொடர்ந்து வந்த 'OCEAN FLOOR SPREADING' கருத்துகளும்

அதைத் தொடர்ந்து வந்த PLATE TECTONICS கருத்தும் இந்த இலெமூரியா கண்ட கோட்பாட்டினை ஓரம் கட்டி விட்டன.

ஆனால், நம் தமிழ்நாட்டு மொழி அறிஞர்களோ, ஓரம்கட்டப்பட்ட கருதுகோளை எடுத்துக் கொண்டு, இதுதான் இலக்கியத்தில் சொல்லப்பட்டுள்ள ‘குமரிக் கண்டம்’ என்று இன்றும் சொல்லி வருகிறார்கள். கற்பனையில் தோன்றிய இந்த கண்டத்திற்கு, வடிவம் ஒன்றும் கொடுத்து வரைபடம் ஒன்றும் கொடுத்திருக்கிறார்கள். இவையெல்லாம் எந்த அடிப்படையில் செய்கிறீர்கள் என்றால், ‘இலக்கியச் சான்றுகள்’ உள்ளன என்கிறார்கள்.




குமரிக்கண்டம், குமரி நாடு, குமரிப் பரப்பு, குமரி நிலம், குமரி மலை, குமரித் தொடர், குமரி ஆறு போன்ற தொடர்களில் ஒன்று கூட தமிழின் தொன்மையான இலக்கியங்கள் என்று கருதப்படும் தொல்காப்பியத்திலோ அன்றி சங்கப் பாடல்களிலோ காணப் படவில்லை என்பதுதான் உண்மை. குமரிக் கண்டம் என்று ஒன்று இருந்ததென நம்புகிறவர்கள், அந்தக் கண்டம் கடல்கோளால் அழிந்தது என்றும் நம்புகிறார்கள். அப்படித்தான் நம்பியாக வேண்டும்; வேறு வழியில்லை. ஆனால், கடல்கோள்கள பற்றியும், இவர்களிடையே ஒத்த கருத்து இல்லை என்பதே உண்மை.

## 15. டச்சு வரைப்படக் கலைஞர் பிலிப்பஸ் பால்டியூஸ் தந்த தூத்துக்குடி குறிப்புகள்

*— முனைவர் க.சுபாஷிணி*



இந்த வரைபடத்தில் நாம் காண்பது தமிழகத்தின் தென்கோடி துறைமுக நகரமான தூத்துக்குடி. இது 1672ம் ஆண்டு தூத்துக்குடி நகரம் அமைக்கப்பட்டிருந்த தன்மையை வெளிப்படுத்தும் ஒருவரைப்பட ஆவணம். இந்த வரைபடத்தின் அளவு 35.5 x 29 செ.மீ.

இதனைத் தயாரித்தவர் பாதிரியார் பிலிப்பஸ் பால்டியூஸ். இவர் அடிப்படையில் ஒரு டச்சுக்காரர். வரைபட நிபுணரும் கூட. இவர் நெதர்லாந்தில் பிறந்தவர். டச்சு அரசில் அமைச்சராகப் பணிபுரிந்த இவர் இலங்கைக்கு (அன்றைய சிலோன்) பணி நிமித்தம் சென்றார். ஆப்ரஹாம் ரொகேரியசை ( Abraham Rogerius) அடுத்து மிக விரிவாக வட இலங்கைத் தமிழ் மக்களைப் பற்றிய சமூக, மொழி, பண்பாட்டுச் செய்திகளை ஆவணப்படுத்தியவர் என்ற பெருமை இவரைச் சாரும். இவரது ஆவணங்கள் தமிழகம் (மலபார்), சோழமண்டலக் கடற்கரை பகுதி நகரங்கள், சிலோன் ஆகிய நிலப்பகுதிகளை விவரிக்கும் முக்கியத்தரவுகளாகும்.

இந்த வரைபடத்தில் பனிமயமாதா ஆலயம் கடலை நோக்கியபடி அமைக்கப்பட்டிருப்பதையும், வீடுகள் வரிசை வரிசையாக அமைக்கப்பட்டிருப்பதையும் காணலாம். கடற்கரையில் நிறையப் படகுகள் நிறுத்தி வைக்கப்பட்டிருப்பதையும் சில படகுகள் கடலில் பயணத்தில் இருப்பதையும் காணமுடிகின்றது. கடலில் இருக்கும் படகுகள் மீனவர்களின் மீன்பிடி படகுகள் என்பதற்குச் சான்றாகப் படகில் இருப்போர் வலை வீசுவதை இந்த வரைபடம் காட்டுகின்றது. இவை மட்டுமன்றி அயலக வணிகர்களின் படகுகள் வேற்று நாட்டுக் கொடியுடன் உள்ளதையும் காணலாம். இதில் போர்த்துக்கீசியர்களின் அரசு அலுவலகம் போன்ற ஒரு கட்டிடம் கடற்கரையை நோக்கியவாறு இருப்பதையும் அதில் ஒரு கொடி பறப்பதையும் காணலாம்.

ஐரோப்பியர்களால் இந்த நகரம் அன்றைய காலகட்டத்தில் தூத்துக்கோரின் (Tutecoryn or Tuticorin) என அழைக்கப்பட்டது. ஐரோப்பியர்களும் அரேபியர்களும் வணிகம் செய்ய வந்த அன்றைய இந்தியாவின் மிக முக்கியத் துறைமுகப் பகுதிகளில் இந்த நகரமும் ஒன்றாக அறியப்படுகின்றது. பண்டைய ரோமானியப் பேரரசு ஆட்சிக் காலத்திலும் வணிகர்கள் தூத்துக்குடிக்கு வந்து சென்றமை பற்றிய ஆவணக்குறிப்புகள் கிடைக்கின்றன. இது மிக நீண்ட காலமாக இப்பகுதி வணிகர்களை ஈர்த்த ஒரு பகுதியாக இருந்தமைக்குச் சான்றாக அமைகின்றது.வளமான

இப்பகுதியில் தான் முத்துக்குளித்தல், சங்கு எடுத்தல் போன்ற தொழில்கள் விரிவாக நடைபெற்றன. முத்துக்கள் கோர்த்துச் செய்யப்பட்ட ஆபரணங்கள் பண்டைய ரோமானிய வணிகச் சந்தையில் புகழ் பெற்றிருந்தன. சங்கினை அறுத்து ஆபரணங்கள் செய்வது தமிழகத்தின் நீண்ட பண்பாடாக இருந்தது. இதற்குச் சான்றாகத் தமிழகத்தில் நிகழ்த்தப்பட்ட அகழ்வாய்வுகளில் நமக்குக் கிடைக்கும் ஆபரணங்களைக் குறிப்பிடலாம்.

"பிலிப்பஸ் பால்டியூஸ் தயாரிப்பில் தமிழ் இலக்கணம் - தமிழ் இங்கே மலபார் மொழி எனக் குறிப்பிடப்படுவதையும், ஓலைச்சுவடி எழுத்தாணி தமிழ் நிலத்தில் எழுதும் முறை ஆகியன விளக்கப்பட்டிருப்பதையும் இங்கு காணலாம் - கி.பி.1672."

பிலிப்பஸ் பால்டியூஸ் (Philip Baldaeus) தனது மிகப்பெரிய **ஆவணப்படைப்பான** "A Description of EAST INDIA Coast of MALABAR and CORMANDEL with their adjacent Kingdoms & Provinces & of the Empire of CEYLON and of

the Idolatry of the Pagans in the EAST INDIES" என்ற நூலில் தனது பயண அனுபவங்களையும், செயல்பாடுகளையும், தான் உள்வாங்கிய கருத்துக்களையும் மிக விரிவாகக் குறிப்பிடுகின்றார். அன்றைய தமிழகத்தின் தூத்துக்குடி மற்றும் அதனைச் சுற்றி உள்ள பகுதிகள் மதுரை நாட்டிலிருந்தது என்ற வகையில் குறிப்புகள் இந்த நூலில் வழங்கப்பட்டுள்ளன.

பிலிப்பஸ் பால்டியூஸ் ஹாலந்து (இன்றைய நெதர்லாந்து) நாட்டைச் சேர்ந்த சீர்திருத்துவ கிறித்துவ (Dutch Reformed Church) மத போதகர். இந்த வகை சீர்திருத்தக் கிருத்துவம் என்பது கத்தோலிக்க கிருத்துவத்தில் மேலும் புதிய சீர்திருத்தச் சிந்தனைகளை உருவாக்கி வளர்ந்த ஒரு கிளைசமயம். இவர் தத்துவம், கீழைதேச மொழிகள், சமயம் ஆகிய துறைகளில் கல்விகற்று தேர்ச்சி பெற்று பின்னர் தனது சமயப் பணியை மேற்கொள்ள டச்சு கிழக்கிந்திய கம்பெனியில் பணியில் சேர்ந்தவர். தனது பணிக் காலத்தில், கிழக்காசிய நாடுகள் பலவற்றில் பணியாற்றிய அனுபவம் கொண்டவர் என்றாலும் தனது பெரும்பாலான காலத்தை அன்றைய சிலோனிலும் இந்தியாவிலும் கழித்தவர். அதிலும் குறிப்பாகத் தமிழ் மொழியை நன்கு கற்று தமிழ்ப் பண்பாட்டினையும் சமூகம் சார்ந்த செய்திகளையும் டச்சு, ஜெர்மன் ஆங்கிலம் ஆகிய மொழிகளில் எழுதியவர் என்ற பெருமை இவருக்குண்டு. மரியாவோன் காசல் என்பவரையும் பின்னர் எலிசபெத் ட்ரிபொலெட் என்பவரையும் இவர் திருமணம் செய்ததாக இவரைப் பற்றிய குறிப்புக்கள் உள்ளன.

டச்சு கிழக்கிந்திய கம்பெனியில் ஒரு அமைச்சராகப் பணியேற்றுக் கொண்ட பின்னர் தனது சமயத்தைப் பரப்பும் நோக்கத்துடன் இலங்கையிலிருந்து தமிழகம் வரும்போது தூத்துக்குடியில் தனது அனுபவங்களை அவர் விவரிக்கும் செய்திகள் நமக்கு அக்காலத்தைய சூழலை விளக்கும் சான்றுகளாக அமைகின்றன. தூத்துக்குடியிலிருந்து தொண்டி, நாகப்பட்டினம், தரங்கம்பாடி, புலிக்கட், என இவரது பயணம் மிக விரிவானது.

தூத்துக்குடியில் முதலில் அவர் சந்தித்த உள்ளூர் மக்கள் பரதவ சமூகத்தவர்கள். இவர்கள் இப்பகுதியில் முன்னரே கோலோச்சியிருந்த போர்த்துக்கீசியர்களின் தாக்கத்தினால் கத்தோலிக்க கிருத்துவ சமயத்தை ஏற்றிருந்தனர். ஓரிரு கத்தோலிக்க தேவாலயங்களும் அக்காலகட்டத்தில் அங்கே உருவாக்கப்பட்டிருந்தன.

இந்த மதம் மாறிய தமிழர்கள் தங்கள் கத்தோலிக்க மத நம்பிக்கையில் "வெறித்தனமாக கண்மூடித்தனமாக" நம்பிக்கை கொண்டிருந்தனர் என்றும், தனது புதிய சீர்திருத்த சமயத்தை அவர்களுக்கு அறிமுகப்படுத்தி தனது பக்கம் அவர்களை ஈர்ப்பது எளிமையான காரியமாக இல்லை என்றும் தனது நூலில் இவர் குறிப்பிடுகின்றார். அவர்களுக்கு முத்துக்களைக் கோர்த்து அணிகலன்கள் செய்வதற்கும், சிலுவைகளைச் செய்வதற்கும் தான் தெரிகிறதே தவிரக் கிருத்துவ சமயத்தின் அடிப்படை தத்துவ விசயங்கள் தெரியவில்லை என்றும் குறிப்பிடுகின்றார்.

1661ம் ஆண்டு இவரை டச்சு கிழக்கிந்திய அரசு தூத்துக்குடியிலிருந்து கோவளம் பகுதி வரை பயணித்து இங்குக் கடற்கரை பகுதிகளிலுள்ள கிருத்துவ தேவாலயங்கள் எவ்வகையில் இயங்குகின்றன என ஆய்வு செய்து தங்கள் புதிய சமயக் கொள்கையை எவ்வாறு இவர்களிடையே புகுத்தலாம் என அறிந்து வரப் பணித்தார் என்றும், புதிய சமயத்தை அவர்களிடையே அறிமுகப்படுத்துவது எளிதல்ல என்று தாம் உணர்ந்ததாகவும் இவர் குறிப்பிடுகின்றார். ஏனெனில் பரதவ மக்கள் போர்த்துக்கீசியர் அறிமுகப்படுத்திய கத்தோலிக்க கிருத்துவத்தில் மிகத் தீவிர நம்பிக்கை கொண்டிருந்தார்கள் என்றும் குறிப்பிடுகின்றார்

1658ம் ஆண்டு தூத்துக்குடி கடற்கரை பகுதி டச்சுக்காரர்கள் வசம் வந்தது. இதன் அடிப்படையில் இங்கு இயங்கிய தேவாலயங்களில் மாற்றுச் சித்தாந்தத்தைப் போதிக்கும் முயற்சிகள் இக்கால கட்டத்தில் நிகழ்ந்ததைப் பாதிரியார் பால்டியூஸ் குறிப்புக்கள் வெளிப்படுத்துகின்றன.

பாதிரியார் பால்டியூஸ் இம்மக்களை ஈர்க்க போர்த்துக்கீசிய மொழியிலேயே வழிபாடுகளைத் தொடங்கினார். அந்த முயற்சியும் பலனளிக்கவில்லை.

1658ல் இலங்கையில் நிகம்புவிலிருந்து வந்த டச்சு படைகள் தூத்துக்குடி பகுதியைத் தாக்கி தமது ஆளுமைக்குள் கொண்டு வந்தன. அந்த சமயத்தில் தூத்துக்குடியில் பல நூறு கிராமங்கள் மட்டுமே இருந்ததாகவும், ஆனால் அவற்றிற்குப் பாதுகாப்பாக மதில் சுவர் இல்லையென்றும், சாக்கடைகள் இல்லையென்றும் வாயிற்கதவுகள் அல்லது கோட்டைக்கதவுகள் இருக்கவில்லை என்றும், மூன்று மிகப்பெரிய அளவிலான தேவாலயங்கள் மட்டுமே இருந்ததாகவும், பெரிய வீடுகள் சில வரிசையாக இருந்ததாகவும் இவரது குறிப்புக்கள் சொல்கின்றன.

டச்சு கிழக்கிந்திய கம்பெனி இப்பகுதியில் ஒரு கோட்டை ஒன்றைக் கட்ட பல முறை முயன்றும் இது சாத்தியப்படவில்லை. இதற்குக் காரணம் நாயக்க மன்னர்கள் அதற்குச் சம்மதிக்கவில்லை என்றும் இதன் காரணத்தால் டச்சு கிழக்கிந்திய கம்பெனி மூன்று தேவாலயங்களில் ஒன்றில் தமது தொழிற்சாலை ஒன்றை நிறுவியது என்பது இந்த நூலின் வழி அறிய முடிகின்றது.

குறிப்பு: "A Description of EAST INDIA Coast of MALABAR and CORMANDEL with their adjacent Kingdoms & Provinces & of the Empire of CEYLON and of the Idolatry of the Pagans in the EAST INDIES" - Philip Baldaeus, Minister of the Word of God in Ceylon, Printed in Amsterdam, 1672.

தொடர்பு: முனைவர்.க.சுபாஷிணி (ksubashini@gmail.com)

## 16. தமிழர் மருத்துவமுறை குறித்து அறிய உதவும் தொன்ம ஓலைச்சுவடிகள்

*— முனைவர்.தேமொழி*

தஞ்சை சரஸ்வதி மகால் நூலக ஓலைச்சுவடிகள் யாவும் தமிழர் கலை, இலக்கியம், வாழ்வு, பண்பாடு, மரபு, மருத்துவம் குறித்த தகவல் நிரம்பிய அரிய கருவூலங்கள். அவை சொல்லும் செய்திகள் பலவற்றை இன்றும் வெளியுலகம் அறிந்திருக்கவில்லை என்பது நமது முயற்சியில் உள்ள குறைபாட்டினைத் தெளிவாகவே காட்டுகிறது. 1980 ஆம் ஆண்டில் நடந்த உலகத்தமிழ் மாநாட்டின் போதே ஓலைச்சுவடிகளைப் பாதுகாக்க அரசால் நிதி ஒதுக்கப்பட்டது.

இருப்பினும் இன்றுவரை இப்பணியில் முன்னேற்றம் ஏற்பட்டுள்ளதாகத் தெரியவில்லை. நாற்பது ஆண்டு இடைவெளி விழுந்துவிட்டது என்றால், அது ஏறக்குறைய இரண்டு தலைமுறைகள் கடந்துவிட்டது என்ற ஓர் அவல நிலை. பண்டைய தகவல்களைப் பொருள் அறிந்து புரிந்து கொள்ளக்கூடிய முதிய அறிஞர் பலர் மறைந்திருப்பர். இளைய தலைமுறைகளுக்கு ஓலைகளைப் படிப்பதற்கும் புரிந்து கொள்வதற்கும் பயிற்சி கொடுக்கப்பட்டதாகவும் நம்மால் அறியக்கூடவில்லை.

தஞ்சை சரஸ்வதி மகால் தமிழ் ஓலைச்சுவடிகளை நவீன மின்னாக்க முறையில் பாதுகாக்கும் பணி குறித்து இப்பொழுது தமிழ் ஆர்வலர்களால் தொடுக்கப்பட்ட வழக்கு ஒன்று உயர்நீதிமன்றத்தின் மதுரைக் கிளையால் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. தமிழ் ஓலைச்சுவடிகளை நவீன மின்னாக்க முறையில் பாதுகாக்க ஒதுக்கப்பட்ட நிதி, மற்றும் பணி நிலவரம் குறித்து பதில் அளிக்க வேண்டும் என்று மத்திய கலாச்சாரத்துறை, மற்றும் தமிழக கல்வெட்டியல் துறைக்கு உயர்நீதிமன்றம் உத்தரவிட்டுள்ளது.

தஞ்சை சரஸ்வதி மகால் போன்ற நூலகத்தில் இருக்கும் நூல்கள் மற்றும் ஓலைச்சுவடிகளில் பலவும் மருத்துவம் சார்ந்தவை என்பது பெரும்பாலோர் அறிந்தது. கால்நடை மருத்துவ நூல்களும் இவற்றுள் அடக்கம். தமிழரைப் பொறுத்தவரைச் சித்த வைத்தியம் என்ற பண்டைய வைத்திய முறை பயின்ற அக்கால சித்தர்கள் கூறிய மருத்துவம் முதற்கொண்டு ஒவ்வொரு வீட்டிலும் பாட்டி சொல்லும் வைத்தியம் வரை தலைமுறை தலைமுறையாகக் கடத்தப்படும் வைத்திய முறைகள் பலவுண்டு. அவற்றில் தினசரி சமையலில் பயன்படுத்தப்படும் அஞ்சறைப் பெட்டியில் உள்ள பொருட்கள் முதல் எண்ணற்ற வேர்கள், இலைகள், தழைகள், கிழங்குகள் மற்றும் மூலிகைகளுக்கும் இடம் உண்டு.

இறப்பது உறுதி என்றாலும் வாழும் காலத்தில் பிணியின்றி வாழ விரும்பி மனிதர்கள் தாம் தோன்றிய காலத்திலிருந்து பல வழிகளையும் மருந்துகளையும் தேடிக் கொண்டுதான் இருக்கின்றனர். அதனால் மனித பண்பாட்டின் முதல் அறிவியல் கண்டுபிடிப்புகளில் ஒன்று மருத்துவம் என்றும் கூறப்படுவதுண்டு. நமது சாதாரண ஒரு இருமலுக்கும் நம் அருகில் உள்ள ஒவ்வொருவரும் தாம் அறிந்த ஏதோ ஒரு மருத்துவ முறையை முயன்று பார்க்கச் சொல்லும் பட்டறிவு இல்லாதோர் இருக்க வழியில்லை.

செத்தவர் தம்மை எழுப்பித் தருகின்ற
சித்தர் பிறந்த தமிழ்நாடு

எனச் சித்தர்களின் மருத்துவ அறிவை உயர்வு நவிற்சியாகப் பாராட்டிப் பாடுவார் பாரதியார். இறந்தவரைப் பிழைக்க வைத்தல் இன்றுவரை அறிவியலில் கைகூடாத ஒன்று. பிறந்து, வளர்ந்து, இனப்பெருக்கம் செய்து வாழ்ந்து, பின்னர் இறந்துவிடுவதே இயற்கையின் நியதி. மூப்பு, பிணி, இறப்பு என்ற வாழ்வின் நிலைகளால் வாழ்வின் நிலையாமையை எதிர்கொண்ட மன்னர் சித்தார்த்தரும் போதி மரத்தடிக்குச் சென்று ஞானம் பெற்ற புத்தர் என்ற துறவியானார்.

சித்தர்களை மருத்துவத்துடன் தொடர்புப் படுத்துவது அன்றி அவர்கள் கூறிய ஆன்மீக தத்துவங்களுடனும் தொடர்புப் படுத்துவதையும் அறிந்துள்ளோம். ஆன்மிக தத்துவ அறிவுரைகள் மனநோய் தீர்க்கும் இன்றைய உளவியல் மருத்துவத்தின் கீழ் வரக்கூடும். சித்தர்கள் செயற்கரிய செயல்களைச் செய்வார்கள் என்ற கதைகளும் உண்டு வானில் பறப்பது, நெருப்பில் நிற்பது, நீரில் நெடுநேரம் மூச்சடக்குவது, கூடு விட்டுக் கூடு பாய்வது போன்றவை அறிவியல் விதிகளுக்கு அப்பாற்பட்டவையாக இருப்பவை. இவற்றைச் சித்து வேலைகள் என்று அறிவோம். பொதுவாகத் தியானத்தின் மூலம் ஆன்மிகத்திலும் அறிவியலிலும் அறிவுபெற்ற நிலையால், அதாவது சித்தி பெற்றதால் சித்தர் ஆனார்கள் என்பது ஏற்கக்கூடிய ஒரு விளக்கம்.

தமிழின் மருத்துவ இலக்கியங்களைச் சித்தர் இலக்கியங்கள் என்று கூறுவதே மரபு. பட்டினத்தார், கொங்கணர், இடைக்காடர், கருவூரார் போன்ற சித்தர்கள் அவர்கள் வாழ்ந்த இடத்தின் அடிப்படையில் அடையாளம் காணப்பட்டனர். சிறந்த மருத்துவர்களாக இருந்த சித்தர்கள் தங்கள் மருத்துவ அறிவை பின் வருவோருக்கு உதவும் வகையில் பாடல்களாக, மருத்துவ நூல்களாக எழுதிச் சென்றுள்ளார்கள்.

தஞ்சை சரஸ்வதி மகால் 1962 இல் முதல் பதிப்பாக வெளியிட்ட "கொங்கணர் சரக்கு வைப்பு (நூறு)" அத்தகைய மருத்துவ நூல்களுள் ஒன்று. இதுவே பண்டைய தமிழ் மருத்துவம் குறித்து சரஸ்வதி மகால் வெளியிட்ட முதல் நூல் என்பதை நூலின் முன்னுரை தெரிவிக்கிறது. மேலும் சரஸ்வதி மகாலில் இந்த நூலின் படி ஒன்றே ஒன்றுதான் இருக்கிறது என்றும் வேறு எங்கும் இந்த நூலின் படி இருப்பதாகவும் தெரியவில்லை என்றும் நூல் கூறுகிறது. முன்னர் யாரும் அச்சிலும் வெளியிட்டிராத நூல் இது. ஆகையால் நூலின் படிகள் பலவற்றை ஒப்பிட்டுச் சீர்தூக்கிச் செம்மைப்படுத்திப் பதிப்பிடும் வாய்ப்பு இல்லாமையால் சுவடியில் உள்ளது உள்ளவாறே அச்சு நூல் வடிவில் வெளியிட்டுள்ளார்கள்.

சித்தர்களில் கொங்கணர் என்றும் கொங்கணவர் என்றும் அறியப்படும் சித்தர் மேலைக் கடற்கரை கொங்கணம் பகுதியில் பிறந்தவர் என்றும் போகரின் மாணாக்கர் என்றும் கூறப்படுகிறார். "கொக்கென்று நினைத்தீரோ கொங்கணரே ?" என்ற கதை இவர் பெயருடன் இணைத்து அறியப்படுகிறது. கொங்கணர் மரத்தடியில் தவம் செய்து கொண்டிருக்கையில் கொக்கு அவர் மீது எச்சமிட்டதால் அவர் தவம் கலைகிறது. சினம் கொண்ட பார்வையால் அவர் கொக்கை நோக்குகையில் அது எரிந்து சாம்பலாகிறது. பிச்சை வேண்டி ஒரு இல்லத்திற்குச் செல்லும் அவர் உணவு வேண்டி குரல் எழுப்புகிறார். கணவருக்குப் பரிமாறிக் கொண்டிருந்த இல்லத்தலைவி அந்த வேலையை முடித்துவிட்டு வந்து கொங்கணருக்கு உணவளிக்கிறாள். அவளது மெத்தனத்தால் அவளையும் சினத்துடன் உறுத்து நோக்குகிறார். ஆனால் எந்த ஒரு பலனும் இல்லை. பெண்மணி தனது கடமைக்கு முதன்மை கொடுத்த காரணத்தால் அவளிடம் அவர் சினம் பலிக்கவில்லை. அப்பொழுது "என்னை கொக்கென்று நினைத்தீரோ கொங்கணரே ?" என அப்பெண்மணி நகைத்ததாகவும், அவளது மதிக்கூர்மையையும் மேன்மையையும் உணர்ந்த கொங்கணர் அவளை மெச்சியதாகவும் இக்கதை கூறுகிறது.

பொதுவாக, சித்த மருத்துவ இலக்கியங்கள் ஒருவர் பெயரில் பலரால் தலைமுறை தலைமுறையாக எழுதித் தொகுக்கப்பட்டவை என்பது ஆய்வாளர்கள் துணிபு. கொங்கணர் இயற்றிய மருத்துவ நூல்கள் பற்பல வென்றும் அவற்றுள் சில நூல்களே அறியப்பட்டுள்ளன என்றும் தெரிகிறது. அவற்றுள் ஒன்று "கொங்கணர் சரக்கு வைப்பு". இந்த நூல் தஞ்சை சரசுவதி மகால் நூலக பதிப்பகம் வெளியீடாக 1990-ல் வெளியிடப்பட்டுள்ளது. எளிய பாடல்களின் மூலம் நூலின் கருத்துகள் சொல்லப்படுகிறது.

இந்த நூலில், சீன வைப்பு முறை என்ற அயலக மருத்துவ முறையிலிருந்து, பாஷாணம், குளிகை, வசியத்திற்கு மை செய்வது வரை பல மருந்து தயாரிக்கும் முறைகள் உள்ளன. எடுத்துக்காட்டாக சுத்திவகை மூன்று (பாடல்: 76), கமன குளிகை செய்முறை (பாடல்கள்: 84-89),

வசியத்திற்கு மை செய்முறை (பாடல்கள்: 90-94) ஆகியவற்றைக் கூறலாம். நூலில் கொங்கணர் சரக்கு வைப்பு நூறு மருத்துவப் பாடல்கள் தவிர்த்து மச்சமுனி நாயனார் கடைக்காண்டம் எண்ணூறு, கொங்கணர் பலதிரட்டு ஐந்நூறு, உரோமரிஷி ஐந்நூறு, அகத்தியர் அமுத கலைஞானம் ஆயிரத்துநூறு பாடல்களின் தொகுப்பும் இடம் பெற்றுள்ளன.

நூலில் கொடுக்கப்பட்டுள்ள பாடல்களுக்கு மாதிரியாக மூன்று பாடல்கள் கீழே கொடுக்கப்படுகிறது:

சித்தியென்றா லெளிதாகச் சித்தியாமோ
சித்தருக்குச் செய்வகையை செய்யக்கேளு
முத்தியதோர் மூலிகையி லஞ்சுசுத்தி
யுருவான சரக்கிலே அஞ்சுசுத்தி
நித்தியதோ ருன்னிடத்தி லஞ்சுசுத்தி
நேரான யிதின் நேர்ந்து விபரம் கேளே.
-- சுத்திவகை மூன்று (பாடல் - 76)

வகுத்திட்ட துருசியாலே சத்தேகேளு
மைந்தனே நிமளையது பலந்தானன்று
செகத்திட்ட பழச்சாற்றால் ஆட்டிக்கொண்டு
செயலான பீங்கானில் பழச்சாறுவிட்டு
நிகழ்ந்திடவே யேழு நாள் ஆவிமுன் காட்டு
நேராகச் சாறுவத்தி யூத்திக்கொள்ளும்
பருத்திட்ட யேழுநாள் பாலாடை போல் கட்டும்
பாலகனே யுலர்த்தியல்லோ பண்பாய்வாங்கே.
-- கமன குளிகை செய்முறை (முதல் பாடல் - 84)
(கமன குளிகை செய்முறைபாடல்கள்: 84-89)

வாறான நிமளையத்தான் வயிரவற்குப்பூசி
மைந்தனே உலத்தியல்லோ ஊதிப்போட்டால்

தேறான சுண்ணமப்பா கடுஞ்சுருக்குத்
        தேவியுட சுண்ணமோடு துருசிச்சுன்னம்
கூறான வங்கத்தின் சுன்னத்தோடு
        கூறரிய வழலையோடு சுன்னந்தானும்
நீறான சீனத்தின் கன்னத்தோடு
        நிலைத்து நின்ற கல்லுப்புச் சுன்னந்தாக்கே.
        -- வசியத்திற்கு மை செய்முறை (முதல் பாடல் - 90)
(வசியத்திற்கு மை செய்முறை பாடல்கள்: 90-94)

பாடல்கள் பல மருத்துவர்களின் குழுவுக்குறிகளாக (குழுவுக்குறி ஒரு குறிப்பிட்ட இனத்தின் அடையாளத்தை வெளிப்படுத்தக்கூடிய பண்பாட்டுக் கூறுகளின் மொழி) கருதப்படுவதால், பாடல்களுக்கு ஆராய்ந்தறிந்தே உரைநூல் எழுத வேண்டிய நிலை இருந்ததால், இப்பாடல்களுக்கான உரை மூலப்பாடல்களுடன் கொடுக்கப்பெறவில்லை. எடுத்துக்காட்டாக, ஒரு பாடலில் வாழை என்பது அரம்பை என்று குறிப்பிடப்பட்டுள்ளது. நூலின் ஆசிரியர்களுள் ஒருவர் ஆயுர்வேத பண்டிதர் Dr.S. வெங்கட்டராஜன் என்ற அத்துறையின் அறிஞர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

இந்த நூல் தமிழ் இணையக் கல்விக்கழகத்தின் தமிழிணையம் - மின்னூலகத்தில் பொதுமக்கள் படிக்கும் வகையில் பதிவேற்றப்பட்டுள்ளது. ஏனைய நூல்களும் இந்த வகையில் மின்னாக்கம் செய்யப்பட்டு வெளியாகும் நாளை எதிர்நோக்கி இருப்போம்.

நூல் குறிப்பு:

கொங்கணர் சரக்கு வைப்பு (நூறு)

பதிப்பாசிரியர்கள்: K. வாசுதேவ சாஸ்திரி; ஆயுர்வேத பண்டிதர் Dr.S. வெங்கட்டராஜன்

பதிப்பாளர்: தஞ்சாவூர் : சரசுவதி மகால் நூல் நிலையம், மூன்றாம் பதிப்பு - 1990.

சரசுவதி மகால் நூலக வெளியீடு - 25

https://www.tamildigitallibrary.in/book-detail.php?id=jZY9lup2kZl6TuXGlZQdjZM0luxy#book1/

தமிழ் இணையக் கல்விக்கழகத்தின் தமிழிணையம் - மின்னூலகம்

சான்று:

தமிழ் ஓலைச்சுவடிகளை நவீன டிஜிட்டலில் பாதுகாக்கும் பணி குறித்து உயர்நீதிமன்ற மதுரைக்கிளை கேள்வி

http://www.dinakaran.com/News_Detail.asp?Nid=532404

நன்றி: "சிறகு" மின்னிதழ்

## 17. சங்ககாலக் குடும்ப உறவுகளும் சமூகஉறவுகளும்

*— முனைவர்.ச.கண்மணி கணேசன்*

முன்னுரை:

சங்ககாலத் தமிழகத்தின் சமூகவரலாற்றை அறிவதற்குச் சங்க இலக்கியம் தலைமை ஆதாரமாக அமைகிறது. குடும்ப சமூகஉறவுநிலைகளைப் புறப்பாடல்களும் அகப்பாடல்களும் சித்தரிக்கின்றன. வீரயுகம் ஆகிய சங்ககாலத்தின் இவ்வுறவு நிலைகளைத் தெளிவாகப் புரிந்து கொள்ள வேறு காலகட்டத்தைச் சேர்ந்த இலக்கியங்களைத் துணை கொள்ள வழியில்லை.

சமூகநலன் கருதிய செயல்பாடு:

பரதவர் சமூகத்தில் பொதுநலன் கருதி கலங்கரை விளக்கு ஏற்றினர். இரவில் கடலில் வரும் நாவாய்களுக்கும் படகுகளுக்கும் கரை இருக்கும் திசையைத் தெரிவிக்க இது ஏதுவாயிற்று. (நற். -பா-219) தாயங் கண்ணனார் அவ்விளக்கு இளஞாயிறு போல் ஒளிவீசியது என்கிறார்.

பெற்றோர் மக்கள் உறவு:

தாயும் தந்தையும் ஒருசேரத் தம் மக்களைப் பாசத்துடன் வளர்த்தனர். குழந்தைக்கு உணவூட்டும் தாய் பற்றிய சித்தரிப்பு நற்றிணையில் உள்ளது. (பா- 110) தன் குழந்தை பாலுண்ண மறுக்குங்கால் சிறு கோலால் ஓச்சும் பாசமிகு தந்தையின் செயலைப் பொன்முடியார் வருணிக்கிறார். (புறம்.- பா- 310)

மணமுடிக்குமுன் செல்லமகள் தந்தையிடம் நகை கேட்டுக் கொஞ்சுவது உண்டு. மகள் விருப்பப்படி தந்தை நகை செய்து போட்டு மகிழ்வது உண்டு. திருமணத்திற்குப் பின்னர் தந்தை தன் செல்லமகள் குடும்பவாழ்வின் வறுமை நீக்க முற்படுவதும் உண்டு. ஆனால் மகள் அதை

ஏற்றுக்கொள்ள மறுப்பதே செம்மாந்த பண்பு என்ற கொள்கை இருந்தது. (நற்.- பா- 110)

மகளின் வாழ்விற்கும் பாதுகாப்பிற்கும் தந்தை பொறுப்பெடுத்தான். அவளது இல்லற அமைதிக்கு ஊறு நேரின் அதைத் தந்தை தட்டிக் கேட்பான் என்ற கருத்தும் காணக் கிடக்கிறது. சங்கு வளையல் கேட்டு அழுத மகளுக்குத் தந்தை பொற்றொடி செய்து போட்டதாகவும்; அது தலைவி தன் தலைவனைப் பிரிந்து இருந்தக்கால் புறத்தார் இவளது தோள்மெலிவை உணரா வகையில் உதவியது என்றும் (நற்.- 136) நற்றங்கொற்றனாரின் பாடல் சித்தரிக்கிறது.

'தலைவியின் தந்தையும் தமையன்மாரும் மிகுந்த நெஞ்சுரமும் வலிமையும் வலியையும் கொண்டவர். தம் குடும்பத்தைச் சேர்ந்த பெண்ணை ஒருவன் ஏமாற்றி விட்டால்; அவர்கள் கொள்ளும் சினத்தையும் அதன் விளைவாகச் செய்யும் செயலையும் யாராலும் தடுத்து நிறுத்த இயலாது. அந்தச் சூழலைப் புரிந்து கொண்டே களவுக்குப் பின் தலைவன் திருமணம் செய்து கொண்டான். இப்போது திருமணத்திற்குப் பின்னர் அவன் புறத்தொழுக்கம் கொண்டதால் தலைவி துன்புறுகிறாள். இச்செய்தி அவள் தந்தைக்குத் தெரிந்தால் என்ன ஆகும்?' என்று தோழி பேசுவதாகச் சீத்தலைச்சாத்தனார் (நற்.- பா- 127) பாடுகிறார்.

அண்ணன் தம்பி உறவு:

முந்தைய நாள் போரில் அண்ணனை ஒருவன் கொல்ல மறுநாள் போரில் தன் அண்ணனுக்காகப் பழிவாங்கத் துடிக்கும் தம்பி பற்றி அரிசில்கிழார் (புறம்.- பா- 300) சுட்டிக் காட்டுகிறார்.

'இன்று என் அண்ணனைக் கொன்றவன் தம்பியை நான் நாளை அழிப்பேன்' என்று வஞ்சினம் கூறுவதாகவும் (புறம்.- 304) பாடல் அமைந்துள்ளது. சகோதர பாசத்தைப் போர் மேற்செல்லும் வீரரிடம் காண

இயல்கிறது. சங்க இலக்கியம் வீரயுகப் பாடல்களின் தன்மை கொண்டது என்ற முனைவர் கைலாசபதியின் கருத்து (The Heroic Poetry) வலுப் பெறுகிறது.

கணவன் மனைவி சுற்றத்தார் உறவு:

இல்லற வாழ்வில் மனைவியே கணவன் பெருமைக்கு ஆதாரம்; அதுபோல் கணவனே மனைவியின் பெருமைக்கு ஆதாரம் என்று பொருள்பட,

"மனைக்கு வரம்பாகிய வாணுதல் கணவன்
முனைக்கு வரம்பாகிய வென்வேல் நெடுந்தகை"

(புறம்.- பா- 314) என்னும் பாடலடிகளில் ஐயூர் முடவனார் பொருள் பொதியப் பாடியுள்ளார்.

கணவன் மனைவி நெருக்கம் அவருள் ஒருவர் தவறி விடும்போது தெளிவாகத் தெரிகிறது. போரில் வீரமரணம் அடைந்த தலைவனைக் கண்டு தலைவி புலம்புங்கால்,

"என்திறத்து அவலங் கொள்ளல் இனியே......
இளையுள் ஓய்வலோ கூறுநின் உரையே" (புறம்.- பா- 253)

என்று தான் உயிரை மாய்த்துக் கொள்ள இருப்பதைக் குறிப்பாகப் புலப்படுத்தி; 'உன் சுற்றத்தார் உன் பிரிவை எப்படித் தாங்குவர்?' என்று கையற்று அழுததாகக் குளம்பாதாயனார் பாடியுள்ளார்.

தலைவன் தேடிவரும் பொருளைப் பேணிப் பாதுகாப்பதும், பகுத்துக் கொடுத்தலும் தலைவியின் உரிமையாகவும் கடமையாகவும் இருந்தது. கானவன் வேட்டையாடி வந்த மானிறைச்சியையும், அகழ்ந்து எடுத்துவந்த கிழங்கையும் தலைவியே சுற்றத்தார் அனைவருக்கும் பகிர்ந்து கொடுக்கிறாள். (நற்.- பா- 85) இல்லறத் தலைவனை நம்பி அவனது மனைவி மட்டுமின்றி சுற்றமும் இருந்தது என்பதால் கூட்டுக் குடும்ப முறை நிலவியது எனலாம்.

மாமியார் மருமகள் உறவு:

மணமுடித்து இல்லறம் நடத்தும் தன் மகனின் செல்வச் செழிப்பும், அவன் விருந்தயரும் ஆரவாரமும் ஒரு தாய்க்கு மிகுந்த மகிழ்ச்சியைத் தரும். அது பற்றி அவள் மீண்டும் மீண்டும் எல்லா இடத்திலும் எல்லாரிடமும் பேசிப்பேசி மகிழ்வது இயற்கை. இறந்து போன கணவனின் உடலை வைத்துக் கொண்டு தன் கணவன் இறந்தமையை அவனது தாய் எவ்வாறு ஆற்றுவாள் என்று கூறி அழும் பெண் இதைச் சொல்கிறாள். (புறம்.- 254) கயமனாரின் பாடலில்; தன் மகனின் வளமையான வாழ்வு பற்றிய தாயின் இன்பச்செருக்கு அடிபட்டமை புலனாகிறது. தன் மாமியார் மகனின் பேரில் வைத்திருந்த பேரன்பையும், பெருமிதத்தையும் ஒரு மருமகள் போற்றுவதாக இக்கையறுநிலைப் பாடல் காட்டுகிறது.

இல்லறம் சமூகத்தோடு கொள்ளும் உறவு:

தம்மிடம் வந்து இரப்போர் யாராயினும் அவர்க்கு ஈதலே இசைபட வாழ வழிவகுக்கும் என்று நற்றிணையும் (பா- 84) சுட்டியுள்ளது. இதனால் விருந்து புறந்தரும் நடைமுறை செல்வாக்குப் பெற்றது. அத்துடன் ஊடல் கொண்டு கண் சிவந்திருக்கும் மனைவி தன்னிடம் புன்முறுவல் காட்ட விருந்தே ஏதுவாக அமையும் என்று தலைவன் உறுதியாக நம்பினான் (நற்.- பா- 120) என்று மாங்குடி கிழார் பாடியுள்ளார்.

இருவர் இணைந்து நடத்தும் இல்லறத்திற்கு கேடு நேரிட்டால்; தலைவன் மாண்டுவிட்டால் தலைவி தனித்து விருந்து புறந்தர இயலாது. விருந்தினர் கைம்பெண் தனித்து வாழும் வீட்டை நாடுவதில்லை. (புறம்.- பா- 261) ஆவூர் மூலங்கிழார் தலைவன் உயிரோடிருந்த போது விருந்து புறந்தந்த வளமனையை; அவன் இறந்த பிறகு அது வெறிச்சோடிக் கிடந்ததுடன் ஒப்பிட்டுப் பாடியுள்ளார்.

விருந்தயரப் பொருள் இன்றேல் அவ்வாழ்க்கை திருந்தா வாழ்க்கை; அது நன்மையற்றது என்று பெருங்குன்றூர் கிழார் (புறம்.- பா- 266) பாடுகிறார்.

சமூகத்தின் மிகச்சிறிய அங்கம் குடும்பம். குடும்ப உறுப்பினர்களுக்கு ஒரு சமுதாயத்தைக் கட்டிக் காக்கும் கடமை இருந்தது. குடும்பத்தில் ஒருவனும் ஒருத்தியும் சேர்ந்து நடத்தும் இல்லறத்தின் நோக்கமாவது; பங்காளிகளின் துன்பம் நீக்கி, நட்பினரின் இன்னல் களைந்து, நொதுமலாளரையும் பேணுவதாம். (அகநானூறு - பா- 95) கணக்காயனார் மகனார் நக்கீரனார் இதன் காரணமாகவே இல்லறத்தில் பொருள் முக்கியத்துவம் பெறுவதாக விதந்தோதுகிறார்.

குடும்ப உறுப்பினர்களுக்கும், சமூக உறுப்பினர்களுக்கும் உரிய கடமையே அவர்களிடையே உறவை ஏற்படுத்தியது. 'ஈன்று புறந்தருவது தாயின் கடமை; சான்றோனாக்குதல் தந்தையின் கடமை; வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லன் கடமை; வாகனமும் போர்வாய்ப்பும் நல்குதல் வேந்தனின் கடமை; போரில் வீரத்தைக் காட்டித் திரும்புதல் ஒரு குடிமகனின் கடமை என்று பொன்முடியார் வரிசைப்படுத்தி உள்ளார். (புறம்.- பா- 312).

தனிமனிதன் சமூகத்தோடு கொள்ளும் உறவு:

தனிமனிதன் ஊரோடு ஒட்டி வாழும் போது அந்த உறவுநிலை அவனது உயிரை விலையாகப் பெறுவதும் உண்டு. ஊர் நன்மைக்காக ஒருவன் தான் பொறுப்பேற்கும் தியாகநிலையைத் தனிமகனார் எடுத்துக் காட்டியுள்ளார். (நற்.- பா- 153) பகைவர் போர் மேற்கொண்டு அலைத்து வரும் போது ஊர்மக்கள் கலங்கிப் பாதுகாப்பிற்காக ஊரைக் காலி செய்து விட்டுச் செல்ல ஒருவன் தனித்திருந்து அந்தப் பாழூரைக் காவல் காத்து நிற்கிறான். அவன் உயிர் பிழைத்தல் அரிது எனினும்; தன் ஊர்மக்களுக்காக இப்பொறுப்பை ஏற்கிறான்.

தன் ஊரின் கால்நடையை எதிரிகள் கவர்ந்து செல்லும் போது அவற்றை மீட்பதற்காக ஒருவன் உயிரை விடும் சூழலும் ஏற்படலாம் என்பது வடமோதங் கிழார் பாடலில் (புறம். -பா-260) தெற்றெனப் புலனாகிறது.

ஆண்கள் மட்டுமின்றிப் பெண்களும் சமூகத்திற்குத் தாம் கடம்பட்டு இருப்பதை உணர்ந்திருந்தனர். முதல்நாள் போரில் தந்தை வீரமரணம் அடைய; இரண்டாம் நாள் போரில் கணவன் கால்நடைகளை மீட்பதற்கு உயிரை விட; மூன்றாம் நாளும் தன் மகனைப் போருக்கு அனுப்பும் தாய் தான் வாழும் சமூகத்திற்குத் தான் பட்ட கடமையை முற்றும் உணர்ந்தவள் ஆவாள். (புறம்.- பா- 279) ஒக்கூர் மாசாத்தியார்,

"செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிது விரித்து உடீஇ
ஒருமகன் அல்லது இல்லோள்
செருமுகம் நோக்கிச் செல்கென விடு"த்த
தாயைத் தன் பாடல்நாயகி ஆக்கியுள்ளார்.

விழாக்களும் மக்கள் சமூகமாகக் கூடி வாழும் உறவுநிலையை வலுப்படுத்தின. முதுவாய்க் குயவன் சாறு என அறிவித்ததுடன் விழா தொடங்கியது.(நற்.- பா- 200) விழா தொடங்கியவுடன் அந்தக் குடியிருப்பைச் சேர்ந்தோர்க்கு அச்சமூக நிகழ்வில் பங்கேற்க வேண்டிய கட்டாயம் இருந்தது. சாத்தந்தையார் வருணிக்கும் கட்டில் முடைவோன்; மனைவி மகப்பேறு உற்ற நிலையில்; பொருளின் தேவை முதற்குறி என்பதால்; ஞாயிறு மறையும் மழைக்கால மாலையில்; ஊர்த் திருவிழாவில் பங்கேற்க விரைந்து செயல் ஆற்றுவது அவனது சமூகக் கடப்பாட்டை எடுத்துக் காட்டுகின்றது. (புறம்.- பா- 82)

சமூகம் தனிமனித வாழ்வுடன் கொண்ட உறவு:

திருமணம் என்ற நிறுவனத்தைச் சங்ககாலச் சமூகம் போற்றியது. திருமணத்திற்கு முன்னர் ஒருவனும் ஒருத்தியும் இரவிலோ பகலிலோ களவு மேற்கொள்வதை சமூகம் விரும்பவில்லை. அதனாலேயே களவுக்கால வாழ்க்கை அலர் தூற்றுவதற்கும், அம்பலாக விரிவதற்கும் வாய்ப்பளித்தது. அந்த அலரையும், அம்பலையும் தாங்க இயலாமல் தலைவி உடன்போக

முடிவு செய்கிறாள். உலோச்சனார் மறுகில் பெண்டிரின் செயலைச் சொல்லோவியம் ஆக்குகிறார். (நற்.- பா- 149)

உடன்போன தலைவியையும், தலைவனையும் பின்னால் தேடிச் செல்லும் செவிலியை ஆற்றும் கண்டோரும் திருமணம் என்ற பந்தத்தைப் போற்றுகின்ற பாங்கைக் கலித்தொகையில் (பாலைக்கலி- பா- 9) காண்கிறோம்.

சமூகத்தில் காலூன்றி இருந்த வருணப் பாகுபாடும், தொழிலடிப்படையில் அமைந்த அழுத்தமான மக்கட்பிரிவுகளும், ஒரு திருமண பந்தத்தை உறுதி செய்வதில் பங்கேற்றன. பரதவ மகளை விரும்பிய நகர்ப் புறத்துச் செல்வந்தனின் மகனிடம் பேசும் தோழி 'உன் உறவு தேவையில்லை; எம் இனத்தில் நல்ல தலைவர்கள் உள்ளனர்' என்று மறுத்துரைக்கிறாள். (நற்.- பா- 45& தமிழ்ப்பேராய்வு- Vol.- 7- no.- 2- 30.12.2018 )

தொகுப்புரை:

பரதவர் சமூகத்தில் பொதுநலன் கருதி கலங்கரை விளக்கு ஏற்றினர்.

தாயும் தந்தையும் ஒருசேரத் தம் மக்களைப் பாசத்துடன் வளர்த்தனர்.

திருமணத்திற்குப் பின்னர் தந்தை தரும் செல்வத்தை ஏற்காமை பெண்ணின் செம்மாந்த பண்பாகக் கருதப்பட்டது. மகளின் வாழ்விற்கும் பாதுகாப்பிற்கும் தந்தை பொறுப்பெடுத்தான். மகளின் இல்லற அமைதிக்கு ஊறு நேரின் அதைத் தந்தை தட்டிக் கேட்பான். தம் குடும்பத்தைச் சேர்ந்த பெண்ணை ஒருவன் ஏமாற்றி விட்டால்; தந்தையும், தமையனும் கொள்ளும் சினத்தையும் அதன் விளைவாகச் செய்யும் செயலையும் யாராலும் தடுத்து நிறுத்த இயலாது.

சகோதர பாசம் போர் மேற்செல்லும் வீரரிடம் விஞ்சி நின்றது.

இல்லற வாழ்வில் மனைவியே கணவன் பெருமைக்கு ஆதாரம்; அதுபோல் கணவனே மனைவியின் பெருமைக்கு ஆதாரம் ஆனாள்.

தலைவன் தேடிவரும் பொருளைப் பேணிப் பாதுகாப்பதும், பகுத்துக் கொடுத்தலும் தலைவியின் உரிமையாகவும் கடமையாகவும் இருந்தது. கூட்டுக் குடும்ப முறை நிலவியது. மாமியார் மருமகள் உறவுநிலை போற்றும்படியாக இருந்தது. விருந்து புறந்தரும் நடைமுறை செல்வாக்குப் பெற்றது. இதனால் இல்லறத்தில் பொருள் சிறப்பிடம் பெற்றது. தலைவன் மாண்டுவிட்டால் தலைவி தனித்து விருந்து புறந்தர இயலாது. குடும்ப உறுப்பினர்களுக்கு ஒரு சமுதாயத்தைக் கட்டிக் காக்கும் கடமை இருந்தது.

அவரவர்க்குரிய கடமையே அவர்களிடையே உறவை ஏற்படுத்தியது. சமூகத்திற்காகத் தனிமனிதன் உயிரை விடவும் தயாராக இருந்தான். ஆண்கள் மட்டுமின்றிப் பெண்களும் சமூகத்திற்குத் தாம் கடம்பட்டு இருப்பதை உணர்ந்து இருந்தனர். விழாக்களும் மக்கள் சமூகமாகக் கூடி வாழும் உறவுநிலையை வலுப்படுத்தின.

திருமணம் என்ற நிறுவனத்தைச் சங்ககாலச் சமூகம் போற்றியது. வருணப் பாகுபாடும், தொழிலடிப்படையில் அமைந்த மக்கட்பிரிவுகளும் ஒரு திருமண பந்தத்தை உறுதி செய்வதிலும் பங்கேற்றன.

சுருக்கக்குறியீட்டு விளக்கம்:

நற்.- நற்றிணை

புறம்.- புறநானூறு

துணைநூற்பட்டியல்:

1. நற்றிணை- கு.வெ.பாலசுப்ரமணியன்(உ.ஆ)- நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், மதுரை- முதல் பதிப்பு - ஏப்ரல் 2004.

2. புறநானூறு- பகுதி I - ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை(உ.ஆ.)- கழக வெளியீடு- முதல் பதிப்பின் மறுபதிப்பு- 2007

3. புறநானூறு- பகுதி II- ஔவை.சு. துரைசாமிப்பிள்ளை(உ.ஆ.)- கழக வெளியீடு- முதல் பதிப்பின் மறுபதிப்பு- 2007.

4. அகநானூறு- நாவலர் ந.மு.வேங்கடசாமி நாட்டார் &கரந்தைக் கவியரசு ரா.வேங்கடாசலம் பிள்ளை (உ.ஆ.)- கழக வெளியீடு- முதற்பதிப்பின் மறுபதிப்பு- 2009

5. கலித்தொகை- நச்சினார்க்கினியர் (உ.ஆ.)- கழக வெளியீடு- முதற்பதிப்பின் மறுஅச்சு - 2007

(குறிப்பு: சென்னை செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்துடன்; விருதுநகர் வே.வ.வன்னியப்பெருமாள் பெண்கள் கல்லூரி இணைந்து 12-14திசம்பர் 2012ல் 'சங்க இலக்கியத்தில் சுற்றுச்சூழலியலும் பண்பாட்டியலும்' என்ற தலைப்பில் நிகழ்த்திய கருத்தரங்கில் வாசித்த ஆய்வுக்கட்டுரை 'சங்க இலக்கியத்தில் தனிமனித சமூக உறவுநிலைகள்' ஆகும். கருத்தரங்க மலரில் பதிப்பிக்கப்பட்டது. ஏழாண்டு கால இடைவெளியின் கருத்தாக்கங்கள் சேர்த்து மேம்படுத்தப்பட்ட போது இரண்டு கட்டுரைகளாகப் பிரிக்க வேண்டியதாயிற்று. அவற்றில் ஒன்றே இக்கட்டுரை.)

தொடர்பு:
**முனைவர். ச.கண்மணி கணேசன்** (kanmanitamilskc@gmail.com)
முதல்வர் (ஓய்வு)
ஸ்ரீ காளீஸ்வரி கல்லூரி(தன்னாட்சி), சிவகாசி

## 18. மதர்

*— முனைவர்.ப.பாண்டியராஜா*

மதர் என்ற சொல் சங்க இலக்கியங்களில் 28 முறை பயின்று வருகிறது. தமிழ்ப்பேரகராதி (Tamil Lexicon) இதனை வினைச்சொல்லாகவும், பெயர்ச் சொல்லாகவும் கொள்கிறது. இதனை வினைச்சொல்லாகக் கொண்டு, இதற்கு,

செழித்தல், To flourish; to be fertile, rich or luxuriant;
மிதமிஞ்சிக்கொழுத்தல், To be too luxuriant to be productive, as soil, plants, etc,
மதங்கொள்ளுதல், To be affected with frenzy, as a bull or elephant;
செருக்குதல், To be self-conceited, arrogant;
களித்தல், To rejoice; to be full of joy,
மிகுதல், To increase, abound,

என்ற பொருள்களும், பெயர்ச்சொல்லாகக்கொண்டு,

செருக்கு, Pride, arrogance, self-conceit, wantonness;
மகிழ்ச்சி, joy,
மிகுதி, Abundance;
பாய்ச்சல், Rush; gust; impulse;
வீரம், Bravery

ஆகிய பொருள்களும் கொடுக்கப்பட்டுள்ளன. ஏனைய அகராதிகளிலும் இவற்றையொட்டிய பொருள்களே கொடுக்கப்பட்டுள்ளன.

இனி, சங்க இலக்கியங்களில் இச்சொல் இந்தப் பல்வேறான பொருள்களை எவ்வாறு தாங்கி வருகிறது என்று பார்ப்போம். இச்சொல், சங்க இலக்கியங்களில் வருகின்ற 28 இடங்களில், 21 இடங்களில் பெண்களின் கண்களுக்கு அடைமொழியாகக் கொடுக்கப்பட்டுள்ளது. எனவே, அவ்வாறு அல்லாத மற்ற பயன்பாடுகளை முதலில் பார்ப்போம்.

1.

கடும்தெறல் இராமனுடன் புணர் சீதையை
வலி தகை அரக்கன் வௌவிய ஞான்றை
நிலம் சேர் மதர் அணி கண்ட குரங்கின் - புறம் 378/18-20

மிக்க திறலையுடைய இராமனுடன் காட்டிற்குச் சென்ற சீதையை
மிக்கவலிமைபெற்ற அரக்கன் இராவணன் கவர்ந்துசென்றபோது
சீதை கழற்றியெறிய நிலத்தே வீழ்ந்த வளப்பம் மிக்க அணிகலன்களைக்
கண்டெடுத்த குரங்கினுடைய
என்பது இதன் பொருள்.

எனவே, இங்கு சீதை அணிந்திருந்த அணிகலன்கள் மிகவும் விலையுயர்ந்தவையாய் இருந்திருக்குமாதலால், அவற்றை rich or luxuriant என்ற பொருளில் செழுமையான அல்லது வளப்பம் மிக்க நகைகள் எனப் பொருள்கொள்ளலாம்.

2.

மதர் புலி வெரீஇய மையல் வேழத்து - அகம் 39/11

செருக்குற்ற புலியினைக் கண்டு அஞ்சிய மயக்கம் பொருந்திய
யானைக்கூட்டம்

இங்கே செருக்கு என்ற வினைப்பொருள் ஏற்புடையதாய் இருக்கக் காண்கிறோம்.

3.

மதர் எழில்
மாணிழை மகளிர் பூணுடை முலையின்
முகை பிணி அவிழ்ந்த கோங்கமொடு - அகம் 99/3-5

இறுமாந்த அழகினையும்
மாண்புற்ற அணியுமுடைய மகளிரது பூண் அணிந்த முலையினைப் போன்ற
முகைகள் அலர்ந்த கோங்கம்பூக்களொடு

4.

இதழ் அழிந்து ஊறும் கண் பனி மதர் எழில்
பூண் அக வன முலை நனைத்தலும் - குறு 348/4,5

இமையின் விளிம்பைக் கடந்து ஊறுகின்ற கண்ணீர்த்துளி, இறுமாந்த
அழகினையுடைய
பூண்களின் அகத்தே இருக்கும் அழகிய முலையை நனைக்கின்றதனையும்

இங்கே, மதர் என்பது இளம்பெண்களின் எடுப்பான மார்பகங்களுக்கு அடைமொழியாகக் கொடுக்கப்பட்டிருப்பதால், மதர் என்பதற்கு, செருக்கு என்பதன் வேறொரு பொருளான இறுமாப்பு பொருளாகக் கொள்ளப்பட்டுள்ளது. பால்ஸ் மின் தமிழ் அகராதியும் மதர் என்ற சொல்லுக்கு, இறுமாப்பு, haughtiness என்ற பொருளைத் தருகிறது.

5.

மதர் கயல் மலைப்பின் அன்ன கண் - அகம் 140/10

செருக்குள்ள கயல் இரண்டு எதிர்த்துப் பொருவது போன்ற அவள் கண்கள்

6.

நொடை நவில் நெடும் கடை அடைத்து மட மதர்
ஒள் இழை மகளிர் பள்ளி அயர - மது 622,623

பண்டங்களுக்கு விலைகூறும் நெடிய கடையை அடைத்து மடப்பத்தினையும் செருக்கினையும்
ஒள்ளிய அணிகலன்களையுமுடைய மகளிர் துயிலுதலைச் செய்ய

7.

காமம் கனைந்து எழ கண்ணின் களி எழ
ஊர் மன்னும் அஞ்சி ஒளிப்பார் அவர் நிலை
கள்ளின் களி எழ காத்த ஆங்கு அலர் அஞ்சி
உள்ளம் உளை எழ ஊக்கத்தான் உள்_உள்
பரப்பி மதர் நடுக்கி பார் அலர் தூற்ற
கரப்பார் களி மதரும் போன்ம் - பரி 10/63-68

காம உணர்வு மிகுந்து எழ, அதனால் கண்ணில் அக் காமக் களிப்பு தோன்ற, ஊருக்காக மிகவும் அஞ்சி, அக் காமக்களிப்பினை ஒளிப்பார் சிலர், அவரின் நிலை
கள்ளுண்டதால் களிப்பு மிகுந்து எழ, அதைக் கட்டுப்படுத்துவது
போன்றிருந்தது; ஆனால் ஊராரின் பேச்சுக்கு அஞ்சி,
உள்ளத்தில் துன்பம் உண்டாக, கள்வெறியை மறைக்க முயலும் முயற்சியால் அதை மேலும் மேலும்
பரப்பி, தம் களிப்புக்காக நடுங்கி, உலகம் பலவாறாய்த் தூற்ற,
தம்முள் மறைக்கும் கள்வெறியைப் போன்றது, முன்னவர் கொண்ட காமவெறி.

மேற்கூறிய 7 இடங்களைத் தவிர, சங்க இலக்கியங்களில் 21 இடங்களில் மதர் என்ற சொல் பெண்களின் கண்களைக் குறிப்பிடப் பயன்படுத்தப்பட்டுள்ளது. அவற்றுள் 11 இடங்களில் 'அரி மதர் மழைக்கண்' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

'அரி மதர் மழைக் கண்' என்ற தொடரில் வரும் மதர் என்ற சொல் பெயர்ச்சொல்லா, வினைச்சொல்லா என்பதில் குழப்பம் நிலவுகிறது. இத்தொடரில் அரி (செவ்வரி), மழை (குளிர்ச்சி) ஆகிய சொற்கள் பெயர்ச்சொற்களே. எனவே மதர் என்பதனையும் ஒரு பெயர்ச்சொல்லாக எடுத்துக்கொள்ளலாம். ஆனால், பெரும்பாலான உரையாசிரியர்கள் இத்தொடருக்கு, செவ்வரி படர்ந்த மதர்த்த குளிர்ந்த கண் என்றே உரை கொள்கின்றனர். ஆனால், தமது விளக்கவுரையில், மதர் - செருக்கு, மதர் - களிப்பு என்ற பொருளும் தருகின்றனர். எனவேதான் இத்தொடரில் வரும் 'மதர்' என்ற சொல்லை எதில் சேர்ப்பது என்ற குழப்பம் நிலவுகிறது.

கண் என்ற சொல்லுக்கு அடையாகக் கொடுக்கப்படும் மதர் என்ற சொல் பயன்பாட்டை மூன்று விதங்களாகப் பிரிக்கலாம்.

1. தலைவி அல்லது ஓர் இளம்பெண்ணின் கண்களைப் பாராட்டும் விதமாக அமைந்திருப்பது.

அசை மென் சாயல் அம் வாங்கு உந்தி
மட மதர் மழை கண் இளையீர் - குறி 140,141

தளர்ந்த மென்மையான சாயலினையும், அழகாக வளைந்திருக்கும் கொப்பூழினையும்
மடப்பத்தையுடைய மதர்த்த குளிர்ந்த கண்ணினையுமுடைய இளையீரே

அல்கு படர் உழந்த அரி மதர் மழை கண்
பல் பூ பகை தழை நுடங்கும் அல்குல்
திரு மணி புரையும் மேனி மடவோள்
யார் மகள்-கொல் இவள் தந்தை வாழியர் - நற் 8/1-4

நீங்காத துயரத்தின்வாய்ப்பட்ட செவ்வரி படர்ந்த குளிர்ச்சியான கண்களையும், பல பூக்களும் மாறுபட்ட தழைகளும் உடைய தழையாடை அசைந்தாடும் அல்குலையும்
அழகிய நீலமணி போன்ற மேனியையும் கொண்ட இளையோளாகிய தலைவி யாருடைய மகளோ? இவளின் தந்தை வாழ்க!

முது நீர் இலஞ்சி பூத்த குவளை
எதிர் மலர் பிணையல் அன்ன இவள்
அரி மதர் மழை கண் காணா ஊங்கே - நற் 160/8-10

நாட்பட்ட நீரினைக்கொண்ட பொய்கையில் பூத்திருக்கும் குவளை மலர்களை எதிர் எதிராக வைத்துக்கட்டியதைப் போன்ற இவளது
செவ்வரி பரந்த செழுமையும் குளிர்ச்சியும் மிகுந்த கண்களைக் காண்பதற்கு முன்னர்

ஒரீஇயின போல இரவு மலர் நின்று
திரு முகத்து அலமரும் பெரு மதர் மழை கண் - பதி 21/34,35

குளத்திலிருந்து நீங்கி வந்ததைப் போல, இரவிலும் மலர்ந்து நின்று, அழகிய முகத்தினில் சுழல்கின்ற பெரிய அமைதியான குளிர்ச்சியான கண்களையும்,

கய வாய் நெய்தல் அலர் கமழ் முகை மண நகை
நயவரு நறவு இதழ் மதர் உண்கண் வாள் நுதல்
முகை முல்லை வென்று எழில் முத்து ஏய்க்கும் வெண் பல்
நகை சான்ற கனவு அன்று நனவு அன்று நவின்றதை - பரி 8/74-77

குளத்திடத்து இருக்கும் நெய்தல் பூக்களையும், மலர்ந்து மணங்கமழும் மொட்டுக்களின் மணத்துடனான மலர்ச்சியினால்

கண்டோர் விரும்புவதற்குரிய நறவம் பூவின் இதழையும் போன்ற மதர்த்த மையுண்ட கண்களையும், ஒளிவிடும் நெற்றியையும்,
மொட்டாகிய முல்லையையும் வென்று, அழகிய முத்துக்களைப் போன்றிருக்கும் வெண்மையான பற்களையும் கொண்ட தலைவி கூறியது நகைப்பதற்குரிய கனவு அன்று, உண்மையாக நடந்த நிகழ்ச்சியும் அன்று!

> திருநகர் அடங்கிய மாசு இல் கற்பின்
> அரி மதர் மழை கண் அமை புரை பணை தோள்
> அணங்குசால் அரிவையைக் காண்குவம் - அகம் 114/13-15

செல்வமுள்ள மனையில் தங்கிய குற்றமற்ற கற்பினையும்
செவ்வரி படர்ந்த மதர்ந்த குளிர்ந்த கண்களையும் மூங்கிலை ஒத்த பருத்த தோளினையும் உடைய
தெய்வம் போல் சிறந்த நம் தலைவியைக் காண்போம்.

> ஓங்கு வரை இழிதரும் வீங்கு பெயல் நீத்தம்
> காந்தள் அம் சிறுகுடி கௌவை பேணாது
> அரி மதர் மழை கண் சிவப்ப நாளை
> பெரு மலை நாடன் மார்பு புணையாக
> ஆடுகம் வம்மோ காதல் அம் தோழி - அகம் 312/4-8

உயர்ந்த மலையினின்றும் வீழும் மிக்க மழையாலான அருவி நீரில்,
காந்தள் பூக்களையுடைய இச்சீறூரின் அலரினைப் போற்றாது
செவ்வரி படர்ந்த மதர்த்த குளிர்ந்த கண்கள் சிவந்திட, நாளை
பெருமலைநாட்டினனாகிய தம் தலைவனின் மார்பு தெப்பம் ஆக
விளையாடுவோம் வருவாயாக காதல் மிக்க தோழியே!

> கள்ளின்
> மகிழின் மகிழ்ந்த அரி மதர் மழை கண்

சின் மொழி பொலிந்த துவர் வாய்
பன்மாண் பேதையின் பிரிந்த நீயே - அகம் 343/16-19

கள்ளால் ஆகிய
மகிழ்வு போல் மகிழ்தற்கு ஏதுவாகிய செவ்வரி படர்ந்த மதர்ந்த குளிர்ந்த கண்களையும்
சிலவாய மொழிகளால் பொலிவுற்ற பவளம் போன்ற வாயினையும்
பலவாய மாண்புகளையும் உடைய நம் தலைவியாகிய பேதைப்பெண்ணைப் பிரிந்த நீ

தூமலர் தாமரை பூவின் அங்கண்
மா இதழ் குவளை மலர் பிணைத்து அன்ன
திரு முகத்து அலமரும் பெரு மதர் மழை கண்
அணி வளை முன்கை ஆய் இதழ் மடந்தை - அகம் 361/1-4

தூய மலராய தாமரைப் பூவிடத்தே
கரிய இதழ்களையுடைய குவளை மலர் இரண்டினைப் பிணைத்துவைத்தாற் போன்ற
அழகிய முகத்தே சுழலும் பெரிய மதர்த்த குளிர்ந்த கண்களையும்
அழகிய வளைகளையுடைய முன்கையினையும் அழகிய வாய்
இதழினையுமுடைய நம் தலைவியின்

நுதி வேல் கொண்டு நுதல் வியர் தொடையா
கடிய கூறும் வேந்தே தந்தையும்
நெடிய அல்லது பணிந்து மொழியலனே
இஃது இவர் படிவம் ஆயின் வை எயிற்று
அரி மதர் மழை கண் அம் மா அரிவை
மரம் படு சிறு தீ போல
அணங்கு ஆயினள் தான் பிறந்த ஊர்க்கே - புறம் 349

தன் கை வேலின் கூரிய இலையால் தன் நெற்றி வியர்வையைத் துடைத்து கேட்டார் அஞ்சத்தக்க மொழிகளைக் கூறுகின்றான் வேந்தனும், இவள் தந்தையும்
நெடுமொழிகளைத் தவிர பணிவைப் புலப்படுத்தும் சொற்களைச் சொல்லுகின்றானில்லை,
இது இவர்கள் கொள்கை ஆகும், இதனை ஆராயுங்கால் கூரிய பற்களையும் அரி பரந்து மதர்த்துக் குளிர்ந்த கண்களையும் அழகிய மாமை நிறத்தையுமுடைய அரிவையாவாள்
மரத்தைக் கடையுமிடத்துத் தோன்றும் சிறு தீ அம் மரத்தை அழிப்பது போல வருத்தம் விளைவிப்பவளாயினள் இவள் தான் பிறந்த ஊர்க்கு.

மேற்கண்ட எடுத்துக்காட்டுகளில் உள்ள 'மதர்' என்ற சொல், ஒரு பாராட்டுச்சொல்லாகவே இருக்கக் காண்கிறோம். எனவே, இத்தகைய இடங்களில் வரும் மதர் என்பதற்கு, செழிப்பான (luxuriant), வளமைபொருந்திய (rich), மகிழ்ச்சி நிறைந்த (joyful) போன்ற பொருள்கள் ஒத்துவரும் எனத் தோன்றுகிறது. மேலும், இவற்றில் சில இடங்களில், மதர்க்கண் என்பதைக் காந்தக்கண்கள், சுண்டியிழுக்கக்கூடிய கண்கள், கவர்ச்சியான கண்கள் என்றும் பொருள் கொள்ளலாம் எனத்தோன்றுகிறது.

2. அடுத்து, தலைவனை மயக்கி இழுக்கும் பரத்தையரின் கண்களும் மதர்க்கண்கள் எனப்படுகின்றன.

மட மதர் உண்கண் கயிறு ஆக வைத்து
தட மென் தோள் தொட்டு தகைத்து மட விரலால்
இட்டார்க்கு யாழ் ஆர்த்தும் பாணியில் எம் இழையை
தொட்டு ஆர்த்தும் இன்ப துறை பொதுவி - பரி 20/55-58

இணக்கமுள்ள மதர்த்த மையுண்ட கண்களைக் கயிறாகக் கொண்டு,

தன் பெரிய மென்மையான தோள்களாகிய கட்டுத்தறியிலே கட்டி, நிறுத்தி, இளமைபொருந்திய விரல்களால்
பொருள்கொடுப்போருக்கு யாழினை இசைத்து இசையெழுப்பி இன்பமூட்டும் பொழுதே, என் அணிகலன்களையும்
அணிந்து, மகிழ்வித்து, இன்பம் வழங்குவதில் பொதுமையுடையவளே!

சேரி
அரி மதர் உண்கண்ணார் ஆரா கவவின்
பரிசு அழிந்து யாழ நின் மேனி கண்டு யானும்
செரு ஒழிந்தேன் சென்றீ இனி - கலி 91/12-15

சேரியிலிருக்கும்
செவ்வரி படர்ந்த மதர்த்த மைதீட்டிய கண்ணையுடைய பரத்தையரின் ஆசை குறையாத தழுவலால்
உன் இயல்பான நிலை அழிந்துநிற்கும் உன் மேனியைக் கண்டு, நானும்
கோபம் தீர்ந்தேன்! செல்வாயாக அந்தப் பரத்தையரிடமே இப்போது";

அரி மதர் மழை கண் மாஅயோளொடு
நெருநையும் கமழ் பொழில் துஞ்சி இன்றும்
பெரு நீர் வையை அவளொடு ஆடி
புலரா மார்பினை வந்து நின்று எம்வயின்
கரத்தல்கூடுமோ - அகம் 296/3-7

செவ்வரி பரந்த மதர்த்த குளிர்ந்த கண்ணினை உடைய மாமை நிறத்தையுடைய பரத்தையுடன்
நேற்றும் மணம் கமழும் பொழிலில் துயின்று இன்றும்
அவளுடன் வையையின் நீர்ப்பெருக்கில் விளையாடி
ஈரம் புலராத மார்பினையுடையையாய் எம்பால் வந்து நின்று
எமக்கு மறைத்தல் இயலுமோ?

பரத்தையரின் கண்ணழகைத் தலைவியர் உறுதியாகப் பாராட்டமாட்டார் என்பது உறுதி. எனவே இது ஒரு வஞ்சப்புகழ்ச்சியாக இருக்கவேண்டும். மதர் என்ற சொல்லுக்கு with intense desire என்ற ஒரு ஆங்கில மொழிபெயர்ப்பு உண்டு. வைதேகி ஹெர்பர்ட் அம்மையார் தமது சங்க இலக்கிய ஆங்கில மொழிபெயர்ப்புகளில் இச்சொல்லுக்கு இந்த இடங்களில் luscious என்று பொருள்கொண்டிருப்பார். இதற்கு, Having strong sexual appeal என்று பொருள். இதனை seductive, voluptuous என்றும் கொள்ளலாம். எனவே, இத்தகைய இடங்களில் வரும் மதர் என்ற சொல்லுக்கு போதை தரும், மயக்கம்தரும், வெறியூட்டும் என்ற பொருள்கொள்வது பொருத்தமாகத் தோன்றுகிறது.

3. அடுத்து, மிகுந்த துயரத்தில் ஆழ்ந்து கண்ணீர்விடும் ஒரு பெண்ணின் கண்களும் மதர்க்கண் எனப்படுகின்றன.

நீர் எறி மலரின் சாஅய் இதழ் சோரா
ஈரிய கலுழும் இவள் பெரு மதர் மழை கண் - குறி 247,248

பெரிய மழைத் துளிகள் ஓங்கிப்பாய்ந்த மலர் போல் அழகழிந்து, இமை சோர்ந்து,
ஈரமுள்ளனவாய் கலங்கிநின்றன - (இவளின் பெரிய செழிப்பான குளிர்ந்த கண்கள்),

திரு முகம் இறைஞ்சினள் வீழ்பவற்கு இனைபவள்
அரி மதர் மழை கண் நீர் அலர் முலை மேல் தெறிப்ப போல் - கலி 77/3,4

தன் அழகிய முகத்தைக் கவிழ்த்துக்கொண்டு, தான் விரும்பியவனுக்காக வருந்துபவளின்

சிவந்த வரிகளும், செருக்கும், குளிர்ச்சியும் கொண்ட கண்ணின் நீர், பரந்த முலையின் மேல் தெறிப்பது போல்

ஆங்கே அரி மதர் உண்கண் பசப்ப நோய் செய்யும்
பெருமான் பரத்தைமை ஒவ்வாதி என்றாள் - கலி 82/20,21

அப்பொழுது, 'மகளிரின் செவ்வரிபடர்ந்த, செழித்த, மைதீட்டிய கண்கள்
பசந்துபோகும்படி அவருக்கு நோவைத் தரும்
உன் தந்தையின் பரத்தைமைக் குணத்தைப் போலிருக்காதே' என்றாள்,

மதர் எழில் மழை கண் கலுழ இவளே
பெரு நாண் அணிந்த சிறு மென் சாயல்
மாண் நலம் சிதைய ஏங்கி ஆனாது
அழல் தொடங்கினளே - அகம் 120/6-9

மதர்த்த அழகினையுடைய குளிர்ந்த கண் கலங்கிட, இவள்
மிக்க நாணத்தைக் கொண்ட சிறிய மெல்லிய சாயலினையுடைய
தன் மாண்புற்ற அழகு கெட ஏக்கமுற்று அமையாது
அழுதலைத் தொடங்கியுள்ளாள்

வண்டு பட நீடிய குண்டு சுனை நீலத்து
எதிர் மலர் பிணையல் அன்ன இவள்
அரி மதர் மழை கண் தெண் பனி கொளவே - அகம் 149/17-19

வண்டு வீழ நீண்ட ஆழமான சுனையில் பூத்த நீலப்பூவின்
புதிய மலர் இரண்டின் சேர்க்கை போன்ற இவளது
செவ்வரி படர்ந்த மதர்த்த குளிர்ந்த கண்கள் தெளிந்த நீரினைக் கொள்ள

நெடிது உயிர்த்து
வருந்துவள்கொல் அளியள் தானே சுரும்பு உண

நெடுநீர் பயந்த நிரை இதழ் குவளை
எதிர் மலர் இணை போது அன்ன தன்
அரி மதர் மழை கண் தெண் பனி கொளவே - அகம் 381/18-21

பெருமூச்செறிந்து
வருந்தியிருப்பாளோ! இரங்கத்தக்காள்! வண்டு தேனைப் பருக
ஆழமான நீரினால் தரப்பட்ட நிரையாகவுள்ள இதழ்களையுடைய குவளையது
புதிய மலராய இரண்டு பூக்களைப் போன்ற தனது
செவ்வரி பரந்த மதர்த்த குளிர்ந்த கண்கள் தெளிந்த நீரைக் கொள்ள

திருந்து இழை நெகிழ்ந்து பெரும் தோள் சாய்
அரி மதர் மழை கண் கலுழ செல்வீர் - அகம் 387/1,2

இவளின் திருந்திய அணி நெகிழவும் பெரிய தோள் நெகிழவும்
அரி பரந்த மதர்த்த கண்களில் நீர் ஒழுகவும் செல்லும் தலைவரே

கார் வான் இன் உறை தமியள் கேளா
நெருநல் ஒரு சிறை புலம்பு கொண்டு உறையும்
அரி மதர் மழை கண் அம் மா அரிவை - புறம் 147/3-5

கார்காலத்து மழையின் இனிய துளி வீழ்கின்ற ஓசையை தமியளாய்க் கேட்டு
நேற்று ஒருபக்கத்துத் தனிமைகொண்டிருந்த
அரி பரந்த மதர்த்த குளிர்ச்சியையுடைய கண்ணினையும் அழகிய மாமை
நிறத்தினையும் உடைய அந்த அரிவையின்

இவற்றில், சில இடங்களில், தலைவி துயருறுவதற்கு முன்னர் கண்கள் இருந்த நல்ல நிலை சுட்டப்படுவதாகக் கொள்ள இடமுண்டு. முன்பு மதர்த்திருந்த கண்கள் இப்போது கண்ணீர் மழை சொரிய என்ற பொருள் கொண்டால் இங்கு மதர் என்ற சொல்லுக்கு நாம் முதன்முதலில் (எண் 1) கண்ட பொருள் ஒத்துவரும். ஆனால்,

நெருநல் ஒரு சிறை புலம்பு கொண்டு உறையும்
அரி மதர் மழை கண் அம் மா அரிவை

என்ற அடிகளில் தனிமைத்துயரில் வாடும் மதர்க் கண்ணையுடைய அரிவை என்ற பொருள் அமைவதால், பொதுவாக, மதர் என்ற சொல்லுக்குத் தரப்படும், செழிப்பு, களிப்பு, செருக்கு ஆகிய பொருள்கள் ஏற்புடையனவாக இல்லை.

வான் ஆர் மதி வாள் முகமும் மட மான் மதர் நோக்கும்
கோன் ஆர் மகள்தன் வடிவம் நோக்கி - சிந்தா:12 2456/2,3

வான் நிலவு அனைய ஒளி முகமும், இளம் மானைப் பழிக்கும் மதர்த்த நோக்கும் உடைய
கோவிந்த மன்னனுடைய மகளின் வடிவழகைக் கண்டு

என்ற சிந்தாமணி அடிகள் நமக்கு ஒரு புதுப்பொருளைத் தருகின்றன.

மட மான் மதர் நோக்கும் என்ற தொடருக்கு 'மடமானை வென்ற மதர்த்த நோக்கும்' என்று பொருள்கொள்வார் பெருமழைப்புலவர்.

மட மான் நோக்கின் வாள் நுதல் விறலியர் - சிறு 31
மான் அமர் நோக்கம் கலங்கி கையற்று - குறி 25
மயில் இயல் மான் நோக்கின்
கிளி மழலை மென் சாயலோர் - பட் 149,150
மான் அமர் நோக்கம் காணா ஊங்கே - நற் 101/9
பேர் எழில் மலர் உண்கண் பிணை எழில் மான் நோக்கின் - கலி 58/2
மாதர் கொள் மான் நோக்கின் மடந்தை தன் துணை ஆக - கலி 69/4

மருண்ட மான் நோக்கம் காண்-தொறும் நின் நினைந்து - அகம் 74/10

மட மான் நோக்கி நின் மாண் நலம் மறந்தே - அகம் 91/18

மான் பிணை நோக்கின் மட நல்லாளை - அகம் 195/6

ஆகிய அடிகள், பெண்கள் மானைப்போன்ற பார்வையைக் கொண்டவர்கள் என்று குறிப்பிடுகின்றன. மானின் கண்களில் உள்ள சிறப்பு அதன் மருண்ட பார்வைதான்.

மருண்ட மான் நோக்கம் காண்-தொறும் நின் நினைந்து - அகம் 74/10 என்ற அகநானூற்று அடி இதனை உறுதிப்படுத்துகிறது.

எனவே, மதர் என்பதற்கு இங்கு ’மருண்ட’ அல்லது ‘மருட்சி’ என்ற ஒரு பொருளும் உண்டு என்பது இதனால் புலப்படுகிறது.

இந்தப் பொருளே மூன்றாவதாக இங்குக் குறிப்பிடப்படும் துயருள்ள பெண்களின் கண்ணுக்கு அடையாகக் குறிப்பிடப்படும் மதர் என்ற சொல்லுக்குச் சரியான பொருளாகும். ஆனால் எந்த அகராதியிலும் இந்தப் பொருள் கொடுக்கப்படவில்லை. இனிவரும் அகராதிகளில் இந்தப்பொருளும் சேர்க்கப்பட்டால், இச் சொல்லுக்குரிய பொருள் அட்டவணை முழுமைபெறும்.

தொடர்பு: முனைவர்.ப.பாண்டியராஜா (pipiraja@gmail.com)

http://sangacholai.in

tamilconcordance.in/

## 19. சங்க இலக்கியத்தில் யானைமலை

*— திருத்தம் பொன்.சரவணன்*

முன்னுரை:

யானைமலை - மதுரை மாவட்டத்தில் கிழக்கு ஒன்றியத்தைச் சேர்ந்த ஒத்தக்கடை என்னும் ஊரில் அமைந்துள்ள ஒரு மலை ஆகும். மதுரைக்கு வடக்கே 7 கிலோ மீட்டர் தொலைவில் திருச்சி தேசிய நெடுஞ்சாலையில் இம்மலை அமைந்துள்ளது. இதன் நீளம் சுமார் 4000 மீ; அகலம் 1200 மீ; உயரம் 400 மீ. இம்மலையை சற்று தூரத்திலிருந்து பார்த்தால் ஒரு யானை படுத்திருப்பது போலத் தோன்றுவதால் இது யானைமலை எனப் பெயர் பெற்றுள்ளது. இம்மலைக்கு நரசிங்கமங்கலம் என்ற பெயரும் உண்டு. இம்மலையின் உச்சியில் குகைத் தளம் காணப்படுகிறது. இக்குகைத் தளத்தில் சமணர் படுக்கைகள் அமைக்கப்பட்டுள்ளன. அத்துடன், இக்குகை தளத்தில் கி.பி.முதலாம் நூற்றாண்டைச் சேர்ந்த தமிழ் பிராமி கல்வெட்டுகள் காணப்படுகிறது.

யானைமலையில் நரசிங்கப் பெருமாளின் திருவுருவம் பாறையைக் குடைந்து செதுக்கப்பட்டுள்ளது. அதுமட்டுமின்றி, முருகப் பெருமானுக்கு இலாடன் கோயில் எனும் குடைவரை கோவிலும் இங்கு உள்ளது. இக் கோயிலில் கிரந்த, வட்டெழுத்து, தமிழ் கல்வெட்டுகள் உள்ளன. இக்கல்வெட்டுகள், முற்காலப் பாண்டியர், சோழர், பிற்காலப் பாண்டியர், விசயநகர மன்னர் ஆகியோர் பல்வேறு காலகட்டங்களில் திருப்பணிகள் பல இக்கோயிலுக்குச் செய்திருக்கின்றனர் எனக் கூறுகிறது. கி. பி. 9 - 10 நூற்றாண்டுகளில், சமண சமயத் துறவியான அச்சணந்தி என்பவரால், தீர்த்தங்கரர்களில் மகாவீரர், பார்சுவநாதர் மற்றும் பாகுபலி சிற்பங்கள் யானைமலையில் செதுக்கப்பட்டது. மதுரையை ஆண்ட விசயநகர மன்னர்கள் காலக் கல்வெட்டில் யானைமலையை "கசகிரி" என்று சமற்கிருதத்தில் குறிப்பிட்டுள்ளனர். இச் செய்திகளை எல்லாம் தமிழ் விக்கிப்பீடியாவில்

காணமுடிகிறது. ஆனால், சங்க காலத்திலேயே அதாவது ஏறத்தாழ 3000 ஆண்டுகளுக்கு முன்னரே இம்மலையானது சிறப்பாகப் பேசப்பட்டுள்ளது.. சங்க இலக்கியத்தில் இம்மலையைப் பற்றிக் கூறப்பட்டுள்ள செய்திகளை இக்கட்டுரையில் விரிவாகக் காணலாம்.



இலக்கியத்தில் யானைமலை:

பல்வேறு கல்வெட்டுக்களில் யானைமலை பற்றிய செய்திகள் பதிவுசெய்யப்பட்டு இருப்பதனை மேலே கண்டோம். கல்வெட்டுக்கள் மட்டுமின்றி, தமிழ் இலக்கியங்களிலும் யானைமலை பற்றிய செய்திகள் பதிவுசெய்யப்பட்டு உள்ளன.

தேவாரம் பாடிய திருஞானசம்பந்தர், கி.பி. 7 ஆம் நூற்றாண்டில் தாம் எழுதிய மதுரைப் பதிகத்தில், யானைமலையில் சமணர்கள் பள்ளிகளை அமைத்துத் தங்கி இருந்த செய்தியைக் கூறியுள்ளார். பரஞ்சோதி முனிவர் எழுதிய திருவிளையாடல் புராணத்திலும் யானைமலை பற்றிய குறிப்பு

உள்ளது. மதுரையைத் தாக்கவந்த ஒரு பெரிய யானையை, மதுரையைக் காக்கும் கடவுளான சொக்கநாதர், நரசிங்கம் என்னும் அம்பினைத் தொடுத்து அந்த யானையை நகர விடாமல் செய்ய, அதுவே யானைமலையாக மாறியது என்று அந்த நூலில் கூறப்பட்டுள்ளது. இவையெல்லாம் பிற்கால இலக்கியச் செய்திகள் ஆகும். இனி, சங்க இலக்கியங்களில் யானைமலையைப் பற்றி என்னென்ன செய்திகள் கூறப்பட்டுள்ளன என்று காணலாம்.

சங்க இலக்கியங்களில் யானைமலை:

சங்க இலக்கியங்களில் அகநானூறு, கலித்தொகை ஆகியவற்றில் யானைமலை பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளன. அகநானூற்றில் இரண்டு பாடல்களிலும் கலித்தொகையில் ஒரு பாடலிலும் ஆக மொத்தம் மூன்று பாடல்களில் யானைமலை பற்றிய செய்திகள் பதிவுசெய்யப்பட்டு உள்ளன.

சங்கப் பாடல்கள் யானைமலையைக் குறிப்பிடும்போது, பிடி மடிந்தன்ன குறும்பொறை, பிடி மடிந்தன்ன கல், பிடி துஞ்சு அன்ன அறை ஆகிய சொற்றொடர்களால் உணர்த்துகின்றன. ஒரு பெண்யானையானது படுத்து உறங்குவதைப் போலத் தோன்றும் மலை என்பதே இச் சொற்றொடர்களின் பொருளாகும். இனி, இப்பாடல்கள் கூறும் செய்திகளை விளக்கத்துடன் காணலாம்.

அகநானூற்றுப் பாடல்கள்:

மதுரை மருதன் இளநாகனார் இயற்றிய அகப்பாடல் 269 ல் யானைமலை பற்றிய விரிவான செய்திகள் கூறப்பட்டுள்ளது. இப்பாடலில் கூறப்பட்டுள்ள பல்வேறு செய்திகள் கீழே தொகுத்துத் தரப்பட்டுள்ளது.

யானைமலைப் பகுதியானது சங்ககாலத்தில் முல்லைநிலமாக விளங்கியது. இப் பகுதியில் முல்லைநில மக்களாகிய ஆயர் / கோவலர் வாழ்ந்தனர். ஆடுமாடுகளை மேய்ப்பதற்கு ஏதுவாக யானைமலையைச் சுற்றிலும் பரந்த பசும் புல்வெளி இருந்திருக்க வேண்டும் அல்லவா?.

இப்படிப்பட்ட பரந்த பசும் புல்வெளிகளை இன்றும் கூட யானைமலையைச் சுற்றிலும் காணலாம்.



ஆயர்களின் ஆடுமாடுகளைக் கள்வர் கவர்ந்து செல்வதும் ஆயர்கள் கள்வருடன் போர்செய்து அவற்றை மீட்டு வருவதும் சங்ககாலத் தமிழரின் நடைமுறை ஆகும். இத்தகைய நடைமுறை ஒன்றினைத் தான் இப்பாடல் விரிவாகக் கூறுகிறது. தங்களது ஆடுமாடுகளைக் கள்வர் கவர்ந்துசெல்ல, அவற்றை மீட்பதற்காகத் தலையில் சிவந்த கரந்தைப் பூமாலையினையும் கால்களில் கழல்களையும் அணிந்து கையில் கூரிய வேல் தாங்கி வீரர்கள் தயாராயினர். கரந்தைப் போருக்குக் கிளம்பும் முன்னர், வீரமரணம் எய்திய முன்னோர்களின் நடுகல்லை வழிபட்டனர். இந்த நடுகல்லானது செயற்கையாக நடப்படாமல் நட்டதைப்போலவே இயற்கையாக அகலமாகவும் உயரமாகவும் விளங்கியதொரு கல்லாகும். இதற்கு முன்னால் கரந்தைப் போருக்குச் சென்று வீரமரணம் எய்திய முன்னோர்கள் அனைவரின் பெயரும் இக் கல்லில் பொறிக்கப்பட்டு இருந்தது. இக் கல்லானது படுத்திருக்கும் யானையைப் போலவே தோன்றுகின்ற யானைமலையை ஒட்டியே அமைந்திருந்தது. முன்னோர்களின் பெயர்கள் பொறிக்கப்பட்ட அக்கல்லினை

நீரால் கழுவி ஈரமஞ்சளைப் பூசி வழிபட்டனர். இச் செய்திகளைக் கூறும் அகப்பாடல் வரிகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

...... ஏறு உடை இன நிரை பெயர பெயராது
செறி சுரை வெள் வேல் மழவர் தாங்கிய
தறுகணாளர் நல் இசை நிறும்-மார்
**பிடி மடிந்து அன்ன குறும் பொறை மருங்கின்**
நட்ட போலும் நடாஅ நெடும் கல்
அகல் இடம் குயின்ற பல் பெயர் மண்ணி
நறு விரை மஞ்சள் ஈர்ம் புறம் பொலிய
அம்பு கொண்டு அறுத்த ஆர் நார் உரிவையின்
செம் பூ கரந்தை புனைந்த கண்ணி
வரி வண்டு ஆர்ப்ப சூட்டி கழல் கால்
இளையர் பதி பெயரும் அரும் சுரம் இறந்தோர் ...... அகம். 269

மேற்பாடலில் குறிப்பிடப்பட்டுள்ள மலையானது மதுரையில் இருக்கும் யானைமலை தானா இல்லை வேறு ஏதாவதொரு மலையா என்ற ஐயப்பாட்டினை இப்பாடலை இயற்றிய ஆசிரியரின் ஊர் ஆகிய மதுரை என்ற பெயர் தெளிவாக்கி விடுகிறது.

அடுத்ததாக, பரணர் இயற்றிய அகப்பாடல் எண் 178 ஐக் காணலாம். யானைமலையின் அருகில் நீர் ஊறுகின்ற மிகப்பெரிய சுனை ஒன்று இருந்தது. யானைமலையில் பெய்யும் மழைநீரெல்லாம் கீழே இறங்கி கடலில் பல ஆறுகள் கலப்பதைப் போல இந்த சுனையில் ஒன்று சேர்ந்தன. வயிரம் போல ஒளிர்ந்த கூரிய பற்களையும் மூங்கில் வேர்போன்ற மயிரினையும் கொண்ட காட்டுப்பன்றி ஒன்று சேப்பங் கிழங்குகளைத் தோண்டி எடுத்து உண்டபின்னர் அருகிலிருந்த சுனைநீரைப் பருகியது. பின்னர், அடர்ந்து வளர்ந்திருந்த செடிகொடிகளுக்கு இடையில் காட்டுப்பன்றி புகுந்து சென்றபோது வெண் கூதாள மலர்களின்மேல் அதன் உடல் உரசவும், அம்மலர்களிலிருந்து பொன்னிறத் தாதுக்கள் பன்றியின் உடல்மேல்

உதிர்ந்தன. அந்நிலையில் அப்பன்றியைப் பார்ப்பதற்குப் பொன் துகள்கள் ஒட்டியிருக்கும் கட்டளைக் கல்லைப் போலத் தோன்றியதாகப் புலவர் பாடுகிறார்.



இப்பாடலில் குறிப்பிடப்பட்டிருக்கும் “பிடி மடிந்தன்ன கல்” என்பது யானைமலையினையும் “ஊறுநீர்ப் படார்” என்பது நீர்ச் சுனையினையும் குறிப்பதாகும். இச் சுனையினை யானைமலையின் கீழே இன்றும் காணலாம். யானைமலையின் கீழே இருக்கும் இச்சுனையானது ஏனைய குளம் குட்டைகளைப் போன்றதல்ல. இது நீர் ஊறும் பள்ளமாக விளங்கியதால் தான் பல ஆயிரம் ஆண்டுகள் கழிந்த பின்னும் வற்றிப் போகாமல் உள்ளது. இச் சுனையானது அருகில் உள்ள படத்தில் காட்டப்பட்டுள்ளது. மேற்காணும் செய்திகளைக் கூறும் அகப்பாடல் வரிகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

….. வயிரத்து அன்ன வை ஏந்து மருப்பின்
வெதிர் வேர் அன்ன பரூஉ மயிர் பன்றி
பறை கண் அன்ன நிறை சுனை பருகி
நீலத்து அன்ன அகல் இலை சேம்பின்

பிண்டம் அன்ன கொழும் கிழங்கு மாந்தி
**பிடி மடிந்து அன்ன கல் மிசை ஊழ் இழிபு**
யாறு சேர்ந்து அன்ன ஊறு நீர் படாஅர்
பைம் புதல் நளி சினை குருகு இருந்து அன்ன
வண் பிணி அவிழ்ந்த வெண் கூதாளத்து
அலங்கு குலை அலரி தீண்டி தாது உக
பொன் உரை கட்டளை கடுப்ப காண்வர ..... - அகம். 178

கலித்தொகைப் பாடல்:

கலித்தொகையின் 108 ஆம் பாடலிலும் யானைமலை பற்றிய செய்திகள் உள்ளன. யானைமலையானது முல்லைநில மக்கள் ஆகிய ஆயர் / கோவலர் வாழ்ந்த பகுதியாக விளங்கியது என்று முன்னர் கண்டோம். கலித்தொகையின் 108 ஆவது பாடலும் முல்லைநில மக்களைப் பற்றியே கூறுகின்றது.



பெண்யானை ஒன்று படுத்திருப்பதனைப் போலவே தோன்றும் யானைமலையைச் சுற்றிலும் இயற்கையானது செழிப்புடன் விளங்கியதைக் கலித்தொகைப் பாடலின் மூலம் அறிய முடிகிறது. மாடுகளை மேய்த்துக்கொண்டு கோலுடன் செல்லும் ஆயன் மகன் ஒருவன் வழியில்

ஒரு ஆயர்குலப் பெண்ணைக் கண்டு காதல் வயப்படுகிறான். அவளை விரும்புவதாகக் கூறி அவளது அழகைப் புகழ்கிறான். அவளோ அவனது காதலை ஏற்க மறுத்து வீடு செல்ல விரும்புகிறாள். அவள் வீட்டுக்கு விரைவதைத் தடுக்கும் ஆயனோ வெயில் அதிகமாக இருப்பதால் குளுமை மிக்க யானைமலைக்குச் செல்லலாம் என்றும் அங்கே சுனைநீரில் விளையாடியும் மலர்களைப் பறித்துச் சூடியும் சோலையில் தங்கிப் பொழுதைக் கழித்தும் மாலையில் வீடு திரும்பலாம் என்று ஆசை வார்த்தை கூறுகிறான். மிக நீளமான அப்பாடலிலிருந்து குறிப்பிட்ட சில வரிகள் மட்டும் சான்றாகக் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

…….. வெண்ணெய் தெழி கேட்கும் அண்மையால் சேய்த்து அன்றி
அண்ண அணித்து ஊராயின் நண்பகல் போழ்து ஆயின்
கண் நோக்கு ஒழிக்கும் கவின் பெறு பெண் நீர்மை
மயில் எருத்து வண்ணத்து மாயோய் மற்று இன்ன
வெயிலொடு எவன் விரைந்து சேறி உது காண்
**பிடி துஞ்சு அன்ன அறை மேல நுங்கின்**
தடி கண் புரையும் குறும் சுனை ஆடி
பனி பூ தளவொடு முல்லை பறித்து
தனி காயாம் தண் பொழில் எம்மொடு வைகி
பனி பட செல்வாய் நும் ஊர்க்கு ….. - கலி. 108

மேற்காணும் பாடல் வரிகளிலிருந்து யானைமலையைப் பற்றிய சுவையான சில செய்திகளை அறிந்துகொள்ள முடிகிறது. வெட்டப்பட்ட நுங்கின் கண்களைப் போலத் தோன்றும் சிறிய பல நீர்ச்சுனைகள் யானைமலையின் மேலே இருந்தன என்றும் தளவம், முல்லை, காயா போன்ற பலவித மலர்கள் பூத்துக் குலுங்கும் சோலைகள் யானைமலையைச் சூழ இருந்தன என்றும் ஆயர்கள் தமது வீடுகளில் வெண்ணெய் கடையும் ஓசையானது எப்போதும் அங்கே கேட்டுக்கொண்டே இருந்தது என்றும் இப்பாடலின் வரிகள் மூலம் தெரிய வருகிறது. யானைமலையின் மேல்

இருந்த சுனைகளையே பின்னாளில் வந்த சமணர்கள் தமக்கான படுக்கைகளாகச் செதுக்கி மாற்றியிருக்கக் கூடும்.

நரசிம்மர் குடைவரை:

மேற்காணும் கலித்தொகைப் பாடலிலிருந்து அறியப் பெறுவதும் சங்ககாலம் தொட்டு இன்றுவரையிலும் நிலைபெற்று மக்களால் வணங்கப்பட்டு வருவதுமாகிய நரசிம்மர் குடைவரை இங்கே குறிப்பிடத்தக்கதாகும். இந்த நரசிம்மர் குடைவரையானது யானைமலையில் உள்ள கல்லின்மேல் செதுக்கப்பட்ட திருமால் வடிவமாகும்.



முல்லைநில மக்களின் தெய்வமாகிய திருமாலின் வடிவத்தைச் சங்க காலத்திலேயே யானைமலையில் செதுக்கி வைத்து வழிபட்ட செய்தியை மேற்காணும் கலித்தொகைப் பாடல் கூறுவது வியப்பூட்டுவதாக உள்ளது. அச் செய்தியினைக் கூறும் பாடல் வரிகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

...... மாயோய் நின்னின் சிறந்தார்
நில உலகத்து இன்மை தெளி நீ வருதி
**மலையொடு மார்பு அமைந்த செல்வன் அடியை**
தலையினால் தொட்டு உற்றேன் சூள் .... கலி.108

தன்னை நம்பாத ஆயர்குலப் பெண்ணிடம் நம்பிக்கையை உண்டாக்கி அவளைத் தன்னுடன் அழைத்துச் செல்வதற்காக, திருமாலின் அடியினைத் தனது தலையால் தொட்டு ஆயன் மகன் சூள் உரைப்பதாக மேற்பாடல் வரிகள் கூறுகின்றன. இப்பாடலில் வரும் " மலையொடு மார்பு அமைந்த செல்வன் " என்பது " மலையுடன் தனது மார்பு / உடல் அமையப்பெற்ற செல்வன் " என்ற பொருளைத் தருவதாகும். அனைத்துச் செல்வங்களையும் உடையவன் / தருபவன் என்ற பொருளில் கடவுளரைச் செல்வன் என்ற பெயரால் பொதுவாகக் குறிப்பிடுவது சங்ககால வழக்கம் ஆகும். சான்றாக, சிவபெருமானை ஆலமர்செல்வன் என்று சங்க இலக்கியம் சுட்டுகிறது. மேற்காணும் பாடலில், ஆயன் தனது தலையினால் செல்வனின் திருவடிகளைத் தொட்டு வணங்கிச் சூள் உரைப்பதாகக் கூறுவதால் அச்செல்வன் வேறு யாருமல்ல திருமால் தான் என்பது உறுதியாகிறது.

முடிவுரை:

இதுவரை மேலே கண்ட பல சான்றுகளிலிருந்து சங்க காலத்திலேயே யானைமலை விரிவாகப் பேசப்பட்டுள்ளதை அறிந்து கொள்ளலாம். யானைமலையைச் சுற்றியுள்ள பகுதிகளில் பல கரந்தைப் போர்கள் நடந்திருக்கும் என்பதால் போரில் மரணம் அடைந்தோரின் உடல்கள் அப்பகுதியில் தான் புதைக்கப்பட்டு இருக்க வேண்டும். யானைமலையைச் சுற்றிலும் அகழ்வாய்வு செய்வதன் மூலம் புதைந்துபோன அந்த நடுகல் கிடைக்க வாய்ப்புள்ளது. அதுமட்டுமின்றி, சங்ககாலம் பற்றியும் தமிழரது தொன்மை பற்றியும் அறிந்துகொள்ளக் கூடிய வகையில் பல தொல்பொருள் எச்சங்களும் கிடைக்க வாய்ப்புள்ளது. எனவே தமிழக அரசு இதைக் கவனத்தில் கொண்டு இப் பணியை முன்னெடுக்க வேண்டும் என்ற வேண்டுகோளானது இக் கட்டுரையின் மூலம் தமிழக அரசுக்குப் பணிவுடன் முன்வைக்கப் படுகிறது.

தொடர்பு: திருத்தம் பொன். சரவணன் (vaendhan@gmail.com)
http://thiruththam.blogspot.com/

## 20. கருத்து நயத்திற்கு ஓர் காளமேகம்

*— முனைவர்.தேமொழி*

சங்ககாலம் முதல் பெரும்பாலான இலக்கியங்கள் அவை கூறும் கருத்தின் அடிப்படையில் திரட்டப்பட்டவையே. இத் திரட்டு நூல்கள் தொகை நூல்கள் என அழைக்கப்பட்டன. அவ்வாறே, கி.பி. 12 ஆம் நூற்றாண்டுக்குப் பின்னரும், பாடல்கள் தொகுக்கப்பட்ட 19 ஆம் நூற்றாண்டு காலம் வரையில் வாழ்ந்த புலவர்கள் பலரின் தனிப் பாடல்கள் பல 'தனிப்பாடல் திரட்டு' எனத் தொகுக்கப்பட்டன. இராமநாதபுரம் புரவலர் பொன்னுசாமித் தேவர் (1837-1870, இவர் பாண்டித்துரைத் தேவரின் தந்தை) முன்னெடுக்க, தில்லையம்பூர் சந்திரசேகரக் கவிராயர் தேடித் தொகுத்தவை தனிப்பாடல் திரட்டு நூலில் உள்ள பாடல்கள். இந்த நூலில் உள்ள ஆயிரத்திற்கும் மேற்பட்ட பாடல்களைத் திரட்டிக் கொடுத்தவர் திருக்காட்டுப்பள்ளி இராமசாமி முதலியார் என்பவராகவும் அச்சிட்டவர் பெரியதம்பி என்பவராகவும் அறியப்படுகிறார்கள். இதுவே முதல் தனிப்பாடல் திரட்டு நூலாகும். பின்னர் மேலும் சில தொகுப்புகளும் தொடர்ந்து பலரால் வெளியிடப்பட்டன. தனிப்பாடல் திரட்டுத் தொகுப்பு நூல்களின் உள்ள பாடல்களின் எண்ணிக்கை ஒவ்வொன்றிலும் வேறுபட்டே உள்ளன.

தனிப்பாடல்களை எழுதினாராகக் கம்பர் ஔவை முதற்கொண்டு 97 புலவர்களின் தனிப்பாடல்கள் காணக்கிடைத்தாலும், தனிப்பாடல் எனில் இலக்கியச் சுவைக்காகத் தனிச்சிறப்புடன் கூறப்படுபவர் காளமேகப்புலவரே என்றால் அது மிகையன்று. தனிப்பாடல் திரட்டு என்றாலே காளமேகப் புலவரால் பாடப்பெற்ற பாடல்களே பலருக்கும் நினைவு வரும் அளவிற்குச் சிறப்புப் பெற்றவர் காளமேகம். இவர் நாகைக்கருகே உள்ள திருமலைராயன் பட்டினம் பகுதியை ஆண்ட சிற்றரசன் திருமலைராயன் (பொது ஆண்டு 1455-1468) என்பவரின் காலத்தில் வாழ்ந்தவர் என அவர் பாடல் குறிப்பின் மூலம் தெரிய வருகிறது. திருமலைராயன் ஆட்சிக்காலத்தின் அடிப்படையில்

இவரும் 15 ஆம் நூற்றாண்டின் மத்தியில் வாழ்ந்தவர் என்றே கணிக்கப்படுகிறது.

காளமேகத்தின் தனிப்பாடல்கள் என நூலாகத் தொகுக்கும் அளவிற்கு அவரது தனிப்பாடல்களும் எண்ணிக்கையில் அதிக அளவில் கிடைத்துள்ளன. காளமேகப் புலவர் பாடிய பாடல்களின் எண்ணிக்கை ஒவ்வொரு தொகுப்பிலும் மாறுபடுவதுண்டு. முதன்முதலில் தொகுக்கப்பட்ட 'தனிப்பாடல் திரட்டு மூலம்' என்ற நூல் 158 பாடல்களைப் பட்டியலிட்டது. பின்னர் 187 பாடல்கள் வரை கா.சு.பிள்ளையின் பதிப்பு பட்டியலிடுகிறது. ஆனால் புலியூர்க் கேசிகன் உரையெழுதிய 'காளமேகப் புலவர்-தனிப்பாடல்கள்' என்று காளமேகத்தின் பாடல்களை மட்டுமே கொண்ட ஒரு பதிப்பு 220 பாடல்களைக் கொடுக்கிறது. சிலேடை என்னும் இரட்டுற மொழிதல் மட்டுமன்று வசைபாடுவதிலும் (அங்கதப் பாடல்கள்) காளமேகம் வல்லவர். வசைபாட ஒரு காளமேகம் என்ற பெயரே பெற்றவர். இகழ்ச்சி ஏளனம் எள்ளல் எல்லாம் அவர் பாடல்களில் துள்ளி விளையாடும். புலமைச்செருக்கோடு அறம் பாடுதலையும் (சாபம் விடுதல்) செய்துள்ளார்.

இவர் பாடல்கள் வேத சமயத்தின் தொன்மக் கதைகளின் களஞ்சியமாகக் காணப்படுபவை. வேத சமயத்தின் சூழலில் வாழ்ந்தவர் மட்டுமே புரிந்து கொள்ளக்கூடிய பாடல் கருத்துகள் அவை. தொன்மக் கதைகள் அறியாத மற்றவருக்குப் பாடல் வரிகள் சொல்லும் கதைகள் விளக்கப்பட வேண்டும். காளமேகம் தனது கற்பனைத்திறனை, மொழி ஆளுமையைக் காட்டும் வகையில், அதனால் அனைவரும் வியந்து மெச்சும் வகையில் பாடல்களை இயற்றியவர். தொன்மக் கதைகள் கொண்ட பாடல்களால் தனிமனித உயர்விற்கு, அன்றாட வாழ்வியலுக்கு என்ன பயன் என்று ஆய்வதில் பொருளில்லை. அதாவது, ஏன் ஆடுகின்றீர் ஐயா? (ஆடும் தியாகரே ஆட்டம் ஏன் தான் உமக்கு); ஏன் நஞ்சு தின்றீர் ஐயா? (உமையாள் அஞ்சல் அஞ்சலென்று தினம் அண்டையிலே தானிருக்க நஞ்சுதனை ஏன் அருந்தினார்?) என்றெல்லாம் 'ஏன் பள்ளி கொண்டீர் ஐயா?' என்பது போன்ற பாணியில் வியந்து தனது மொழிப் புலமையைக் காட்டும் வண்ணம்

பாடிக்கொண்டிருப்பதால், அடிப்படையில் யாருக்கு என்ன பலன் என்று ஆராய்வோருக்கு ஏமாற்றமே மிஞ்சும். ஒரு ஒன்றரையடி குறள் வாழ்க்கைக்குக் காட்டும் வழிகாட்டுதலைக் காளமேகத்தின் பாடலில் காண இயலாது என்பதுதான் உண்மை. காளமேகத்தின் புகழ் பெற்ற பாடல்களும் அதற்காக நினைவு கூரப்படுபவையும் அல்ல. அப்பாடல்களில் காணப்பெறும் சொல்லாடல் சிறப்பும் கற்பனை நயம் மட்டுமே இலக்கியவாதிகளைக் கவர்ந்தன என்பதையும் நாம் அறிவோம்.

மேலும், அவர் தனது மொழியாற்றலைக் காட்டும் நோக்கில் இறைவனை நையாண்டி செய்யும் கருத்தில் வஞ்சப்புகழ்ச்சியாக எழுதிய பாடல்கள் என்ற காரணத்தால் அப்பாடல்களில் பல இறையடியார்கள் தமது கடவுள் வழிபாட்டிற்குத் தேர்வு செய்யும் பாடல்களாகவும் இல்லாமல் போயின.

எடுத்துக்காட்டாக திருப்பிரமபுரம் இறைவனார் மேல் சம்பந்தர் பாடிய பலரும் அறிந்த பாடலான,

தோடு உடைய செவியன் விடை ஏறி ஓர் தூவெண் மதி சூடி
காடு உடைய சுடலைப் பொடி பூசி என் உள்ளங் கவர் கள்வன்
ஏடு உடைய மலரான் முனை நாள் பணிந்து ஏத்த அருள் செய்த
பீடு உடைய பிரமபுரம் மேவிய பெம்மான் இவன் அன்றே

என்ற பாடலில் சிவன் குறித்த தொன்மக்கதைக் குறிப்புகளைக் குறிப்பிட்ட பின்னர் பெம்மான் இவனன்றோ என்று புகழ்கிறார் சம்பந்தர்.

இதன் பொருள்; உமைக்குரிய இடது காதில் தோடு அணிந்து, காளையின் மேல் ஏறி, வெண்மையான மதியை முடியில் சூடிக்கொண்டு, சுடுகாட்டுச் சாம்பலை உடலில் பூசியவனாகிய சிவபெருமான் என் உள்ளத்தைக் கவர்ந்த கள்வன். தாமரை மலரின் மேல் இருக்கும் பிரமனும் முன்னர் அவனைப் பணிந்து வழிபட்ட பொழுது அவனுக்கு அருள்

செய்தவன். சிறந்த சீர்காழி என்ற ஊரில் இருப்பவன் இத்தகைய சிறப்புப் பெற்றவன் சிவபெருமானே.

இறைவனைப் போற்றும் இப்பாடலைச் சீர்காழிக்குச் செல்லும் அடியவர்களும் சிவ வழிபாட்டிற்குரிய பாடலாக ஏற்று, தாமும் பாடி இறைவனை வழிபட இயலும்.

மாறாக, 'புள்ளிருக்கும் வேளூர்' எனப் புகழ்பெற்று விளங்குகிற வைத்தீசுவரன் கோயிலுக்குச் செல்லும் அடியவர் ஒருவர் கீழ்க்காணும் காளமேகத்தின் பாடலை எங்ஙனம் வழிபாட்டிற்குரிய பாடலாகத் தெரிவு செய்து பாடி இறைவனைப் பரவிட முடியும்?

வாதக்கா லந்தமக்கு மைத்துனர்க்கு நீரிழிவாம்
பேதப் பெருவயிறாம் பிள்ளைதனைக் - கோதக்கேள்
வந்தவினை தீர்க்க வகையறியார் வேளூரர்
எந்தவினை தீர்ப்பார் இவர்?

என்ற பாடலில் வைத்தீசுவரன் கோயிலிலுள்ள சிவனால் தனது குடும்பத்தார் நோயையே தீர்க்க முடியவில்லை, இவரால் மற்றவர் துன்பத்தை எவ்வாறு தீர்க்க இயலும் என்று வஞ்சப்புகழ்ச்சி செய்கிறார் காளமேகம்.

இதன் பொருள்; புள்ளிருக்கும் வேளூர் சிவனுக்கே காலே வாதத்தால் பாதிக்கப்பட்ட கால் (காலைத் தூக்கி நடனமாடும் நிலையை வாதக் கால் என்கிறார்). அவர் மைத்துனரான திருமாலுக்கோ நீரிழிவு நோய் (கடல் நீரில் துயில்வதால் மாலவனை அவ்வாறு கூறுகிறார்). அவர் பிள்ளை பிள்ளையாருக்கோ பருத்த வயிறு (மகோதரம் என்னும் பெருவயிறு உள்ள நோயாளி போலத் தோற்றமளிக்கிறாராம் பிள்ளையார்). இவ்வாறு, தன்னுடைய நோயையும், தனது குடும்பத்தார் நோயையுமே தீர்க்க இயலாத சிவன் எங்கே பிறர் துயரைக் களையப்போகிறார்?

இவ்வாறு நிந்திப்பது போல உள்ள வஞ்சப்புகழ்ச்சிப் பாடலை எந்த அடியவரால் வழிபாட்டிற்குரிய பாடலாக வைத்தீசுவரன் கோவிலில் போய் பாட இயலும்?

இவ்வாறே இவர் பிறவாயாக்கைப் பெரியோனான சிவபெருமானை, தாய் தந்தை யற்றதால் துன்பப் படும் இரங்கத் தக்க நிலையில் உள்ளான் என்று பாடல் எழுதியுள்ளார். காளமேகத்தின் இரு பாடல்கள் இத்தகையக் கருத்துகள் கொண்டு அமைந்துள்ளன.

வில்லாலடிக்கச் செருப்பாலுதைக்க வெகுண்டொருவன்
கல்லால் எறியப் பிரம்பால் அடிக்க இக் காசினியில்
அல்லார் பொழில் தில்லை அம்பலவாணர்க்கு ஓர் அன்னை பிதா
இல்லாத தாழ்வல்லவோ இங்ஙனே எளிதானதுவே!

இதன் பொருள்; சோலைகள் கொண்ட தில்லை அம்பலத்தில் ஆடும் ஆடவல்லானே! இந்த உலகில் உனக்கு ஆதரவு தந்து அரவணைக்கும் தாய் தந்தையற்றவனாய் இரங்கத்தக்க நிலையில் நீ இருந்ததால் அன்றோ (அதாவது, பிறப்பிலியாகிய சிவன்), ஒருவன் உன்னை வில்லால் அடிக்கவும் (வேடனாகி வந்தகாலத்தில் சிவனை அர்ச்சுனன் வில்லால் தாக்கியது); மற்றொருவன் செருப்பால் உதைக்கவும் (ஒரு கண்ணைச் சிவனுக்குத் தோண்டி பொருத்திய கண்ணப்பன், சிவனின் மறு கண்ணிலும் குருதி வழிவது கண்டு அதிர்ந்து தனது செருப்புக்காலை அடையாளத்திற்காகச் சிவன் மீது வைத்து கண்ணை எடுக்க முற்பட்ட நிலை); மற்றொருவன் கல்லெறிந்து தாக்கவும் (சாக்கிய நாயனார் கல்லையே மலராகக் கருதி சிவன் மீது எறிந்து வழிபட்டது); மற்றும் ஒருவன் சினந்து உன்னைப் பிரம்பால் அடிக்கத் துணிந்ததும் (பிட்டுக்கு மண்சுமந்த காலத்தே பாண்டியன் சிவனைப் பிரம்பால் அடித்த நிகழ்வு) நடந்தது. உனக்குப் பெற்றோர் இருந்திருந்தால் இந்த நிலை வந்திருக்குமா?

இப்பாடல் சிறிய மாறுதலுடன் பட்டினத்தார் பாடல் எனவும் கொடுக்கப்படுகிறது (https://www.projectmadurai.org/pm_etexts/utf8/pmuni0083.html)

வில்லால் அடிக்கச் செருப்பாலுதைக்க வெகுண்டொருவன்
கல்லால் எறியப் பிரம்பால் அடிக்கக் களிவண்டுகூர்ந்து
அல்லார் பொழில்தில்லை அம்பலவாணர்க்குஓர் அன்னைபிதா
இல்லாததால் அல்லவோ, இறைவா கச்சிஏகம்பனே. (42 - திருவேகம்பமாலை)

- பட்டினத்தார்

இப்பாடல் கருத்தையே சென்ற நூற்றாண்டில் பொன்னையாப்பிள்ளை அவர்கள் 'தந்தை தாய் இருந்தால் உலகத்தில் உமக்கிந்த தாழ்வெல்லாம் வருமோ அய்யா' என்ற பாடலாக எழுதினார். பலரும் விரும்பும் புகழ் பெற்ற பாடலாகவும் அது அமைந்தது. அப்பாடலின் வரிகள் கீழே:

தந்தை தாய் இருந்தால் உலகத்தில் உமக்கிந்த
தாழ்வெல்லாம் வருமோ அய்யா - பெற்ற
தந்தை தாய் இருந்தால் உலகத்தில் உமக்கிந்த
தாழ்வெல்லாம் வருமோ அய்யா
அந்தமில் நடம் செய்யும் அம்பல வாணரே
அருமை உடனே பெற்று பெருமையுடன் வளர்த்த
தந்தை தாய் இருந்தால் உலகத்தில் உமக்கிந்த
தாழ்வெல்லாம் வருமோ அய்யா

கல்லால் ஒருவன் அடிக்க உடல் சிலிர்க்க
காலில் செருப்பால் ஒரு வேடன் வந்தே உதைக்க
வில்லால் ஒருவன் அடிக்க காண்டீபம்
என்னும் வில்லால் ஒருவன் அடிக்க
கூசாமல் ஒருவன் கை கோடாலியால் வெட்ட
கூட்டத்தில் ஒருவன் பித்தா பேயா என திட்ட
வீசி மதுரை மாறன் பிரம்பால் அடிக்க
அந்த வேளை யாரை நினைந்தீரோ .... அய்யா .....
பெற்ற தந்தை தாய் இருந்தால் உலகத்தில் உமக்கிந்த
தாழ்வெல்லாம் வருமோ அய்யா

[பாடல்: தந்தை தாய் இருந்தால் ; இயற்றியவர்: பொன்னையாப்பிள்ளை; பாடியவர்: என். சி. வசந்தகோகிலம்; இராகம்: சண்முகப்ரியா; காணொளி: https://youtu.be/Y7mIOTG1WYE]

சற்றொப்ப இதே பொருள் தரும் வகையில் காளமேகத்தின் மற்றொரு பாடலும் உண்டு. அதில் சிவனைத் தாய் தந்தையற்றவன் எனக் கூறுவதற்குப் பதிலாக ஏழ்மை நிலையில் (அடியார்க்கு எளியவனாக இருப்பதை அவ்வாறு சுட்டுகிறார் புலவர்) உள்ளவனாக இருந்தால் உன்னை எல்லோரும் ஏய்க்க மாட்டார்களா என்று பாடுகிறார் காளமேகம். ஆனால் அதே செருப்பால் உதைப்பது, வில்லால் அடிப்பது போன்ற கருத்துக்கள் இப்பாடலிலும் இடம் பெறுகின்றன.

தாண்டி ஒருத்தி தலையின்மேல் ஏறாளோ
பூண்டசெருப் பாலொருவன் போடானோ- மீண்டொருவன்
வையானோ வின்முறிய மாட்டானோ தென்புலியூர்
ஐயாநீ யேழையானால்

இதன் பொருள்; தென்புலியூர் என அழைக்கப்படும் தில்லையில் ஆடும் பெருமானே! நீ ஏழையானால் அந்த எளிய நிலையை வாய்ப்பாகக் கொண்டு, குதித்து வந்து ஒருத்தி உன் தலைமீதும் ஏறிக்கொள்ள மாட்டாளா? (கங்கை சிவனின் தலையில் இருப்பதைக் குறிக்கிறார்). தன் காலிலே அணிந்துள்ள செருப்பினால் ஒருவன் உன்னை உதைக்கவும் மாட்டானோ? (கண்ணப்பன் செருப்புக்காலை சிவனின் மேல் வைத்தார்). மற்றுமொருவன் உன்னை வசை பாட மாட்டானா? வில் முறியும்படி அடித்துத் துன்புறுத்தவும் மாட்டானா? (பார்த்தன் சிவனை வில்லால் அடித்தது).

வஞ்சப்புகழ்ச்சியில் காளமேகம் வல்லவர் என்பதை இப்பாடல்கள் காட்டுகின்றன. அவர் கற்பனைத்திறனும் உண்மையில் வியக்க வைப்பதுவே.

காளமேகத்தின் தனிப்பாடல்கள் மூலம் அக்கால சைவ வைணவ சமயப் போர் குறித்த நிலையை நாம் அறிய இயலும். அதேபோன்று சாதி குறித்த செய்திகளும் அவர் பாடல்களில் இடம் பெற்றுள்ளன. ஆகவே, பெரும்பான்மையும் தொன்மக் கதைகளையும் கடவுளரையும் பற்றியே பாடிச்சென்ற காளமேகத்தின் பாடல்களின் வழியாகக் கூட 15 ஆம் நூற்றாண்டு தமிழ்மக்களையும் அவர்களது வாழ்வியலையும் நாம் ஓரளவு புரிந்து கொள்ளலாம்.


உதவிய நூல்:

காளமேகப் புலவர்-தனிப்பாடல்கள், புலியூர்க் கேசிகன்

https://ta.wikisource.org/s/1khz



நன்றி: "சிறகு" மின்னிதழ்



தொடர்பு: தேமொழி (jsthemozhi@gmail.com)

## 21. இளங்கோவடிகள் பாடிய தமிழர் பக்தி

*— முனைவர்.ச.கண்மணி கணேசன்*

முன்னுரை:

ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்றான சிலப்பதிகாரத்தை எழுதியவர் இளங்கோவடிகள் ஆவார். இவரது காலத்தில் தமிழகத்தில் நிலவிய பக்திநெறி காப்பியம் முழுவதிலும் பரந்து காணக் கிடைக்கிறது. இளங்கோவடிகள் சித்தரிக்கும் தமிழரின் பக்தி அக்காலச் சமுதாயநிலையைத் தெளிவாக்குகிறது. சிலப்பதிகாரம் இக்கட்டுரையின் ஆய்வெல்லை ஆகிறது. முதல்நிலைத் தரவுகள் சிலப்பதிகாரத்திலிருந்தும், இரண்டாம் நிலைத் தரவுகள் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, மணிமேகலை முதலிய இலக்கியங்களிலிருந்தும் எடுத்தாளப் பட்டுள்ளன.தொகுத்தும் வகுத்தும் விளக்கும் மரபு வழிப்பட்ட பகுப்பாய்வுமுறை பின்பற்றப்பட்டுள்ளது.

தமிழர் பக்தியில் கடவுளர் வழிபாடு:

தமிழக மக்கள் சிவன், முருகன், பலராமன், திருமால், இந்திரன், கொற்றவை, காமதேவன், நிலா, சூரியன், புறம்பணையான், நிக்கந்தன், இயக்கி, பாசண்டச் சாத்தன் முதலிய கடவுளரை வழிபட்டனர்.

புகார் நகரத்தில் சிவபெருமான், முருகன், பலராமன், திருமால், இந்திரன், காமன், நிலா, சூரியன், புறம்பணையான் (ஐயனார்), நிக்கந்தன், பாசண்டச்சாத்தன் ஆகிய கடவுளர்க்கு வழிபாடுகள் நிகழ்ந்தன.

மதுரை நகரத்தில் காலை முரசம் சிவன், திருமால், முருகன், பலதேவன் முதலிய கடவுளரை வழிபடும் இடங்களில் முழங்கின. (ஊர்.- அடி.- 7-14) கொற்றவைக்கும் வழிபாடு நிகழ்ந்தது. கண்ணகி மதுரை நகரத்தை விட்டு வெளியேறு முன் கொற்றவை வாயிலில் தன் பொற்றொடியைத் தகர்த்துச் சென்றாள். (கட்டு.- அடி.- 181-183) நகருக்குள் பிற தேவர்களும்

வழிபடப்பட்டனர். கோவலன் தன் மனைவியின் சிலம்பைப் பொற்கொல்லனிடம் கொடுத்தனுப்பிய பின்னர் ஒரு தேவகோட்டச் சிறையகத்தில் காத்திருந்தான். (கொலைக்களக் காதை- அடி.- 105-126)

வஞ்சி மாநகரத்தில் சிவனுக்கும் திருமாலுக்கும் கோயில்கள் இருந்தன. செங்குட்டுவன் போருக்குக் கிளம்பும் முன்னர் சிவன் கோயிலில் வழிபட்டுப் பின்னர் திருமால் கோயிலிலிருந்து வந்த மாலையைப் பெற்றுக் கொண்டான். (கால்.- அடி.-61-63)

சங்க இலக்கியங்களில் மழுவாள் நெடியோன், முருகன், கொற்றவை, திருமால், பலதேவன், காமன் முதலிய வழிபாடுகள் சுட்டப்படுகின்றன. (மதுரைக்காஞ்சி- அடி- 455, பட்டினப்பாலை- அடி.- 35-36&154-155, பரிபாடல் திரட்டு- பா- 1& புறநானூறு- 58) மணிமேகலையிலும் சிவன், முருகன் வழிபாடுகள் இடம் பெற்றுள்ளன. (விழா.- அடி.- 54-55, மலர்வனம் புக்ககாதை- அடி.- 144-145)

தமிழர் பக்தியில் பூதவழிபாடு:

நகரங்களின் சதுக்கங்களில் பூதவழிபாடு இருந்தது. புகாரில் நான்குவழித் தடங்கள் சந்திக்கும் இடத்தில் சதுக்கபூதம் இருந்தமை பற்றிக் காண்கிறோம். (இந்திர.- அடி.- 63-67, கடலா.- அடி.- 7-13)

"காவல் பூதத்துக் கடைகெழு பீடிகை" என்பதால் இது காவல் தெய்வம் என்பது வெளிப்படை. இப்பூதம் இந்திரனது ஏவலின்படி சோழனுக்குத் துணை செய்து பொய்ச்சாட்சி கூறியவர்களைத் தன் பாசக்கயிற்றால் பிணைத்துப் புடைத்து உண்ணும். பட்டினப் பாலையும் (அடி- 57), மணிமேகலையும் இதே (விழா.- அடி.- 19-20) பூதத்தைச் சுட்டுகின்றன.

மதுரை மாநகரத்தில் நான்கு வருணங்கட்குரிய பூதங்கள் இருந்தன. கண்ணகி மதுரை மாநகரத்தை எரியூட்டிய போது அரசபூதம், அந்தண பூதம், வணிக பூதம், வேளாள பூதம் என்ற நான்கும் அந்நகரை விட்டு நீங்கின

என்கிறார் இளங்கோவடிகள். இப்பூதங்களை அந்தந்த வருணத்தைச் சேர்ந்த மக்கள் வழிபட்டனர். (அழற்படு காதை)

தமிழர் பக்தியில் காவல் தெய்வ வழிபாடு:

பெருநகரங்களில் மக்கள் அந்நகரின் காவல் தெய்வத்தை வழிபட்டனர். மதுரை நகரின் காவல் தெய்வம் மதுராபதி ஆகும். மதுரை நகரம் எரிந்த போது மதுராபதித் தெய்வம் அந்நகரின் அவலநிலை குறித்துக் கண்ணகியிடம் பேசுகிறது(கட்டு.). மதுரை நகரின் காவல் தெய்வம் மதுராபதி என்று மணிமேகலையும் பேசுகிறது. (வஞ்சிமா நகர்புக்க காதை) சம்புத்தீவு என்று அழைக்கப்பட்ட பண்டைத் தமிழகத்தின் காவல் தெய்வம் சம்பாபதி என்றும் மணிமேகலையிலிருந்து அறிகிறோம். (பதிகம்- அடி.- 2-32)

தமிழர் பக்தியில் இயக்கி எனும் பெண்தெய்வம்:

மனிதசக்திக்கு மேம்பட்ட இயற்கையிறந்த தன்மை படைத்த பெண் என்னும் பொருளிலேயே இயக்கி என்னும் பெண் தெய்வ வழிபாடு இருந்தது. மாதரி பூங்கண் இயக்கிக்குப் பாற்சோறு படைத்து மீண்டு வரும்பொழுது கவுந்தியை அடிபணிந்து வணங்கினாள். (அடைக்கலக் காதை) அழகு மிகுந்த பெண் உருவில் தோன்றிப் போவோர் வருவோரைத் தடை செய்யும் தெய்வம் பற்றி அழகர் மலை வருணனையில் மாங்காட்டு மறையோன் கூறுகிறான். (காடுகாண் காதை) கண்ணகியோடும் கவுந்தியோடும் புகார் நகரிலிருந்து மதுரை நோக்கி வரும் கோவலன் நீர்நிலை ஒன்றின் அருகில் மயக்கும் தெய்வம் ஒன்று தோன்ற அதை மந்திரத்தால் உணர்ந்து நீக்குகிறான்(புறஞ்.). இன்றும் பேச்சு வழக்கில் எசக்கி என்று ஒரு பெண்தெய்வத்தைச் சுட்டுவதுண்டு.

தமிழர் பக்தியில் வழிபாட்டுச் சின்னங்கள்:

கடவுளரின் படைகளும், ஊர்திகளும்,இருப்பிடமும், வழிபாட்டுச் சின்னங்களாக வழக்கிலிருந்தன.

இந்திரனின் படைக்கலமாகிய வச்சிரமும், ஊர்தியாகிய ஐராவதமும், முருகனின் படைக்கலமாகிய வேலும் வழிபடப் பெற்றன. (இந்திர.- அடி.- 141-146, கனாத்.- அடி.- 9-12) கற்பகத்தரு, தேவலோகம், சக்கரவாளம் ஆகியன முறையே தருக்கோட்டத்திலும், ஊர்க் கோட்டத்திலும் , சுடுகாட்டுக் கோட்டத்திலும் வழிபாட்டுச் சின்னங்களாக இருந்தன. (கனாத்.- அடி.- 19-21) சக்கரவாளம் என்பது இப்பூவுலகில் உள்ள மலைகள், தீவுகள், உயிரினங்கள் முதலியவற்றின் தொகுதியாகும். (மணி.- சக்கர.- அடி.- 201-202& மணிமேகலா.- அடி.-109-115)

தமிழர் பக்தியில் வழிபாட்டிற்குரிய மன்றங்கள்:

இயற்கையிறந்த தன்மையுடன் அற்புதங்கள் நிகழ்த்தக்கூடிய மன்றங்கள் புகார் நகரத்திலிருந்தன. (இந்திர.- அடி. - 111-140) பொதிகள் நிறைந்த பண்டகசாலை வாயிலில் காவல் காப்பவரோ, கருந்தாழோ இல்லை. ஆனால் களவு செய்யும் வம்பமாக்களை அவர்களது கழுத்துக் கடுக்க பொதியைச் சுமக்க வைத்து; எங்கும் இறக்கி வைக்க விடாதபடி ஊரைச் சுற்ற வைக்கும் அற்புதசக்தி படைத்த வெள்ளிடை மன்றம் இருந்தது. (கடலா.- அடி.- 14-17) அதர்மம் நடந்தால் கண்ணீர் விட்டு அழுது அடையாளம் காட்டும் பாவை எழுந்தருளிய பாவை மன்றமும் புகார் நகரிலிருந்தது.

தமிழர் பக்தியில் வழிபாட்டு முறைகள்:-

உருவ வழிபாடு:

பண்டைத் தமிழகத்தில் உருவ வழிபாடு இருந்தது. மாங்காட்டு மறையோன் திருமாலின் கிடந்த கோலத்தையும், இருந்த கோலத்தையும், நின்ற கோலத்தையும் பற்றி விளக்கமாகக் கூறுகிறான். (காடு.) கண்ணகிக்குக் கோயில் எடுப்பதற்காகச் செங்குட்டுவன் இமயமலையிலிருந்து கல்லெடுத்துக் கங்கையில் நீர்ப்படை செய்து செங்கோட்டுயர்வரையில் அவளுருவத்தை எழுந்தருளச் செய்தான். (வஞ்சிக்காண்டம்) திருச்சீரலைவாயிலில் எழுந்தருளிய சண்முகப் பெருமான் தோற்றத்தை நீளமாகத் திருமுருகாற்றுப்படை வருணிக்கிறது. (அடி.- 77-124).

உருவமிலா வழிபாடு:

நெடுங்கல் மன்றம் ஒன்று புகார் நகரிலிருந்தது. அங்கு நின்ற கல்லே வழிபாட்டிற்கு உரியது. (இந்திர.- அடி.- 11-140)

கோயிலும் தீமுறை வழிபாடும்:

வேதநெறிப்படி தீமுறை வழிபாடு நிகழ்ந்த கோயில்கள் தமிழகத்திலிருந்தன. இந்திரவிழா தொடங்கியபோது பிறவாயாக்கைப் பெரியோன் கோயிலிலும், அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலிலும், வால்வளை மேனி வாலியோன் கோயிலிலும், நீலமேனி நெடியோன் கோயிலிலும், மாலை வெண்குடை மன்னவன் கோயிலிலும் நான்மறை மரபின் தீமுறை நிகழ்ந்தன. (இந்திர.- அடி.- 141-175) மதுரையில் காலைமுரசம் நுதல்விழி நாட்டத்து இறையோன் கோயிலில் முழங்கியது (மேலது)

திருச்சீரலைவாயிலிலும், திருவாவினன்குடியிலும், திருவேரகத்திலும் முருகனுக்கு வேதநெறிப்படி வழிபாடு நிகழ்ந்தமையைத் திருமுருகாற்றுப்படை வரிசைப்படுத்திக் காட்டுகிறது. (அடி.- 77-189)

கோட்ட வழிபாடு:

வேதமரபினின்று மாறுபட்ட கோட்டவழிபாடும் தமிழகத்திலிருந்தது. மலைநாட்டு மக்கள் கண்ணகியைத் தெய்வமாக ஏற்று வணங்கிய போது தொண்டகம் தொட்டனர்; சிறுபறை முழக்கினர்; கோடு வாய் வைத்தனர்; கொடுமணி இயக்கினர்; குறிஞ்சி பாடினர்; நறும்புகை எடுத்தனர்; பூப்பலி செய்தனர்; காப்புக்கடை நிறுத்தினர்; விரவு மலர் தூவிப் பரவினர். (குன்றக்குரவை- அடி.- 11-22).

மாலதி பால்விக்கிச் சோர்ந்த பாலகனின் உடலோடு பல்வேறு கோட்டங்களுக்கும் சென்று உயிரை மீட்டுத்தரும்படி தெய்வங்களை வேண்டினாள். (கனாத்.- அடி.- 5-15) இறந்த குழந்தையின் உடலோடு கூடச் செல்லக்கூடியனவாகக் கோட்டங்கள் இருந்தன எனத் தெரிகிறது.

மதுரையில் காலை முரசம்,

“கோழிச்சேவல் கொடியோன் கோட்ட”த்திலும் (மேலது) முழங்கியது

விலக்கான பெண்கள் கூடக் கோட்டங்களில் ஒரு புறத்தில் தங்கி இருந்தனர் என்று புறநானூறு குறிப்பிடுகிறது(பா- 299). கலம் தொடா மகளிர் முருகன் கோட்டத்தில் ஒதுங்கி இருந்த காட்சி உவமையாக உள்ளது.

கோட்டங்கள் ஊரின் உள்ளும் இருந்தன. பெருநகரக் கோட்டைகளின் கிழக்கிலும் இருந்தன. பெருவழிகளின் இடையிலிருந்த சிற்றூர்களிலும் இருந்தன. ஈமப்புறங் காட்டிலும் இருந்தன. சக்கரவாளக் கோட்டம் சுடுகாட்டில் இருந்தமையை முன்னர்க் கண்டோம்.(வழிபாட்டுச் சின்னங்கள்) வஞ்சிமாநகர்க் கோட்டையின் கிழக்கில் குணவாயிற் கோட்டம் இருந்தது என்றும்; அங்கே இளங்கோவடிகள் தங்கியிருந்ததாகவும் சிலப்பதிகாரப் பதிகம் (அடி.- 1-2) கூறுகிறது. உறையூரிலிருந்து மதுரை செல்லும் பெருவழியில் சிறுகுடி என்னும் சிற்றூரில் ஐயை கோட்டம் இருந்தது.(வேட்டுவ வரி- அடி- 4)

முச்சந்தி, நாற்சந்தி, ஐஞ்சந்தி, ஆற்றங்கரை, குளத்தங்கரை, மலைச்சிறுகுடி முதலிய இடங்களில் எல்லாம் முருகனுக்கு வழிபாடு நிகழ்ந்ததாகத் திருமுருகாற்றுப்படை குறிப்பிடுகிறது. (அடி.- 189-226)

கோட்டம் கோயிலாவதும்; மீண்டும் கோட்டமாவதும்:

கோட்டங்களில் வேதநெறி அவ்வப்போது பின்பற்றப்படுவதுண்டு. அப்போது அவை கோயில் என்று குறிக்கப்பட்டன. மலைமக்களுடைய மங்கலமடந்தை கோட்டத்தில் செங்குட்டுவன் கண்ணகியைப் பிரதிஷ்டை செய்து கடவுள் மங்கலம் செய்தபோது; நூல்மரபின்படி வேள்விச்சாலை அமைத்தான். இவ்விடத்தில் இளங்கோவடிகள்,

"கோமகள் தன் கோயில்" என்கிறார். (வாழ்த்து.- உரைப்பாட்டு மடை) தேவந்தி கண்ணகித்தெய்வம் ஏறப்பெற்று பிறர்க்குத் தெரியாத உண்மைகளைக் கூறி அருளிய பின்னர் வேதமரபினின்று மாறி அவளை நித்தல் விழாவணி செய்ய ஏவியபோது அவ்விடத்தைப் பத்தினிக் கோட்டம் என்கிறார் இளங்கோவடிகள்.

நகர் வழிபாட்டுமுறை:

மக்களுக்காக மன்னன் கட்டிப் பராமரிக்கும் வழிபாட்டிடம் 'நகர்' என்று பெயர் பெற்றது.(மின்தமிழ்மேடை"சிலப்பதிகாரம் காட்டும் வழிபாட்டிடங்கள்"- காட்சி- 14- ஜூலை2018) மதுரையில் காலை முரசம் முழங்கிய இடங்களில்

"மேழி வலனுயர்த்தோன் வெள்ளை நகரமும்" (மேலது) ஒன்றாகும்.

திருப்பரங்குன்றத்து முருகனைப் பாடுங்கால் நகர் என்றே புலவோர் பலரும் சுட்டுகின்றனர்.(பரிபாடல்- பா- 8, 18, 19) மதுரையில் ஆதிசேஷனுக்குரிய நகர் இருந்தமை; பரிபாடல்திரட்டு- பா-1 மூலம் தெரிகிறது. மதுரை மட்டுமின்றி; காஞ்சி, மருங்கூர்ப்பட்டினம் முதலிய இடங்களிலும் நகர் இருந்ததெனச் சங்க இலக்கியம் சான்று பகர்கிறது. (பெரும்பாணாற்றுப்படை- அடி.- 404-405, கலித்தொகை- பா- 84,அகநானூறு- பா.- 22, 99, 136, 227)

முருகனுக்குரிய நகர்களில் வழிபாட்டின்போது ஆண்டலைக்கொடி ஏற்றினர்; நெய்யோடு ஐயவி அப்பினர்; கொழுமலர் சிதறினர்; தம் வாயினின்று ஒலி எழாதவாறு வழிபட்டனர்; தம்முள் மாறுபட்ட நிறத்தை உடைய இரண்டு உடையை உடுத்தினர்; சிவந்த நூலைக் கையில் காப்பாகக் காட்டினர்; வெண்பொரி சிதறினர்; கொழுவிய கிடாயினை வெட்டி அதன் குருதியோடு தூய வெள்ளரிசியைக் கலந்து பலியாக இட்டனர்; பல பிரப்பு இட்டனர்; பசுமஞ்சளோடு மணப்பொருட்களைத் தெளித்தனர்; செவ்வலரி மாலையையும், குளிர்ச்சி பொருந்திய பிற நறுமலர் மாலைகளையும் இணை

ஒக்க அறுத்துத் தொங்க விட்டனர்; மலைப்புறத்து ஊர்களையெல்லாம் வாழ்த்தினர்; நறும்புகை காட்டினர்; குறிஞ்சி பாடினர்; பல இசைக்கருவிகளையும் முழங்கினர் என்று நக்கீரர் நகரில் நிகழும் வழிபாட்டுமுறையைத் திருமுருகாற்றுப்படையில் (அடி.- 227-249) விளக்கி உள்ளார்.

நியமத்தில் வழிபாட்டு முறை:

அந்தணரும் அரசரும் அல்லாதாரால் பராமரிக்கப்படும் வழிபாட்டிடம் நியமம் என்று அழைக்கப்பட்டது.(மின்தமிழ்மேடை- மேலது) மதுரையில் காலைமுரசம்,

"உவணச் சேவல் உயர்த்தோன் நியம"த்தில் முழங்கியது என்கிறார் இளங்கோவடிகள்.(மேலது) அரங்கத்திலிருந்து காவிரி ஆற்றைக் கடந்த கவுந்தி முதலிய மூவரும், (நாடு.- அடி- 217)

"தீதுதீர் நியமத் தென்கரை எய்தி"யதாகவே இளங்கோவடிகள் பாடுகிறார். மதுரைக்காஞ்சி மதுரையில் இருபெரு நியமங்கள் இருந்தன என்கிறது. (அடி.- 365&366) கோசர் செல்லூரில் கட்டிய நியமம் பற்றி மதுரை மருதனிள நாகனார் பாடியுள்ளார்.(அகநானூறு- பா- 90) நியமத்தில் வேள்வித்தூண் நாட்டி வழிபாடு நிகழ்வதுண்டு.(அகநானூறு- பா- 220).

கல்வியும், அறமும், தவமும், வழிபாடும் ஒருங்கிணையும் பள்ளி:

சமணர் பள்ளி, பௌத்தப்பள்ளிகளில் கல்வியும், அறமும், தவமும், வழிபாடும் ஒருங்கு நிகழ்ந்தன. அந்தணர் பள்ளியில் கல்வியும் தீமுறை வழிபாடும் ஒருசேர நிகழ்ந்தன.

புகார் நகரில் சமணர் பள்ளியும், பௌத்தப் பள்ளியும் இருந்தன. கண்ணகி கோவலனுடன் மதுரைக்குப் புறப்படும் பொழுது சமணர்களின் சிலாத்தலத்தைத் தொழுது வலங்கொண்டு சென்றனர். (நாடு.- அடி.- 15-25) கவுந்தி மாதரிக்குக் கதை கூறத் தொடங்கும் போது புகாரிலிருந்த,

"உலக நோன்பிகள் ஒருங்குடன் இட்ட இலகொளிச் சிலாதலம்" பற்றிப் பேசுகிறாள். (அடைக்.- அடி.- 151-154) மணிமேகலை புகார்நகரத்துச் சமணர் பள்ளியை 'அராந்தாணம்' என்கிறது. (மணிமேகலா.- அடி.- 23)

கண்ணகியும் கோவலனும் இநதிரவிகாரம் ஏழுடன் போகித் தம் பயணத்தைத் தொடர்ந்தனர். (நாடு.-11-14) இந்திர விகாரம் ஏழு என்பது பௌத்தப் பள்ளியையே குறிக்கும்.

இந்திரவிழாவின் போது அறவோர் பள்ளியில் 'அறனோம்படை' நிகழ்ந்தது. (இந்திர.- அடி- 179) அறவோர் பள்ளி சமண பௌத்தப் பள்ளிக்குரிய பொதுப்பெயர் ஆகும். மணிமேகலை புகாரிலிருந்த பௌத்தப் பள்ளியை 'மாதவர் உறைவிடம்' என்கிறது. (ஊரலர் உரைத்த காதை.- அடி- 59)

மதுரையில் சமணர் பள்ளி, பௌத்தப் பள்ளி, அந்தணர் பள்ளி மூன்றும் இருந்தன. மதுரையில் காலை முரசம் சங்கொடு முழங்கிய இடங்களில்,

"அறத்துறை விளங்கிய அறவோர் பள்ளியும்" உண்டு (மேலது)

மதுரைக்காஞ்சி மதுரையிலிருந்த சமண பௌத்தப் பள்ளி பற்றி விரிவாகப் பேசுகிறது. பெண்கள் தம் மக்களோடு பூவும் புகையும் ஏந்திக் கொண்டு பௌத்தப் பள்ளிக்குச் சென்றனர். (அடி.- 461-467) குளிர்ச்சி பொருந்திய அருகக் கடவுளின் திருக்கோயிலில் செம்பால் செய்தாலொத்த சுவர்களில் ஓவியம் தீட்டப்பெற்று இருந்தது. உயர்ந்த மேடையும், நறிய பூஞ்சோலைகளும் உடையதாய் அமண்பள்ளி அத்துடன் சேர்ந்திருந்தது. பூவும் புகையும் ஏந்திச் சாவக நோன்பிகள் அருகனை வாழ்த்தி நின்றனர். முக்காலத்தையும் உணர்ந்து, அறிவு முதிர்ந்து, விரதங்களை மேற்கொண்டும், இளைக்காத மேனியை உடையவராய்க் கல்வி மிகுந்த சான்றோர்கள் அங்கிருந்தனர். (அடி.- 475-487)

கோவலனும் கண்ணகியும் மதுரையை நெருங்கிய போது நான்மறை அந்தணர் நவின்ற ஓதையும், மாதவர் ஓதி மலிந்த ஓதையும் கேட்டனர் (புறஞ்.- அடி.- 141-150) மாங்குடி மருதனாரும் மதுரையிலிருந்த அந்தணர் பள்ளியை ஆவணப்படுத்தி உள்ளார். வேதங்களைப் பொருள் புரிந்து ஓதி, அவை கூறும் ஒழுக்கங்களைச் சரிவர உணர்ந்து; எவ்வுயிரிடத்தும் செந்தண்மை பூண்டொழுகும் பெரியோர் அந்தணர் பள்ளியிலிருந்தனர். அது குன்றைக் குடைந்தாலொத்துக் காணப்பட்டது. (அடி.- 468-474)

தமிழர் பக்தியில் ஆடலும் பாடலும்:

ஆடல்பாடலோடு கூடிய வழிபாட்டு முறை தமிழகத்திலிருந்தது. பல்வேறு சமுதாய மக்களும் தத்தமக்குரிய பாணியில் ஆடிப்பாடினர். வேட்டுவர் கொற்றவையை வழிபட்ட போது வேட்டுவவரி பாடினர். ஆய்ச்சியர் திருமாலை வழிபட்ட போது ஆய்ச்சியர் குரவை பாடி ஆடினர். குறிஞ்சி மகளிர் குன்றக்குரவை பாடி ஆடி முருகனை வழிபட்டனர்.

தமிழர் பக்தியில் வெறியாடல்:

இறைப்பொருள் பற்றி முரண்பட்ட கருத்துடையோர் அஞ்சும் படியாக குறமகள் தன்மேல் முருகன் அருள் வந்து ஆடும் அகன்ற வழிபாட்டிடங்களை

"முருகாற்றுப்படுத்த உருகெழு வியன்நகர்" என்று நக்கீரர் திருமுருகாற்றுப்படையில் (அடி.- 227-249) விளக்கியுள்ளார்.

கோட்டங்களில் தெய்வமேறப் பெற்று ஆடி வருவதுரைத்தனர். ஐயை கோட்டத்தில் சாலினி என்னும் வேட்டுவர்குலப் பெண் அருளூற்று ஆடுவதை வேட்டுவவரி விரிவாகப் பேசுகிறது. முருகனை வழிபட்ட கோட்டங்களில் வேலன் வெறியாட்டு நிகழ்ந்தமை திருமுருகாற்றுப்படை மூலம் தெரியவருகிறது.(அடி.- 220-226)

தமிழர் பக்தியில் பெண்களும் தெய்வக்கோலமும்:

கன்னிப் பெண்களுக்குத் தெய்வக் கோலம் புனைந்து வழிபாடு நிகழ்த்தும் முறை தமிழ்ச் சமுதாயத்திலிருந்தது. கண்ணனாகவும்,பலராமனாகவும், நப்பின்னையாகவும் கன்னியரை அலங்கரிக்க; அவர்கள் யமுனைக்கரை கோபியர்களுடன் சேர்ந்து ஆடித் திருமாலைத் தொழுதனர். (ஆய்ச்சியர் குரவை) கொற்றவை வழிபாட்டின் போது வேட்டுவர்கள் தம் குலத்தைச் சேர்ந்த கன்னிப்பெண் ஒருத்திக்குச் சிவனை ஒரு பாகத்தில் கொண்ட உமையவளின் வடிவத்தைப் புனைந்து வழிபட்டனர் என வேட்டுவவரி விளக்குகிறது.

தமிழர் பக்தியில் புனித நீராடல்:

குமரி முனையிலும், கங்கையிலும், சில குளங்களிலும் புனித நீராடும் வழக்கம் தமிழகத்தில் பரவலாக இருந்தது. புனித நீராட்டு பாவத்தைப் போக்கும் என்ற நம்பிக்கை தமிழகத்தில் நிலவியது.

மாடலமறையோன் குமரிமுனை சென்று புனித நீராடி மீண்டபோது மதுரையில் தங்கினான். அங்கே கோவலன், கண்ணகி, மாதரி, கவுந்தி முதலியோரின் அவல முடிவு கண்டு புகார் நகரம் சென்றான். அவன் கூறிய செய்திகளைக் கேட்டுக் கண்ணகியின் தாயும், கோவலனின் தாயும் உயிரை விட்டனர். அதனால் ஏற்பட்ட பாவம் தீரக் கங்கைக்குப் புனிதநீராடச் சென்றான்.

புகார் நகரத்துக் காமவேள் கோட்டத்தின் முன்னர் இருந்த சோமகுண்டம், சூரிய குண்டம் ஆகிய துறைகளில் மூழ்கி எழுந்து காமனை வழிபட்டால் பிரிந்த கணவனை மீண்டும் பெறலாம் என்னும் நம்பிக்கை இருந்தது. தேவந்தி கண்ணகியை தாழைப்புதர் மிகுந்த நெய்தலங்கானல் பகுதிக்குச் சென்று அவ்வாறு நீராட அழைக்கிறாள். (கனாத். - அடி.- 57-60) பட்டினப் பாலையும் இவ்விரு ஏரிகளை,

"இருகாமத்து இணையேரி" (அடி. -39) என்கிறது. காமத்து எனும் அடைமொழி இவ்வேரிகள் காமன் கோட்டத்தின் முன்னர் இருந்தமையைத் தெளிவுறுத்துகின்றன.

தமிழர் பக்தியில் திருவிழாக்கள்:

திருவிழாக்கள் கோயில்களிலும், கோட்டங்களிலும் ஒருங்கு கொண்டாடப் பெற்றன. முதலில் விழாவை முரசறைந்து அறிவித்தனர்.விழாவிற்குரிய தூணை நாட்டிக் கொடியும் ஏற்றினர். கலை நிகழ்ச்சிகள் நடத்தினர்.

இந்திரவிழா தொடங்கியவுடன் வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசினைக் கச்சை யானைப் பிடர்த்தலை ஏற்றினர். விழாவை அறிவித்தனர். வால்வெண் களிற்றரசு என்ற ஐராவதக் கோட்டத்தில் விழாத்தூணை நாட்டினர். கற்பகத்தரு கோட்டத்தில் மங்கல நெடுங்கொடியை வானுற ஏற்றினர். பின்னரே சிவன், திருமால், முருகன், பலராமன், இந்திரன் கோயில்களில் வேதமரபின்படி வேள்வி செய்தனர். (இந்திர.- அடி.- 141-175) இறுதியில் கலை நிகழ்ச்சிகள் நடந்தன.

முடிவுரை:

இளங்கோவடிகள் காலத்தில் தமிழர் கோயில்கள், கோட்டங்கள், நகர்கள், நியமங்கள் அமைத்துப் பல்வேறு கடவுளரையும், வருணபூதங்களையும், காவல்பூதங்களையும், ஊர்க்காவல் தெய்வத்தையும், இயக்கியையும் வணங்கினர். கடவுளரின் படைகளும், ஊர்தியும், இருப்பிடங்களும், தொன்மப் பொருட்களும் வழிபாட்டுச் சின்னங்களாயின. உருவ வழிபாடும் உருவமற்ற கல் வழிபாடும் இருந்தன. கோயில்களில் வேதமரபின்படி வழிபாடு நிகழ்ந்தது. கோட்டங்களிலும், நியமங்களிலும் அவ்வப்போது வேதமுறை பின்பற்றப்பட்டது. ஆடிப்பாடியும், அருளேறி ஆடியும், புனித நீராடியும், திருவிழாக்கள் நிகழ்த்தியும், கன்னிப் பெண்களைத் தெய்வமாக அலங்கரித்தும் பக்தி செலுத்தினர். அந்தணர் பள்ளியில் கல்வியும், வழிபாடும் நிகழ்ந்தன. சமண பௌத்தப்பள்ளிகளில் அறம், தவம்,

கல்வி, வழிபாடு அனைத்தும் ஒருங்கிணைந்திருந்தன. திருவிழாக்களில் சாற்றுவதும், விழாத்தூணை நாட்டுவதும், கொடியேற்றுவதும், வழிபாடும் அடுத்தடுத்து நிகழ்ந்தன. இறுதியில் கலை நிகழ்ச்சிகள் நடந்தன.

சுருக்கக் குறியீட்டு விளக்கம்:

அடைக்.- அடைக்கலக் காதை

இந்திர.- இந்திரவிழவு ஊரெடுத்த காதை

ஊர்.- ஊர்காண் காதை

கட்டு.- கட்டுரை காதை

கடலா.- கடலாடு காதை

கனாத்.- கனாத்திறம் உரைத்த காதை

சக்கர.- சக்கரவாளக் கோட்டம் உரைத்த காதை

நாடு.- நாடுகாண் காதை

மணி.- மணிமேகலை

மணிமேகலா.- மணிமேகலா தெய்வம் வந்து தோன்றிய காதை

விழா.- விழாவறை காதை

துணைநூற் பட்டியல்:

சிலப்பதிகாரம்- பொ.வே.சோமசுந்தரனார்(உ.ஆ.)- கழக வெளியீடு- 372- முதற்பதிப்பின் மறுபதிப்பு- 1975

மணிமேகலை- ந.மு.வேங்கடசாமி நாட்டார்& ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.)- பாகனேரி த.வை.இ.தமிழ்ச்சங்க வெளியீடு- முதற்பதிப்பின் மறுபதிப்பு- 1964

சங்க இலக்கியத் தொகுப்பு- பாகம் 1&2- வையாபுரிப் பிள்ளை (தொ.ஆ.)- முதற்பதிப்பு- 1974

(குறிப்பு: ரிஷிகேசம் சுவாமி தயானந்த சரஸ்வதி ஆசிரமமும், திருப்பனந்தாள் காசித் திருமடமும், களம்பூர் கோவிந்தசாமி அடிகளார் அறக்கட்டளையும் இணைந்து 5-7மே 2005ல் நடத்திய 'தமிழ் உணர்த்தும் பக்தி' ஆய்வு மாநாட்டில் வாசித்தளித்த ஆய்வுக் கட்டுரை. தமிழ் உணர்த்தும் பக்தி ஆய்வு மாலை என்ற நூலின் 2ம் பகுதியில் பதிப்பிக்கப்பட்டது. 14ஆண்டுக்கால இடைவெளியின் கருத்தாக்கங்கள் சேர்த்து மேம்படுத்தப்பட்டது.)

தொடர்பு:
**முனைவர். ச.கண்மணி கணேசன்** (kanmanitamilskc@gmail.com)
முதல்வர் (ஓய்வு)
ஸ்ரீ காளீஸ்வரி கல்லூரி(தன்னாட்சி), சிவகாசி

## 22. ஆவணம் விழா – 2019

*— துரை.சுந்தரம்*

முன்னுரை:

தொல்லியல் கழகம் தோன்றி இருபத்தெட்டு ஆண்டுகள் நிறைவுற்ற நிலையில் அதன் இருபத்தொன்பதாம் ஆண்டின் கருத்தரங்கம், 2019, ஆகஸ்டு 3,4 தேதிகளில் கோவை பூ.சா.கோ. கலை அறிவியல் கல்லூரியில் நடைபெற்றது. இவ்விழாவில் அக்கழகம் ஆண்டுதோறும் வெளியிடும் "ஆவணம்" இதழ், முப்பதாவது இதழாக மலர்ந்தது. தமிழகத்தில் புதிதாகக் கண்டறியப்பட்ட தொல்லெச்சங்கள் மற்றும் முன்னர் பதிவு செய்யப்படாத கல்வெட்டுகள், ஓலை/செப்பேடுகள் ஆகியன இந்த இதழில் முறையான வடிவத்தில் பதிவு செய்யப்படுகின்றன. ஆய்வுக் கட்டுரைகளுக்கு இதில் இடமில்லை. உலகின் பல பகுதிகளிலும் கல்வி மற்றும் ஆய்வு சார்ந்த நிறுவனங்கள் இந்நூலை ஒரு பார்வை நூலாக ஏற்றுக்கொண்டுள்ளன. கழகத்தின் வாழ்நாள் உறுப்பினர் என்னும் முறையில் கடந்த எட்டு ஆண்டுகளாக ஆண்டுதோறும் இந்நிகழ்வில் கலந்துகொண்டுவருவதோடு, புதிய கல்வெட்டுகளைக் கண்டறிந்து இந்த ஆவணம் இதழில் பதிவு செய்துகொண்டும் வருகின்ற சூழலில், நான் "இருந்து வாழும்" கோவை நகரிலேயே விழா நடைபெறுகையில் அந்நிகழ்வில் நான் அறிந்துகொண்ட தொல்லியல், வரலாறு தொடர்பான செய்திகளை இங்கே பகிர்ந்து கொள்ளும் விழைவே இப்பதிவு.

(குறிப்பு : மேலே, நான் "இருந்து வாழும்" கோவை நகர் என்று குறிப்பிட்டுள்ளதைக் காண்க. கோவையில் "வசித்து வருகிறேன்" என்று சொல்வதற்கும், "இருந்து வாழும்" என்பதற்கும் ஓர் அழகிய வேறுபாடு உண்டு. கல்வெட்டுகளில், ஒருவர் பெயரைக் குறிப்பிடுகையில், அவர் இன்ன ஊரினர் என்னும் குறிப்பு தவறாமல் இடம் பெறுதல் வழக்கு. குளத்தூருடையான், நல்லூருடையான் என்று ஊர்ப்பெயரை முன்னொட்டாகச்

சொல்லிய பின்னரே அவருடைய இயற்பெயர் குறிக்கப்பெறும். இறைவரின் பெயரும் அவர் உறைகின்ற ஊர்ப்பெயரை இணைத்தே சுட்டப்பெறும். அவிநாசி ஆளுடையார், மன்னியூராண்டார் என வருவதை நோக்குக. நான் அண்மையில் கண்டறிந்த ஒரு கல்வெட்டு குட்டகம் என்னும் ஊரில் உள்ள ஒரு வட்டெழுத்துக் கல்வெட்டு. அதில், எறுளங்கோதை என்னும் அழகியதொரு பெயர் ஒரு பெண்மணிக்கு அமைந்ததும், அவள் குடவோடு என்னும் ஊரில் "இருந்து வாழும்" ஒருவரின் மனைக்கிழத்தி என்று குறிப்பிடப்படுவதும் மிகவும் கவர்ந்தவை. எனவே, "வசிக்கும்" என்பதன் அழகிய தமிழ் வடிவமான "இருந்து வாழும்" என்னும் சொல்லைப் பயன்படுத்தினேன்.)

முதல் நாள் நிகழ்வுகள்:

தலைமையுரை: செயலர் திரு. கண்ணையன் --

தமிழ்த்தாய் வாழ்த்துடன் நிகழ்வுகள் தொடங்கின. கழகத்தின் செயலரான முனைவர். சு. இராசவேலு அவர்கள் அனைவரையும் வரவேற்ற பின்னர், நிகழ்ச்சியின் களமான பூ.சா.கோ. கலைக்கல்லூரியின் செயலர் முனைவர். தி. கண்ணையன் (இவர் ஒரு பொறியாளர்) தம் தலைமை உரையில், பழமை மீட்டெடுக்கப்பட்டுப் போற்றப்படுகின்ற நிலை வந்துள்ளதைச் சுட்டிக்காட்டினார். உணவு முறையில் பழமை திரும்பியுள்ளது. மதிப்பு உணரப்பட்டுள்ளது. முற்காலத்து மனிதன் மணலில் எழுதிப்பார்த்திருக்கவேண்டும். அவன் எழுதிய முறை X,Y - GRAPHICAL WAY வடிவில் அமைந்திருக்கவேண்டும். கல்லூரி மாணாக்கர், உலா செல்கையில் மரங்களில் தம் பெயரைச் செதுக்கி வைத்துச் செல்கின்றனர். இதுவும் பழங்கால மனிதனின் வெளிப்பாட்டெச்சம் எனலாம். பண்டு, கல்வெட்டுகளைப் பொறித்துவைத்த சிற்பக் கலைஞர்கள் எத்துணை ஈடுபாட்டுடனும் எவ்வளவு நேரமெடுத்தும் எழுதியிருப்பர் என வியந்தெண்ணத் தோன்றுகிறது.

நோக்கவுரை: திரு. எ.சுப்பராயலு --

கழகம் தோற்றம் பெறச் செய்த முதல் நிலை அமைப்பாளரான முனைவர் திரு. எ. சுப்பராயலு அவர்கள் தம் நோக்கவுரையில் கழகத்தின்



தலைமையுரை-செயலர் திரு. கண்ணையன்






ஆவணம் இதழ் வெளியீடு

நோக்கம் பற்றிக் கூறினார். இருபத்தொன்பது ஆண்டுகள் இயங்கிவிட்ட இந்நிலையில் கழகத்தின் இயக்கத்தில் எங்கு தொய்வு ஏற்பட்டுவிடுமோ என்னும் ஐயம் எழுந்தது. காரணம் வயது முதிர்ந்தவர்களின் ஓய்வு. ஆனால், அவ்வாறில்லை. கழகத்தின் தொடர்ந்த இயக்கம் குறித்து நம்பிக்கை உள்ளது. கல்லூரியின் செயலர் குறிப்பிட்ட X,Y - GRAPHICAL WAY வடிவம்

தொல்லியலில் குறிப்பிடப்பெறுகின்ற குறியீடுகளே (GRAFFITI). 1700 ஆண்டுகளுக்கு முன்னர் எழுத்துகள் பொறிக்கப்பட்ட செக்குக் கல்வெட்டு அண்மையில் கண்டறியப்பட்டு இந்த ஆவணத்தில் பதிவாகியுள்ளது. அறச்சலூர்த் தமிழிக் கல்வெட்டை ஒத்த காலம் எனக் கண்டறியப்பட்டுள்ளது.

முறையான தொல்லியல் அறிவு பரவலாகப் போகவேண்டும். வரலாற்றுக்குப் பயன்படுகின்ற செய்திகள் மட்டுமே மக்களைச் சென்றடையவேண்டும். நாளிதழ்களில் பல செய்திகள் வெளியிடப்படுகின்றன. நாளிதழில் மிகைப்படுத்தப்பட்ட செய்திகள் விரும்பப்படுதல் இயல்பு. ஆகவே, வரலாற்றுச் செய்திகள் இடம்பெறும்போது மிகைப்படுத்தப்பட்ட செய்திகள், நல்ல செய்திகள் என வேறுபடுத்திப் பிரித்துப்பார்க்கவேண்டும். முடியுமட்டும் நம்பக்கூடிய வரலாற்றுச் செய்திகளையே பிரித்தெடுத்து ஆவணம் இதழில் பதிவு செய்கிறோம். வரலாற்றாளர் செய்திகளை அணுகும்போது முதலில், செய்தி நம்பக்கூடியதா என்றும், வரலாற்று உண்மை (HISTORICAL FACT) அதில் இருக்கிறதா என்றும் உறுதிப்படுத்திக்கொள்ளவேண்டும் (CORROBORATION). தொல்லியல் கழகம் வரலாற்றாளர்களுக்கு உதவும் பணியில் முப்பது ஆண்டுகளாகச் செயல்பட்டு வருகிறது.

பழைய சின்னங்களைக் காப்பாற்றுவதும் போற்றுவதும் வேண்டும். ஆர்வலர்கள் இதற்கு உதவ வேண்டும். நேற்றிருந்த கல்வெட்டுகள் இன்றில்லை. கருநாடகத்தின் வடக்கு கனரா மாவட்டத்தில் அசோகனின் கல்வெட்டு ஒன்று கிடைத்துப் பிறகு உடைத்தெறியப்பட்ட செய்தியைச் செவியுறுகிறோம். கோவில் சுவர்களில் உள்ள கல்வெட்டுகளையும் சிறிது சிறிதாக அழித்துவருகிறார்கள். பொதுமக்களின் ஒத்துழைப்போடு கல்வெட்டுகளைப் பாதுகாக்கும் செயலில் ஈடுபடவேண்டும். தற்போது, மரபு நடைப் பயணங்கள் பெருகி வருகின்றன. அவற்றை வரலாற்று மையங்கள் பல நடத்துகின்றன. இம்மையங்களுக்குள் நட்பில்லை; பகைமை வளர்கிறது என்று கேள்விப்படுகிறோம். WHATS APP போன்ற ஊடகங்கள் வாயிலாக உடனுக்குடன் செய்திகள் பகிரப்படுகின்றன. இது போன்ற பகிர்வுகளில் ஆரோக்கியமான நோக்கும், ஒத்துழைப்பும் இருக்கவேண்டும்.

ஆவணம் இதழ் மற்றும் நூல்கள் வெளியீடு:

ஆவணம் முப்பதாவது இதழ் கழகத்தின் தலைவர் திரு. செந்தீ நடராசன் அவர்களால் வெளியிடப்பெற்றது. அடுத்து, சென்னைப் பல்கலையில் தொல்லியல் துறையில் பணி நிறைவு செய்த பேராசிரியர் ப. சண்முகம் அவர்கள் எழுதிய "பெரிய பட்டினம் காசுகள்" என்னும் நூல் வெளியிடப்பட்டது. நூலாசிரியர் பேசுகையில், "கீழக்கரை அருகில் அமைந்த இவ்வூரில் சங்க காலக் காசுகளும், இடைக்காலச் சோழர் காசுகளும் கிடைத்துள்ளன. சீன அறிஞர் நொபுரு கரசிமா அவர்களும் சுப்பராயலு அவர்களும் இணைந்து எட்டு ஆண்டுகளுக்கு முன்னர் இப்பகுதியில் ஆய்வு செய்கையில் ஊர் மக்கள் இவ்விருவரிடமும் நிறையக் காசுகளைத் தந்துள்ளனர்" என்று குறிப்பிட்டார். சுப்பராயலு அவர்கள் நூலாசிரியரிடம் இக்காசுகளைக் கொடுத்துள்ளார். காசுகளை ஆய்வது அத்துணை எளியதல்ல. அவற்றைத் தூய்மைப் படுத்தவேண்டும். நீண்ட காலம் சென்று தற்போது தம் ஆய்வுகளின் அடிப்படையில் மேற்படி நூலை வெளியிட்டுள்ளார். சங்ககாலக் காசுகளாகச் சேரர் காசுகளும், பாண்டியர் காசுகளும் சோழர் காலக் காசுகளும் கிடைத்துள்ளன. எனவே, பெரிய பட்டினம் சங்ககால ஊராகவும், இடைக்காலச் சோழர் காலத்தில் ஒரு துறைமுகமாகவும் விளங்கியதையும் அறிகிறோம். வணிகப்பகுதியாக இருந்த ஊர். நூற்றைம்பது காசுகளை ஆய்ந்து ஆசிரியர் இந்நூலில் எழுதியுள்ளார். NUMISMATICS என்னும் நாணயவியலாளர்க்கு இந்நூல் பெரிதும் பயன்படும். எழுத்துகளின் வளர்ச்சி பற்றி ஆய்வு செய்யும் வரலாற்றாளர்களுக்கும் இந்நூல் பயன்படும்.

அடுத்து, வில்லியனூர் வெங்கடேசன் அவர்கள் எழுதிய "காரைக்கால் கல்வெட்டுகள்" நூல் வெளியிடப்பெற்றது. பின்னர் வாழ்த்துரை நிகழ்ச்சியில் (கோவை) சிரவை ஆதீனம் அவர்களும், கல்லூரியின் தமிழ்த் துறைத் தலைவரான முனைவர் பத்மாவதி அவர்களும் உரையாற்றினர். ஆதீனம் அவர்கள், தம் உரையில், கோயில்களின் தொன்மை குறித்தும், தஞ்சைக் கோயிலின் நுழைவாயிலின் அகலம் சார்ந்த சிறப்பு குறித்தும் பேசினார். திருப்பெருந்துறைக் கோயிலின் சிற்ப வேலைப்பாடுகள் மிகச் சிறப்பானவை என்றும், சிற்பக் கட்டுமானத்தில் குறைகள் ஏற்படின்

அக்கற்களை அகற்றிச் செம்மைப்படுத்த மாற்றுக்கற்களும் இருந்தன என்றும் அவர் குறிப்பிட்டார்.

செயலர் திரு. கண்ணையன்



சிரவை ஆதீனம்



பேரா.எ.சுப்பராயலு



கட்டுரை ஆசிரியர் சுதந்தரம்

பேரா.கி. நாச்சிமுத்து



சீனாவில் கிடைத்த தமிழ்க்கல்வெட்டு பற்றி திரு. சுப்பராயலு அவர்களின் விளக்கம்:

அண்மையில், முனைவர் சு.இராசகோபால் அவர்கள் சீனாவில்-தமிழ்க்கல்வெட்டு பற்றிய முக நூல் பதிவினை சுப்பராயலு அவர்களின் ஆய்வுப்பார்வைக்கு அனுப்பியிருந்தார். கல்வெட்டில் ஒரு சைவப்பாடல் இருக்கிறது.

பாடல் வரிகள் வருமாறு :

வையம் நீடுக மாமழை மன்னுக
மெய்விரும்பிய அன்பர் விளங்குக
சைவ நன்னெறி தான்தழைத் தோங்குக
தெய்வ வெண்திரு நீறுசிறக்கவே

கல்வெட்டில் பாடலுக்கு முன் இரண்டு கிரந்த எழுத்துகள் உள்ளன. அவை “ஹர:” பாடல் சிவ மதத்தைப் போற்றுவதாக அமைந்துள்ளது. சீனாவில் குவான் ஜோ (QUANZHOU) என்னுமிடத்தில் கிடைத்துள்ளது.

குப்ளாய் கான் காலக் கல்வெட்டு:

இதே ஊரில், இதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்னர் இன்னொரு கல்வெட்டு கிடைத்தது. அது பற்றி SOUTH INDIAN STUDIES பதிப்பில் நீண்டதொரு கட்டுரையைத் தி.நா.சுப்பிரமணியன் எழுதினார். அதிலும் கல்வெட்டு முதலில் “ஹர” என்னும் இறை வாழ்த்துடன் தொடங்குகிறது. மங்கோல் (MONGOL) அரசன் செங்கிஸ்கானின் (GENGHIS KHAN) பேரன் குப்ளாய்கான் (KUBLAI KHAN) என்பவன். குப்ளாய் கான் என்பது எல்லாருக்கும் தெரிந்த பெயர். அவனுக்குச் “செகசை கான்” என்னும் பெயரும் உண்டு. இது சடங்குக்காக வைத்த பெயர். அவன் ” திருமேனிக்கு நன்றாக” என்று கல்வெட்டில் வருவது அவனுடைய உடல் நலத்துக்காக எனப் பொருள் படும். “திருக்கானீசுவரம்” என்னும் கோயில் எடுப்பித்த செய்தி. அரசனின் பின்னொட்டுப் பெயரான கான் (KHAN) என்பதன் அடிப்படையில் கோயிலின் பெயர் கானீசுவரம் என்று வழங்கப்பட்டது. கல்வெட்டில் வரும் “பர்மான்” என்பது அரசனின் ஆணை (உத்தரவு) எனப்பொருள்படும் பாரசீகச் (PERSIAN) சொல்லாகும். (பின்னூட்டமாகக் கருத்துத் தெரிவித்த ஒருவர் “பர்மான்” என்பது “ப்ரமாண்” என்பதாக இருக்கலாம் என்று குறிப்பிட்டார்). கல்வெட்டு கிடைத்த இடத்தில் சிற்பங்கள் இருந்தன. ஆனந்த குமாரசாமி இதைப்பற்றி எழுதியுள்ளார். குப்ளாய் கானின் தூதுவர் பாண்டி நாட்டுக்கு வந்ததாகவும், பாண்டிநாட்டிலிருந்து தூதுவர் சீனத்துக்குச் சென்றதாகவும் செய்தி உள்ளது. கல்வெட்டில், சீன எழுத்துகள் பன்னிரண்டு உள்ளன. கரஷிமாவின் மாணவர் இதைக் கரஷிமாவுக்குக் காட்டியுள்ளார். ஆனால், சீன எழுத்துகள் இதுவரை படிக்கப்படவில்லை. சீனப் பேராசிரியர்களுக்கே படித்தல் கடினம். காரணம், பிற மொழிச் சொற்கள் சீனத்துக்கு மாறும்போது மிகப்பெரிய அளவில் மாற்றம் பெறும்.

தற்போதைய சீனக் கல்வெட்டில் வரும் பாடல் பெரியபுராணம் நூலில் காணப்படுகிறது. இப்பாடல் சேக்கிழார் இயற்றியது அல்ல. இது, கே. சுப்பிரமணிய பிள்ளை பதிப்பில் சேர்க்கப்பட்ட ஒரு தனிப்பாடலாகும். ஓம்படைக்கிளவி போன்ற கருத்தில் சேர்க்கப்பட்ட தனிப்பாடல் எனலாம். திருக்குறள் நூலின் பதிப்பின் இறுதியில் அமையும் திருவள்ளுவ மாலை போன்ற பாடல் பகுதி எனலாம். (தமிழ் நாட்டில் வேறொரு கல்வெட்டிலும் இப்பாடல் வருகின்றது). இரு சீனக் கல்வெட்டுகளும் ஒரே காலத்தைச் சேர்ந்தவை. மேற்படி குவான் ஜோ (QUANZHOU) நகரில் கோயில் இடிபாடுகள், துண்டுச் சிதறல்கள் முந்நூற்றுக்கும் மேலாகக் கிடைத்துள்ளன. தமிழகத்திலிருந்து கல்தச்சர்கள் சீனாவுக்குச் சென்று கோயில் சிற்பங்களைச் செய்திருக்கிறார்கள் கலைப் பண்பாட்டுப் பரிமாற்றம் நிகழ்ந்துள்ளது. இப்பணியில் பல ஆண்டுகள் அவர்கள் சீனாவில் தங்கியிருத்தல் வேண்டும். 12-13 -ஆம் நூற்றாண்டுகளில் இந்நகரம் சிறந்த துறைமுகமாக விளங்கியிருக்கிறது. பல நாட்டு வணிகர்களும், பல மதத்தவர்களும் இந்நகரின் தெற்குப்பகுதியில் குடியிருப்பு அமைத்து வாழ்ந்திருக்கிறார்கள். தமிழர் கட்டிய சிவன் கோயிலின் கட்டுமானத் துண்டுகள் - தூண்கள், சிற்பங்கள் ஆகியவை - இங்குள்ள புத்தக் கோயில்களில் வைத்துக் கட்டப்பட்டுள்ளன. அவற்றில் பல தற்போது இந்நகரின் அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ளன.

ஊடகங்களில் அரைகுறையாகவும், வேகமாகவும் பல செய்திகள் (முழுப்புரிதலின்றி ?) வெளியாகின்றன.

15-ஆம் நூற்றாண்டில் சீனக்கப்பல்கள் இந்தியப் பகுதிக்கு வந்து போயுள்ளன. இந்தியக் கப்பல் தலைவர் பொறித்த சில கல்வெட்டுகள் இப்பகுதியில் உள்ளன. இவை யாவும் மூன்று மொழிகளில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகளாகும். தமிழ், சீனம், பாரசீகம் ஆகியவை அம்மொழிகள். ஒரு கல்வெட்டு கோழிக்கோட்டில் தூண் ஒன்றில் பொறிக்கப்பட்டிருந்தது. தற்போது அத்தூண் கிடைக்கவில்லை. இலங்கையில், தெற்கு கல்லெ (GALLE) என்னுமிடத்தில் மற்றொரு கல்வெட்டு கிடைத்துள்ளது.

கட்டுரை வாசித்தல் - அமர்வு:

அடுத்து, கட்டுரை வாசித்தலுக்கான அமர்வு தொடங்கியது. அமர்வுக்குத் தலைவர் திரு. பூங்குன்றன் அவர்கள்.

அ) மணிகண்டன் - நாணயவியல் ஆய்வாளர், சென்னை.

இவர் தமக்குக் கிடைத்த ஒரு தங்க நாணயப்படத்தைக் காட்சிப்படுத்தி, அது முதலாம் இராசராசனின் நாணயம் என்னும் கருத்தை முன்வைத்தார். அதில் உள்ள புலியின் தோற்றம் இதுவரை மற்ற நாணயங்களில் கண்டிராத தோற்றம் என்பதும், நாணயத்தில் எழுதப்பட்டுள்ள " ராஜ - உ டை " என்னும் எழுத்துகளே என்பதும் அவர் சுட்டிய காரணங்கள். ஆனால், இவரது கருத்து முழுமையாக ஏற்றுக்கொள்ளப்படவில்லை. "உடையார்" என்னும் முழுச் சொல் நாணயத்தில் காணப்படவில்லை. மேலும், " உ டை " என்று கட்டுரையாளர் படித்த இரு எழுத்துகள் எழுத்துகளாகத் தோன்றவில்லை. எண்களின் குறியீடாகத் தோன்றுகிறது என்பதாக ஐயங்கள் எழுந்தன. புலியின் உருவமும் சிங்கத்தையே நினைவூட்டியது. அதன் வாலின் நுனியில் காணப்படுகின்ற சிறு குஞ்சம் போன்ற அமைப்பு, சிங்கத்துக்கு அமைவதும், புலிக்கு இவ்வமைப்பு இல்லாததும் ஆய்வுக்குரியது.



"ராஜ உ டை"

ஆ) முத்து பழனியப்பன் - அறநிலையத்துறை அலுவலர் (பணி நிறைவு)

இவர், கல்வெட்டில் வருகின்ற குடி நீங்கா தேவதானம் பற்றிய தம் கருத்துகளை முன்வைத்தார். தேவதானம் என்பது கோயிலுக்குக் கொடையாக அளிக்கப்படும் நிலம் ஆகும். இந்நிலக்கொடை இறையிலியாக அளிக்கப்படும். அதாவது அரசனுக்குச் செலுத்தவேண்டிய வரிகளிலிருந்து நீக்கம் பெற்ற நிலம். சில போது, இவ்வகை நிலக்கொடை "குடி நீங்காத் தேவதானம்" என்று குறிப்பிடப்பெறும். நிலங்களைச் சார்ந்து உழுகுடிகள் இருப்பர். இவர்கள் உழுது பயிரிட்டு அவ்வுழைப்பு தரும் வருவாயில் வாழ்பவர்கள். தேவதானமாக ஒரு நிலம் கோயிலுக்கு அளிக்கப்படுகையில், அந்நிலத்தைச் சார்ந்த உழுகுடிகளை மாற்றாமல் தொடர விடுகின்ற நிலையில் அந்நிலம் குடி நீங்காத் தேவதானம் எனப்படும். ஆனால் கட்டுரையாளர், குடி நீங்காத் தேவதானம் என்பது குடிவாரம் என்னும் சொல் குறிக்கும் நிலம் என்னும் பார்வையில் கருத்து வைத்தார். RIGHT TO PERMANENT OCCUPANCY என்னும் கருதுகோளை ஒட்டிப் பேசினார். இக்கருத்தும் ஏற்கப்படாமல் முரண் கருத்துகள் வெளிப்பட்டன.

இ) சுபாஷ் சந்திரபோஸ் - குறியீடுகள் மற்றும் சிந்து முத்திரைகள் - ஆய்வாளர்







இவர் தமது ஆய்வுகளை "தொ(ல்)லியல்" என்னும் பெயரில் காட்சிப்படுத்தினார். சிந்து சமவெளி முத்திரைக் குறியீடுகளைத் தமிழகத்தில் ஆங்காங்கே கிடைக்கும் பானைக் குறியீடுகளோடு ஒப்பிடுதல், சிந்துக் குறியீடுகளைப் படித்தல் ஆகிய தம் செயல்பாடுகளை எடுத்துச் சொன்னார். (கட்டுரை ஆசிரியர் குறிப்பு: "தொலியல்" , உமி நீங்கிய அரிசி என்று சில தொடர்களைக் கையாண்டு ஆய்வுக்கட்டுரையாளர் கூறியவை இக்கட்டுரை ஆசிரியருக்கு விளங்கவில்லை)

























குறியீடுகள் மற்றும் சிந்து முத்திரைகள் - சுபாஷ் சந்திர போஸ் - உரை

கடந்த 25 ஆண்டுகளாக அவர் செய்துவந்துள்ளதைக் குறிப்பிட்டார். சிந்துக் குறியீடுகள் எந்த மொழியைச் சார்ந்தவை என்பது நூறு ஆண்டுகளாகச் 'சர்ச்சை'யாக இருந்து வருகின்றது. "மோ" , "ச" எழுத்துகளை அவர் அடையாளம் கண்டதும், எகிப்து நாட்டில் கிடைத்த குறியீடுகளுக்கும், சிந்துக் குறியீடுகளுக்கும் உள்ள ஒப்புமையைக் கண்டறிந்ததையும் அவர் காட்டியவாறு கீழுள்ள படங்களில் காணலாம்.

அவருடைய ஆய்வில் படித்தறிந்த சில தரவுகளின் படங்களை , அவர் காட்சிப்படுத்தினார். அவை மேலே பார்வைக்கு கொடுக்கப்பட்டுள்ளது.

ஈ) முனைவர் செல்வகுமார் - நாங்கூர் அகழாய்வு

இவர், சீர்காழி அருகில் உள்ள நாங்கூரில் செய்த அகழாய்வு பற்றி விளக்கினார். காவிரிப்படுகையில் அமைந்த ஊர்ப் பெயர்களின் ஆய்வினையும் செய்துள்ளார். நாங்கூர் சங்ககால ஊராக அறியப்படுகிறது. இது ஒரு வைணவத் திருத்தலம். திருமங்கையாழ்வாரோடு தொடர்புப் படுத்தப்படுகிறது. கரிகாலச் சோழன் நாங்கூர் வேளிரின் மகளை மணமுடிக்கக் கேட்டான் என்றொரு செவிவழிச் செய்தி நிலவுகிறது. மூன்று குழிகளில் நடந்த அகழாய்வின்போது சங்ககாலத்தைச் சேர்ந்த கருப்பு-சிவப்புப் பானை ஓடுகள் இங்குக் கிடைத்தன. மற்றும், செங்கற்கள், சுடுமண் பொம்மைகள், வளையல்கள் ஆகியனவும் கிடைத்துள்ளன. இங்கு கிடைத்த வளையல்கள் மாந்தையில் கிடைத்த வளையல்கள் போன்றுள்ளன. மீன், ஸ்வஸ்திகா ஆகிய குறியீடுகளும் இங்கு கிடைத்தன.

உ) முனைவர். கே. பன்னீர்செல்வம் - இந்தியத் தொல்லியல் ஆய்வுத்துறை (ASI)

கல்வெட்டுகளில் இயற்கைச் சீற்றங்கள்.

இவர் இயற்கைச் சீற்றங்கள் பற்றிய தம் செய்திகளை முன்வைத்தார். வரலாற்றுக் காலத்திலிருந்து இயற்கைச் சீற்றங்கள், பெருங்காற்று, பெரும் நெருப்பு, பெரும் வறட்சி, பூகம்பம் ஆகிய பல பெயர்களால் குறிப்பிடப்படுகின்றன. இலக்கியங்களில் சில குறிப்புகள் காணப்படுகின்றன.

விண்டு முன்னிய புயனெடங்காலக்.....கல்சேர்ப்பு மாமழை
- **பதிற்றுப்பத்து** 84-22

புயல்மேகம்போற்றிருமேனியம்மான்
- **திருவாய்**- 8,10,2

மாமேகம் பெய்த புயல்
- **சீவக சிந்தாமணி** 2476

கல்வெட்டுகளிலும் இயற்கைச் சீற்றங்கள் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. தென் ஆர்க்காடு மாவட்டம் திருக்கஞ்சி ஊர்க்கோயில் கல்வெட்டில் (AR No.215/1919),

"திரிபுவனமாதேவிச் சதுர்வேதிமங்கலத்து ஏரி நிறையேரியிலே பெருங்காற்றடித்துக் குலையழிந்து கெட்டமையில்"

என்று கூறப்பட்டுள்ளது. இக்கல்வெட்டு, முதலாம் குலோத்துங்கனின் 40-ஆம் ஆட்சியாண்டில் - கி.பி. 1110 - பொறிக்கப்பட்டது. இதே ஊர்க்கோயிலின் மற்றுமொரு கல்வெட்டில் (AR No.216/1919) ,

" கற்படையின்றியே நிறை ஏரியிலே பெருங்காற்றடித்து கரையழிந்து கெட்டமையில் இவ்வேரி குலோத்துங்க சோழந் கற்படையுஞ்செய்து மண்கல்லிக் கரையூட்டுகைக்கும் ஏரி மாவிரைக்குஞ் சிலவாக நிலநிமந்தமாக விடுக..."

என்று கூறப்பட்டுள்ளது. காலம் கி.பி. 1114. ஒரே ஏரி நான்கு ஆண்டுகளுக்குள் இரு முறை பெருங்காற்றினால் கரை அழிந்துபோனமை அறிகிறோம். இதேபோல், கிளிவளநல்லூரில் (இன்றைய தென் ஆர்க்காடு மாவட்டத்துக் கிளியனூர்), பெருங்காற்று, பெருமழை காரணமாக ஊரின் பெரிய ஏரி, பெரிய மதகு, சிற்றேரி ஆகியவற்றின் கரை அழிந்துபோன செய்தியைக் கல்வெட்டு (AR No. 154/1919) தெரிவிக்கிறது. காலம் விசயநகர அரசர் மல்லிகார்ச்சுனர் ஆட்சி. கி.பி. 1450.

தஞ்சை மயிலாடுதுறை பரசலூர் கிராமத்துக் கோயிலில் நெருப்புப்பட்டு பழந்தேவதான நிலங்களின் ஆவணங்கள் அழிந்துபோனதை ஒரு கல்வெட்டு கூறுகிறது.

“இது துரித காலங்களிலே நெருப்புப்பட்டு அழிந்து போகயில்” என்பது கல்வெட்டு வரி.

மழையின்றிப் பெரும் வறட்சி ஏற்பட்டபோது, வேளாண்நிலம் பாக்குத் தோட்டமாக மாற்றப்பட்டதாக அரியலூர் பெரியதிருக்கோணக்கோயில் கல்வெட்டும், மயிலாடுதுறை புஞ்சை என்னும் கிராமத்துக் கோயில் கல்வெட்டும் தெரிவிக்கின்றன. முதல் கல்வெட்டின் காலம் கி.பி. 1127. அரசன் விக்கிரம சோழன். இரண்டாம் கல்வெட்டின் காலம் 1162. அரசன் இரண்டாம் இராசராசன்.

பெருமழையால் அழிவு நேர்ந்ததைக் குடமூக்கு (குடந்தை) நாகேசுவரர் கோயில் கல்வெட்டும், வந்தவாசி மருதாடு ஊர்க்கோயில் கல்வெட்டும், மயிலாடுதுறை வழுவூர்க் கோயில் கல்வெட்டும் கூறுகின்றன. கல்வெட்டுகளின் காலம் முறையே 1014, 1345, 1402 ஆகும். அரசர்கள் முறையே முதலாம் இராசேந்திரன், இராசநாராயண சம்புவராயர், இரண்டாம் வீரபுக்கண உடையார் ஆவர்.

“வெண்ணாட்டு நாகக்கோட்டகம் வதி வாய்க்கால் கண்ணாற்றுச் சதிரவாறு சுற்றுக்குலையுமின்றி வெள்ளங்கொண்டநமையில்ச் சேதமாய் வருகையில்” என்பது திருநாகேசுவரம் கோயில் கல்வெட்டின் வரிகள்.

“பெருவெள்ளத்திலே உடைந்து இன்னாள்வரையும் அடைக்க முதலில்லாமற் கிடக்கையில் இவ்வேரி அடைக்க..” என்பது மருதாடு ஊர்க்கோயிலின் கல்வெட்டு வரிகள்.

திருவண்ணாமலைக் கோயில் கல்வெட்டு அவ்வூரில் நிகழ்ந்த நிலநடுக்கத்தைப் பற்றிக்கூறுகிறது.

“பிறபவ வருஷம் ஆடி மீ 16-ஆந்தேதி பூகம்பம்மாகையில் மதிள் அடிமட்டிராக விழுந்து போகையில்…” என்பது கல்வெட்டு வரி.

ஊ) முனைவர் இரமேஷ் - ஜம்பை பள்ளிச் சந்தல் கல்வெட்டு பற்றி.

ஜம்பையில் சமணப்பள்ளி இருந்துள்ளதன் காரணமாக இங்குள்ள ஒரு பகுதிக்குப் பள்ளிச் சந்தல் என்னும் பெயர் அமைந்தது. இங்கு ஏரியை அடுத்துள்ள வயற்பகுதியில் தனிக்கல்லில் பொறிக்கப்பட்ட கல்வெட்டை ஆறு பேர் கொண்ட குழு ஆய்வு செய்தது. சக்கன் வைரி என்பவன் ஏரி வெட்டிக்கொடுத்ததைக் கல்வெட்டு தெரிவிக்கிறது. ஏரியைப் பாதுகாக்க நிலக்கொடையும் அளிக்கிறான். இவ்வகை நிலக்கொடை “ஏரிப்பட்டி” எனப்படும். “காடு வெட்டி கட்டைகொண்டு புத்தறை அறுத்து” என்பது கல்வெட்டு வரிகள். காடு அழித்துப் புதிய தரை நிலம் (புத்தரை) உருவாக்குகின்றனர். கட்டை என்பது மரத்தின் வேர்ப்பாகம். ”கட்டைகொண்டு” என்பது மரத்தின் வேரோடு காடு அழிக்கப்பட்டதைக் குறிக்கும். கல்வெட்டின் எழுத்தமைதி கொண்டு இக்கல்வெட்டு விசயாலய சோழன் காலத்தது எனக் கருதலாம். விசயாலயனின் ஆட்சிக்காலம் கி.பி. 848-871 எனவும் கி.பி. 850-871 எனவும் இரு வகையான கருத்துள்ளது. கல்வெட்டில் ஆட்சியாண்டு இருபத்திரண்டு என்றிருப்பதால் கல்வெட்டின் காலம் கி.பி. 871 என்று கொள்ளலாம். கல்வெட்டில், குறிப்பாக ”அ” எழுத்து மிகவும் பழமையான வடிவத்தில் உள்ளது. எனவே, முதலாம் பராந்தகனின் காலத்துக்கும் முன்னர் கருதுமாறுள்ளது. கல்வெட்டு ஜம்பையின் பழம்பெயராக வாளையூர் எனக்குறிக்கிறது.

கல்வெட்டின் பாடத்தைக் கொண்டு, சக்கன் வயிரி என்பவன் ஏரி வெட்டியதாகப் பொருள் கொள்ளமுடியவில்லை. ஏரியைப் பேணுவதற்காக ஏரிக்கீழ் இருக்கும் நிலத்தில் காடு வெட்டித் திருத்திய நிலத்தை “ஏரிப்பட்டி”யாகக் கொடை அளித்தான் என்றே தோன்றுகிறது. கல்வெட்டை

ஆய்ந்த இரமேஷ் அவர்களைத் தொடர்புகொண்டு ஐயம் தீர்க்கவேண்டும். ஐயம் தீர்க்கும் முயற்சியில் கல்வெட்டின் தெளிவான ஒளிப்படத்தை அவரிடமிருந்து பெற்றேன். ஏரியைச் சக்கன் வயிரி வெட்டினான் என்பது உறுதியாகவில்லை என்றே கருதுகிறேன். "புத்தறை அறுத்து" என்று கல்வெட்டில் வருகிறது. இது, புல் முளைத்த தரைப்பகுதியைச் சீராக்கியதையே குறிக்கும் என்பது கல்வெட்டு அறிஞர் திரு. பூங்குன்றன் அவர்களின் கருத்து. ஆட்சியாண்டு இருபத்திரண்டு அல்ல என்றும் தோன்றுகிறது. ஐயங்கள் பற்றிய விளக்கம் திரு.இரமேஷிடமிருந்து கிடைத்த பின் சரியான கருத்து தெரியவரலாம்).



ஏரிக் கல்வெட்டு
படம் உதவி - முனைவர் இரமேஷ்

ஏரிக் கல்வெட்டு

ஏரிக் கல்வெட்டு

கல்வெட்டுப் பாடம் :

**1 (ஸ்வஸ்தி)ஸ்ரீ கோப்பரகேசரி ப**
**2 (ன்) மற்க்கு யாண்டு இருபத்**
**3 .....ன்றாவது வாணகோப்பாடி**
**4 ....னையூர் நாட்டார் பெரும்பள்ளி**
**5 பள்ளிச் சந்தத்து சக்கன் வயிரி ....**
**6 ...ந்த ஏரிக்கீழ்ச் சக்கன் காடுவெட்டி**
**7 க்கட்டை கொண்டு புத்தறை அறுத்து அவ்வே**
**8 .....ஏரிப்பட்டியாகச் செய்த நிலம் எல்லை**
**9 ..........சா0ஸநம் வெட்டின அருகிற்**
**10 ............... ம் வடக்கெல்லை ஏரி கரையடி**
**11 ...மேல்பாற்கெல்லை வெம்பொ(ற்/டு) குழியு...**
**12 .... பாற்கெல்லை கீழ்க்கடைக்கொம்பில் ....**
**13 ..................... கு வருந்திசையிலும் நடுவு**
**14 (பட்ட நில)ம் உண்ணிலமொழிவின்றி ...**
**15 (டிக) ........ சந்தமுடைய பூமிய**
**16 ........ பெற்று இவ்வேரிப்(பட்டி)...**
**17 ............... க்கடி வயிர ....(ணன்) இ(து)**
**18 ............... தலைமேலன.....**
**19 ....... க ம ..... ந உ-**

அடுத்து இன்னொரு கல்வெட்டு இரண்டாம் இராசராசனின் ஆறாவது ஆட்சியாண்டில் பொறிக்கப்பட்டுள்ளது. ஜம்பையில் உள்ள சமணப்பள்ளியில் அஞ்சினான் புகலிடம் அமைத்ததைக் கல்வெட்டு குறிக்கிறது. நேமிநாதன் என்பவன் (துரவு) கிணறு அமைத்ததையும் கல்வெட்டு குறிக்கிறது.


படம்-முனைவர் இரமேஷ்
அஞ்சினான் புகலிடம்

அஞ்சினான் புகலிடம்
கல்வெட்டின் பாடம்:

1. **ஸ்வஸ்திஸ்ரீ ராஜராஜதேவற்கு யாண்டு ஆறாவது சம்பையாந வீரராஜேந்த்ர பு**
2. **ரத்து ஸ்ரீகண்டராதித்தப் பெரும்பள்ளிப் பள்ளிச் சந்தத்து ஸ்ரீகண்டராதித்தப்**
3. **பெரும்பள்ளி பள்ளியுடையாந் நேமிநாதந் இட்ட துரவு சோளதுங்கந் ஆளவந்**
4. **தாந் அஞ்சிநாந் புகலிடம்**

தி.நா.சுப்பிரமணியன் நினைவு அறக்கட்டளைச் சொற்பொழிவு:

முதல் நாள் நிகழ்ச்சியின் இறுதிப்பகுதியாக, தி.நா.சுப்பிரமணியன் நினைவு அறக்கட்டளைச் சொற்பொழிவு நடைபெற்றது. இந்த அறக்கட்டளையை நிறுவியவர் மறைந்த கல்வெட்டு அறிஞர் ஐராவதம் மகாதேவன் அவர்கள்.

சொற்பொழிவினை ஆற்றியவர், தமிழகத்தின் புகழ்பெற்ற நாணயவியல் ஆய்வாளர் திரு. ஆறுமுக சீதாராமன் அவர்கள். நிறைய நாணயங்களின் படங்களைக் காட்சிப்படுத்தி அவற்றிலுள்ள எழுத்துகளைப் பார்வையாளர்களுக்குப் புரியும் வகையில் படித்துக்காட்டினார். நாணயங்களைப் பற்றிய புலமை கைவரப்பெறுதல் எளிதல்ல. அவர் காட்சிப்படுத்தி விளக்கிய காசுகளின் எண்ணிக்கை மிகுதி. தனிக்கட்டுரையாக

விரியும் தன்மையது. இங்கே ஒரு சில காசுகளைப் பற்றி மட்டும் குறிப்புகளைத் தந்து இக்கட்டுரையைக் கருத்தரங்கின் முதல் நாள் நிகழ்ச்சியோடு முடிக்கின்றேன். கருத்தரங்கின் இரண்டாம் நாள் நிகழ்ச்சி மற்றுமொரு கட்டுரையாக அமையும்.

பாண்டியர் காசு - பெருவழுதி



சேரர் காசு - குட்டுவன் கோதை



பல்லவர் காசு - மாமல்லன்



சோழர் காசு - ராஜேந்திர சோழன்



1. பாண்டியர் காசு - பெருவழுதி

இக்காசு, சங்ககாலப் பாண்டியர் காசு. எழுத்து பிராமி எழுத்து. பட்டிபுரோலு வகைப் பிராமி எழுத்தைச் சேர்ந்தது. அதாவது நெடிலுக்குரிய குறியீடு கொண்டிருக்கும்; குறிலாகப் படிக்கவேண்டும். இதில் "பெருவாழுதி" என்றே எழுதப்பட்டுள்ளது.


பாண்டியர் காசு (13-ஆம் நூற்றாண்டு) - சோணாடுகொண்டான்


கோனேரிராயன் காசு - 15-ஆம் நூற்றாண்டு


தஞ்சை நாயக்கர் காசு - விசையரகுனாத


மதுரை நாயக்கர் காசு - மங்கம்மா



சேதுபதி காசு


ஆங்கிலேயர் காசு - விது னாற்பது காசு

2. சேரர் காசு - குட்டுவன் கோதை

சேரர் காசு. பிராமி எழுத்து. "கு" எழுத்தில் உகரத்தைக் குறிக்கும் குறியீடு வலப்புறமாக எழுதப்படுவதற்கு மாறாக இடப்புறமாக எழுதப்பட்டுள்ளது.

3. பல்லவன் காசு - மாமல்லன்
காசின் முன்பக்கம் காளை உருவம்; பின்பக்கம் சங்கு உருவம். கிரந்த எழுத்துகளில் ”மாமல்ல” என்று எழுதப்பட்டுள்ளது. “ல்ல” என்பது கூட்டெழுத்து.

4. சோழர் காசு - ராஜேந்திர சோழன்
சோழ கிரந்தத்தில் ”ராஜேந்த்ர சோழந்” என்று எழுதப்பட்டுள்ளது. இரண்டு மீன்கள், அமர்ந்த புலி, வில் ஆகியவை உள்ளன.

5. பாண்டியர் காசு (13-ஆம் நூற்றாண்டு ) - சோணாடுகொண்டான்
காசின் முன்பக்கம் நிற்கும் மனிதன். பின் பக்கம் “சோணாடுகொண்டான்” தமிழில்.

6. கோனேரிராயன் காசு - 15-ஆம் நூற்றாண்டு
முன்பக்கம் காளையும், குத்து வாளும். குத்துவாளுக்கு மாலை அணிவிக்கப்பட்டுளது. பின்பக்கம் “கோனேரிராயன்” தமிழில்.

7. தஞ்சை நாயக்கர் காசு - விசையரகுனாத
காசின் முன்பக்கத்தில் நின்ற கோலத்தில் திருமகள்; பின்பக்கத்தில் தமிழில் “விசையரகுனாத”.

8. மதுரை நாயக்கர் காசு - மங்கம்மா
காசின் முன்பக்கத்தில் வீணையுடன் கலைமகள்; பின் பக்கத்தில் “மங்கம” என்று தெலுங்கு எழுத்தில்.
(கட்டுரை ஆசிரியர் குறிப்பு : மூன்றாவது எழுத்து ஆய்வுக்கட்டுரையாளர் சற்றுப் பிழையாகக் காட்டியுள்ளார் என்பது கருத்து. தெலுங்கு எழுத்தில் “க” [GA] எழுத்து , படத்தில் காண்பிக்கப்பட்ட ஆங்கில "A" வடிவத்தில் இடைக்கோடு இன்றித் தலைகீழ் "U" வடிவில் எழுதப்படும்.)

9. சேதுபதி காசு
காசின் முன்பக்கம் மயிலின் மேல் ஆறுமுகம்; பின்பக்கம் தமிழில் “சேதுபதி”.

10. ஆங்கிலேயர் காசு - யிது னாற்பது காசு

காசின் முன்பக்கம் , தெலுங்கிலும் தமிழிலும். பின் பக்கம் பாரசீகம், ஆங்கிலம்.

தொடர்பு: துரை.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.
doraisundaram18@gmail.com, அலைபேசி : 9444939156.

## 23. வரலாறு எழுதுதல்

*— வளர்மதி*

அறிமுகக் குறிப்பு: ரணஜித் குஹாவின் இப்பேட்டி Biblio: November - December 2003 இதழில் வெளியாகியிருந்தது. இரண்டே கேள்விகள். முதலாவதை மட்டும் இங்கு தந்திருக்கிறேன். இப்பேட்டியை எனது கவனத்திற்குக் கொண்டு வந்தவர், சென்னை MIDS -இல் ஆய்வு மாணவராக இருக்கும் நண்பர் அறிவழகன். அவருக்கு நன்றி. முதல் வாசிப்பிலேயே இதை மொழிபெயர்க்கும் ஆசை எழுந்தது. சஞ்சய் சுப்பிரமணியம் போன்ற பொருளாதார வரலாற்றாசிரியர்களின் ஆணவம் மிகுந்த எழுத்துகளுக்குச் சரியான சவுக்கடி இதில் இருக்கிறது என்பதும் ஒரு ரணம்.

பத்ரி நாராயணன்:

80களின் தொடக்கத்திலிருந்து உங்கள் பெயரோடு இணைத்துப் பேசப்படுகிற ஒருவித வகையான வரலாறுகளை எழுதும்படி உங்களைத் தூண்டியது என்ன? வேறு வார்த்தைகளில் கேட்பதென்றால், 60களின் தொடக்கத்தில் நீங்கள் எழுதியவற்றுக்கும், Elementary Aspects of Peasant Insurgency in Colonial India நூலுக்கும் இடையில் ஏதேனும் விலகல் இருப்பதாக உணர்கிறீர்களா?

ரணஜித் குஹா:

முதலில் ஒன்றைத் தெள்ளத் தெளிவாகச் சொல்லிவிடுகிறேன். விளிம்புநிலை ஆய்வுகள் (Subaltern Studies) என்னுடைய பெயரோடு மட்டுமல்ல, இன்னும் ஏழு எட்டு நபர்களுடன் சம்பந்தப்பட்டவை. அதை முன்னெடுத்த பலருள் நானும் ஒருவன். அவ்வளவு மட்டுமே. என் வயதின் மதிப்பு காரணமாகவே அக்குழுவின் தலைமைப் பொறுப்பை நான் ஏற்க நேர்ந்தது. மற்றபடி, முழுக்க முழுக்க அது ஒரு கூட்டு முயற்சியே. இதை ஏதோ ஒரு தன்னடக்கமான குறிப்பு என்று எடுத்துக்கொண்டு விடாதீர்கள்.

இந்தியத் துணைக்கண்டத்தில் அரிசியைத் தின்று வாழும் பிராணிகளிடையே மிகப் பரவலாக இருக்கும் அந்தப் பொதுவான ஒழுகலாற்றுக்காக அறியப்படுபவன் அல்லன் நான்.

உண்மை என்னவென்றால், நமது அறிவாளர்களும் கல்வியாளர்களும் இளந்தலைமுறையைச் சேர்ந்தவர்களுடன் இணைந்து பணியாற்றுவதில் மோகம் கொள்கிற ஒரு குறிப்பிட்ட கட்டத்தை அடைந்து விட்டிருந்தார்கள். சுதந்திரத்திற்கு முன் பிறந்த ஒரு தலைமுறையும், சுதந்திரத்தையொட்டிப் பிறந்த ஒரு தலைமுறையினரும் - நள்ளிரவுக் குழந்தைகள் - தாம் வாழும் காலச் சூழல் குறித்து கொள்ளத்தொடங்கியிருந்த சில அவநம்பிக்கைகளையும் கவலைகளையும் பகிர்ந்துகொள்ளத் தொடங்கிய காலகட்டம் அது. அந்த வகையில், அடுத்தடுத்த இரு தலைமுறையினர் இணைந்து ஆற்றிய பணி அது. என்னுடைய தலைமுறையினரைப் பிரதிநிதித்துவப்படுத்துபவனாக நான் இருந்தேன். மற்றவர்கள் என்னைவிட 25 வயது இளையவர்கள்.

குழுவைச் சேர்ந்த மற்ற எல்லோருக்கும் இருந்ததைப் போல, விளிம்புநிலை ஆய்வுகளுக்குப் பங்களிப்பு செய்ய எனக்கும் ஒரு தனிப்பட்ட காரணம் - ஒரு அலைக்கழிப்பு இருந்தது. முதலாவது, என் தலைமுறையினரைச் சேர்ந்தவர்க்கே உரித்தானது. தேசிய விடுதலைப் போராட்டத்தின் இறுதிக் கட்டத்தில், ஒருவர் ஒன்று இடதுசாரியாகவோ அல்லது வலதுசாரியாகவோ இருந்தே ஆகவேண்டியிருந்த சூழலில் வளர்ந்தவர்கள் நாங்கள்.

நான் இடதுசாரியாக இருந்தேன். நாடு தழுவிய இயக்கத்தை வழிநடத்திய கம்யூனிஸ்ட்டுகளோடு இணைந்து செயலூக்கமாகப் பணியாற்றினேன். என்றாலும், இந்த இரு பிரிவுகளில் ஒருவர் எந்தப் பக்கத்திலிருந்தாலும், ஏகாதிபத்திய எதிர்ப்பாளர்கள் என்ற வகையில் நாங்கள் எல்லோரும் தேசியவாதிகளாகவே இருந்தோம். சுயராஜ்ஜியத்திற்கான போராட்டத்தின் அந்த இறுதிக் காலகட்டத்தில், வெகுமக்களின் அதிருப்திகள்

நாளுக்கு நாள் தீவிரப்பட்டுக் கொண்டிருந்த சூழலில், ஒரு ஒளிமயமான எதிர்காலம் உண்டு என்ற நம்பிக்கையாலும் நாங்கள் உத்வேகம் கொண்டிருந்தோம். ஆனால், சுதந்திரம் பெற்ற நாடு எப்படி இருக்கும் என்பதைப் பற்றி எவரும் எங்களுக்குத் தெளிவாக விளக்கியிருக்கவில்லை. ஒரு ஒளிமயமான எதிர்காலம் குறித்த உணர்ச்சிப்பூர்வமான நம்பிக்கை என்ற அளவிலேயே அது எங்களுக்கு இருந்தது. அந்த எதிர்காலம், நாங்கள் எதிர்பார்த்திருந்ததைப் போல விரியாமல் போனது எங்களுக்கு ஏமாற்றத்தைத் தந்தது.

இளைய தலைமுறையினர் அடைந்திருந்த ஏமாற்றத்திலிருந்து இது மாறுபட்டது. An Anthology of Subaltern Studies: A Reader என்ற தொகுப்பு நூலுக்கு எழுதியுள்ள அறிமுகவுரையில், மூத்த தலைமுறையினர் எதிர்கொண்ட ஏமாற்றமும் இளம் தலைமுறையினர் எதிர்கொண்ட ஏமாற்றமும் எப்படி வித்தியாசப்பட்டிருந்தது என்ற இந்தப் புள்ளியை ஓரளவிற்கு விளக்க முயன்றிருக்கிறேன். ஷாஹித் அமீன், ஞானேந்திர பாண்டே, இன்னும் மற்றவர்களால் பிரதிநிதித்துவம் பெற்ற, என்னோடு இணைந்து பணியாற்றிய இளம் தலைமுறையினருக்கு என்ன எதிர்பார்ப்பது என்றே தெரிந்திருக்கவில்லை. ஆனாலும் அவர்கள் மிக அதிகமாக எதிர்பார்த்திருந்தார்கள். இதனாலேயே இந்த இளம் தலைமுறையினர் ஏமாற்றமடைந்திருந்தார்கள். இந்தத் தலைமுறையைப் பற்றியிருந்த நெருப்பு வேறுவிதமானது. இந்தக் காரணிகள் சேர்ந்து உருவாக்கிய ஒரு பொதுவான அவநம்பிக்கை மிகுந்தவொரு சூழலில் எனது மனச்சாய்வுகள் ஒரு வரைவுரு பெற்றன.

நமது கடந்த காலத்தைக் கேள்விக்குட்படுத்த உந்திய, எனக்கேயுரித்தான அறிவுத்திற வரலாறு ஒன்றும் இருந்தது. நமது கடந்த காலத்தின் மையப் பிரச்சினையாக இருப்பது தேசியம். தேசியப் பிரச்சினை குறித்து ஒரு வார்த்தைகூட எழுதாமலேயே அது குறித்து நான் தொடர்ச்சியாக ஆய்ந்துகொண்டிருந்தேன். 1963ஆம் ஆண்டு வாக்கில் சிகாகோவிலிருந்து திரும்பி வந்து, மதிப்பிற்குரிய பொருளாதார

வரலாற்றாசிரியனாகப் பெயர் ஈட்டியிருந்த நேரம், என் சிந்தை தடம் மாறத் தொடங்கியது. பொருளாதார வரலாறு எனக்கு மேலும் மேலும் சுவாரசியமற்றதாகத் தெரியத் தொடங்கியது. அதற்கு இரண்டு காரணங்கள் இருந்தன. ஒன்று, அப்போது இந்தியாவிலிருந்த புலமையாளர்கள் - வெளிப்படையாகச் சொல்வதென்றால் என்னையும் சேர்த்து - மேற்கொண்டிருந்த பொருளாதார வரலாறு எழுதும் முறை - சில நபர்களைச் சந்தித்தல், தரவுகளைச் சேர்த்தல், இன்னபிற - மிகுந்த மேலோட்டமாக ஆதாரத் தரவுகளை ஒழுங்கு செய்யும் முறையாக எனக்குத் தோன்றியது. இந்த வகையான வரலாறு எழுதும் முறையின் மீது கொண்ட அதிருப்தி, அது மிகவும் வசதியாக வரலாறு எழுதும் ஒரு முறை என்பதை எனக்கு ஓரளவிற்கு உணர்த்தியது என்று சொல்லலாம். அதைவிடவும் சற்றே சிக்கலான, அறிவுத்துறை வரலாறு எழுதுதலை நோக்கித் திரும்பினேன்.

பொருளாதார வரலாறு குறித்த அதிருப்தி என்னுள் வளர்ந்ததற்கு இன்னொரு காரணமும் இருந்தது. ஒரு பொருளாதார வரலாற்றாசிரியன் தனது துறை சார்ந்து, ஒரு குறிப்பிடத்தகுந்த அளவு நிபுணத்துவம் பெற்று எழுதும்போதே அது அர்த்தமுள்ளதாக அமைகிறது என்பதையும் உணரத் தொடங்கினேன். வேறு வார்த்தைகளில் சொல்வதென்றால், அவர் ஒரு ஆரோக்கியமான பொருளில் கருத்தியலை உருவாக்கிக் கொண்டிருக்கவேண்டும். அதோடு கூட, புள்ளிவிவரவியல் சார்ந்த நுட்பங்கள், அத்துறை சார்ந்த கருவிகள் குறித்தும் போதிய அறிவு கொண்டிருக்கவேண்டும். அக்காலத்தில் பெயர் பெற்றிருந்த சிறந்த இளம் பொருளியல்வாதிகள் பலரை, அமர்த்தியா சென் உட்பட, அப்போது நான் நன்கு அறிந்திருந்தேன். இந்தப் புள்ளிவிவர இயலாளர்களுடன் பல மணிநேரங்கள் அடிக்கடி செலவழித்தும் இருக்கிறேன். ஆனால், அவர்களுடைய துறை சார்ந்த உரையாடல்களால் பெரிய தாக்கம் எதற்கும் ஆளானதில்லை. அவை மிகுந்த சலிப்பூட்டுபவையாகவும் தொழில் நுணுக்கம் மிக்கவையாகவுமே பட்டன. அமர்த்தியா சென் போன்ற புலமையாளர்கள் பின்னாட்களில், பொருளியல் கொள்கைகளைத் தத்துவார்த்த அடிப்படைகளோடு இணைக்க முயன்றது ஒரு நல்ல விஷயம். ஆனால், நான்

பேசிக்கொண்டிருப்பது 50களின் இறுதிகள், 60களின் தொடக்கத்தில் நிலவிய சூழலைப் பற்றி.

எது எப்படியிருந்தாலும், எனது உளச்சாய்வு காரணமாகவோ அல்லது அப்போது வழக்கிலிருந்த இந்தியப் பொருளாதார வரலாறு எழுதும் முறைகளின் மேலோட்டமான தன்மை காரணமாகவோ, ஏதோவொரு காரணத்தால், இத்துறையிலிருந்து விலகத் தொடங்கி, இலக்கியத்தின்பால் மேன்மேலும் ஈர்ப்பிற்கு உள்ளானேன்.

ஒரு அறிவுஜீவி என்ற வகையில், என் உருவாக்கத்தில், இலக்கியம் எப்போதும் ஒரு தனிச்சிறப்பான இடத்தை வகித்து வந்திருக்கிறது. பல்வேறு காரணங்கள் - சூழல்களால், குழந்தைப் பருவத்திலேயே அது என் மீது தீர்மானகரமான தாக்கத்தை விளைவித்திருக்கிறது. இன்று வரையிலும் அது தொடர்ந்துகொண்டிருக்கிறது. என்னை விமர்சிப்பவர்களில் பலர், இலக்கியத்தின் ஈர்ப்பைப் பொருட்படுத்தாதவர்களாக இருக்கக்கூடும். அதனாலேயே அவர்கள் என்னுடைய எழுத்துகள் சற்றே இலக்கியத் தன்மை கூடியதாகவும், வெறும் பிரதியாக மட்டுமே இருப்பதாகவும் குறைபட்டுக் கொள்கிறார்கள். அவர்கள் என்னை மன்னிக்க வேண்டுகிறேன். ஒரு அறிவுஜீவியாக வளர்ந்துவிட்ட என்னுள் உள்ள சிறுவன் இன்னமும் பெருமளவிற்குக் கவிதையினாலேயே உற்சாகம் பெற்று வருகிறான்.

ஒரு காலத்தில் Indian Economic History Review இதழின் ஆசிரியர் குழுவிலிருந்தவன் கடைசியில் பொருளாதார வரலாற்றுடனான உறவையே முறித்துக் கொண்டேன். இந்தியத் தேசியத்தோடு தொடர்புடைய குறிப்பான ஒரு பிரச்சினையின்பால் எனது கவனம் மேலும் மேலும் குவியத் தொடங்கியது. குறிப்பாக, மகாத்மா காந்தியின் மையப் பாத்திரம். 1963ஆம் ஆண்டின் கோடை தொடங்கி, 1970ஆம் ஆண்டி இறுதிவரை, அதற்கு மேலும் பல வருடங்கள், இந்தியத் தேசியம் குறித்து தொடர்ச்சியாக வாசித்து வந்தேன். அதனிலும் முதன்மையாக, மகாத்மா காந்தியின் கருத்துகளை, அவரது வாழ்க்கை நெறியைப் பயின்று வந்தேன். குஜராத்தின் சில

பகுதிகளில் கள ஆய்வு செய்தேன். கேரா ஆவணக்காப்பகத்தில் பழியாய்க் கிடந்திருக்கிறேன். 1970 வாக்கில், காந்தி குறித்த பல்தொகுதி நூலொன்றை எழுதத் தயாராகும் அளவிற்கு அந்த ஆர்வம் தொடர்ந்து இருந்தது. மகாத்மா காந்தி குறித்து ஆறு தொகுதிகள் அடங்கிய நூலொன்றை எழுத, பதிப்பாளர் ஒருவருடன் ஒப்பந்தம் ஒன்றுகூடக் கையெழுத்தானது. அந்நூலை நான் எழுதாமலேயே போனது வேறு விஷயம். ஆனால், ஒரு பத்து ஆண்டுகளுக்கும் மேலாக, தேசியப் பிரச்சினை குறித்து தொடர்ச்சியாகப் பயின்று வந்ததனாலேயே, விளிம்புநிலை ஆய்வுகள் குறித்த சட்டகமொன்று என் மனதில் உருவானது என்பதை இங்குக் குறிப்பிட விரும்புகிறேன்.

என் மனதில் எழுந்த இன்னொரு கேள்வி, காந்திக்கும் தேசியம் குறித்த கருத்துகளுக்கும் இடையிலான இடைவெளி, குறிப்பாக, அகிம்சை என்ற கருத்தாக்கத்தை மையமாகக் கொண்டிருந்த கருத்துகளுக்கும் காந்திய வழியிலான அணி திரட்டல்களுக்கும் இடையிலானது. அவை அனைத்தும் தெள்ளத் தெளிவாக இருப்பதைக் குறித்துக்கொண்ட அதே நேரம், சற்றே தெளிவில்லாத ஒரு கேள்வியையும் நான் எழுப்பிப் பார்த்தேன். அந்தக் கேள்வி: காங்கிரஸ் கட்சியால் முன்னெடுக்கப்பட்ட இயக்கங்களிலும், ஏன் மகாத்மா காந்தியே நேரடியாகத் தலைமை ஏற்ற இயக்கங்களிலும்கூட வன்முறையற்ற வழிகளில் மக்கள் பங்குபெற்றது ஒருபுறமிருக்க, தேசம் தழுவிய அளவில் திரட்சி கொண்ட ஒவ்வொரு பெரும் இயக்கத்திலும், சில சமயங்களில் உள்ளூரளவிலான இயக்கங்களிலும்கூட, மகாத்மா காந்தியால் வழிநடத்தப் பெற்ற காங்கிரஸ் தலைமை, ஒவ்வொரு முறையும் இறுதியில் அந்த இயக்கத்தையே நிறுத்திவிடுமளவிற்கு வெகு மக்களின் வன்முறையில் முடிந்துவிடுவது மீண்டும் மீண்டும் நிகழ்ந்தது எதனால்? சௌரி சௌரா ஒரு மிகச்சிறந்த எடுத்துக்காட்டு. ஒத்துழையாமை இயக்கம், சட்ட மறுப்பு இயக்கம் இரண்டிலுமே இது போன்ற சம்பவங்கள் பல உண்டு.

மிக நீண்ட காலமாக இந்தக் கேள்வி என்னை அலைக்கழித்துக் கொண்டிருந்தது. என்ன நிகழ்கிறதென்றால், பல சமயங்களில் ஒரு பிரச்சினை குறித்து நீங்கள் ஆழமாக ஆய்வு செய்துகொண்டிருக்கும்போது, அப்பிரச்சினை

குறித்து தரவு ரீதியாக ஒரு நிறைவை அடைந்துவிட்டதாக ஒரு கட்டத்தில் உணரத் தொடங்குவீர்கள். அந்நிறைவின் விளைவாக அப்பிரச்சினை குறித்து அதுவரையில் யாரும் எழுப்பியிராத கேள்விகளை எழுப்பத் தொடங்குவீர்கள். ஆனால், அவற்றைத் தெளிவாக எழுப்பிப் பார்ப்பதேகூட உங்களுக்கு நழுவிச் சென்று கொண்டேயிருக்கும். (...) அலைக்கழிப்பு மிகுந்த அந்த நிலைமையில், அக்கேள்விகளுக்கெல்லாம் அடிப்படையான, அதுவரையில் ஆழ்ந்து அடங்கி அமைதியாகக் கிடந்த கேள்வியொன்றை உயிர்ப்பித்து மேலெழச் செய்யும் ஏதோவொன்று - உள்ளுக்குள் ஆழ்ந்து பொதிந்து கிடந்த ஒரு அனுபவமோ அல்லது புற உலகிலிருந்து கிட்டும் ஒரு அனுபவமோ - நிகழவேண்டும்.

என் மனதில் ஆழ்ந்து கிடந்த அந்தக் கேள்விகளை உயிர்ப்பித்து செயலூக்கம் பெறச் செய்தது, இரு நிகழ்வுகளோடு தொடர்புடைய ஒரு அனுபவம். ஒன்று, சீனாவின் பண்பாட்டுப் புரட்சி. மற்றது, தேசிய அளவில், நக்சல்பாரி இயக்கம். முன்னமே குறிப்பிட்டது போல, இந்தியக் கம்யூனிஸ்டு கட்சியின் செயலூக்கமான உறுப்பினராக நான் இருந்து வந்தேன். பிறகு, ஹங்கேரி மீதான ரசிய ஆக்கிரமிப்பை அது கண்மூடித்தனமாக ஆதரித்ததை எதிர்த்து வெளியேறினேன். ரசியாவின் ஏகாதிபத்திய நோக்கங்களை அவ்வாக்கிரமிப்பு காட்டுகிறது என்று நினைத்தேன். ஒரு கம்யூனிஸ்டு என்ற வகையிலும், ஒரு ஏகாதிபத்திய எதிர்ப்பாளன் என்ற வகையிலும் அதை என்னால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை.

அதன் பிறகு, இடதுசாரிகளிடையே வியட்நாம் போர் எதிர்ப்பு இயக்கம் உருவான காலம் வரையிலும் - 1968 பாரீஸ் மாணவர்கள் - இளைஞர்களின் எழுச்சி வரையிலும் ஒரு முழு காலகட்டம், என் இயல்பிற்கு மாறாக, நானே வலிந்து விதித்துக்கொண்ட, அரசியல் குறித்த ஒரு பாராமுகமான நோக்கை வளர்த்துக்கொண்டேன். இன்னும் பல கேள்விகளும் எனது இந்தப் போக்கை உறுதி செய்பவையாக அமைந்தன. கம்யூனிசமே எதற்கு என்ற கேள்வி இதில் சாதாரணமான ஒன்றல்ல. ஆனால், எல்லாவற்றுக்கும் மேலாக, ரசிய மார்க்சியமும் இந்திய மார்க்சியமும்

எதற்காக நின்றனவோ அவற்றிலிருந்து மாறுபட்டு மார்க்சியத்தை வாசிப்பது - அது சாத்தியமென்றால் எப்படி என்ற கேள்வி முன்னின்றது.

இந்தியக் கம்யூனிஸ்டு கட்சியின் நடைமுறையைப் பார்த்த பிறகு, இந்திய மார்க்சியத்தால் ஆக்கப்பூர்வமாக எதையும் செய்யமுடியும் என்பதில் எனக்கு மிகத் தீவிரமான சந்தேகம் வந்துவிட்டிருந்தது. காந்தியின் அர்ப்பணிப்புணர்வோடு ஒப்பிடத்தக்க அளவிற்குச் சிறந்த அர்ப்பணிப்புணர்வுள்ள அரசியல் பணியாளர்களின் குழுக்களால் வழி நடத்தப்பட்ட, கொள்கைப்பிடிப்புள்ள தொழிலாளர்கள் பலர் இருந்ததைப் பல சந்தர்ப்பங்களில் பார்த்திருக்கிறேன். ஆனால் தலைமையோ, கோட்பாட்டு ரீதியில் காலாவதியாகிப் போயும், மிக மோசமான அளவிற்கு நுனிப்புல் மேய்வதாகவும் இருந்தது. இதனால், தலைமையளவிலோ அல்லது இடைப்பட்ட நிலையிலோ மிகச் சிறந்த மூளைகள் இருக்கவேயில்லை என்றில்லை. என்றாலும் கட்சி, சோவியத் கம்யூனிஸ்டு கட்சியையும், அதன் இடையீட்டாளராகச் செயல்பட்ட பிரிட்டிஷ் கம்யூனிஸ்டு கட்சியையும் ஏதோவொரு வகையில் சார்ந்தே இருந்தது. இவையனைத்தும் இந்தியக் கம்யூனிச இயக்கம் ஒரு தேசிய இயக்கமாக வளர்ச்சியுறுவதற்குத் தடையாக இருந்தன. மகாத்மா காந்தியால் முடிந்ததைப் போல, பெருமளவில் மக்கள் திரளினரைத் திரட்டுவதை எம்மால் சாதிக்கவே முடியாதிருந்தது. தொழிலாளர் வர்க்கங்களைத் திரட்டுவது எங்களுக்கு என்றுமே வாய்க்கவில்லை. அதே சமயம், தொழிலாளர் வர்க்கத்தின் பெரும் பகுதி, கட்சியையே மறந்து கொண்டிருந்தது. (...)

இதனால், எல்லாவற்றையும் மறுபரிசீலனை செய்யவேண்டிய கட்டாயத்திற்கு நான் ஆளானேன். நடைமுறை அரசியலிலிருந்து விலகி இருந்தேன். ஆனால், சிந்தனையளவில் அரசியலோடு எப்போதும் தொடர்புகொண்டே இருந்தேன்.

பண்பாட்டுப் புரட்சி குறித்தும் அசைபோட்டுக் கொண்டிருந்தேன். மாவோவின் மார்க்சியச் சிந்தனையில் ஏதோவொன்று சரியாக

இருப்பதாகப்பட்டது. நக்சல்பாரி இயக்கத்தின் தீவிர எழுச்சி இதை உறுதி செய்தது. பெரும்பாலான காலம் நான் இந்தியாவில் இருக்கவில்லை என்றபோதிலும், அந்த இயக்கம் குறித்த செய்திகள், பல நபர்கள் வழியாக எனக்குக் கிடைத்துக் கொண்டிருந்தன. எனது ஆர்வமும் வளர்ந்து கொண்டிருந்தது. 1970-71 இல் சஸ்ஸெக்ஸ் பல்கலைக்கழகத்தில் பணியாற்றும் பொருட்டு நான் இங்கிலாந்து திரும்பினேன். காந்தி குறித்த அந்த நூலை எழுதி முடிக்கத் தீவிரமான ஆராய்ச்சியில் மூழ்கிவிட்டிருந்தேன். நக்சல்பாரி இயக்கம் கடுமையாக ஒடுக்கப்பட்டு, சாரு மஜீம்தாரின் தலைமையில் கட்சி தலைமறைவு பாதையில் சற்றே பின்னோக்கி அடிவைத்த நேரம் அது. வெகு சீக்கிரமே அவரும் கைது செய்யப்பட்டுக் கொல்லப்பட்டார். இயக்கம் சிதறுண்டுப் போனது. உள்முகமாகத் திரும்பி, ஆழ்ந்த சுயபரிசீலனையில் இறங்கவேண்டிய நேரம் அது. சரியாக அந்தத் தருணத்தில், இந்தியத் தேசியம் குறித்து என்னுள் அழுந்திக் கிடந்த கேள்விகளெல்லாம் மேலெழுந்து வந்து, தோல்வியைத் தழுவியிருந்த நக்சல் இயக்க அனுபவ வெளிச்சத்தில் நின்றன.

இப்போது, இன்னொரு புதிய கேள்வியும் சேர்ந்துகொண்டது. எவ்விதமான முன் தயாரிப்புகளும் இல்லாத ஒரு இயக்கம் - எந்தவொரு கோட்பாட்டு அடிப்படையும் இல்லாதிருந்த, கிட்டத்தட்ட அரைவேக்காட்டுத்தனமான, சிறுபிள்ளைத்தனமான அதன் அரசியல் நடைமுறை, அரசு எந்திரத்தின் முன் அதன் நிர்க்கதியற்ற நிலை - எப்படி நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் இருந்த இளைஞர்களைப் பற்றியிழுத்து அணி திரட்ட முடிந்தது? அதிலும், அது தோல்வியைத் தழுவிய பிறகும்கூட, அந்தக் கற்பனை எப்படித் தொடர்ந்து உயிர்பெற்றிருக்க முடிந்தது? இந்தக் கேள்வி, அகிம்சை என்ற கருத்தாக்கத்தின் நிழலிலிருந்த தேசிய இயக்கத்தின் வெகுமக்கள் அணிதிரட்டல் குறித்த கேள்வியோடு இணைந்துகொண்டது. காந்தியின் இயக்கத்தை நினைவுபடுத்திய ஏதோவொன்று, நக்சல் இயக்கத்திலும் இருப்பதாகக் கண்டேன். இரண்டு இயக்கங்களுமே விவசாயிகளைப் பெருமளவில் அணிதிரட்ட முயன்றவை. நக்சல் இயக்கம் வன்முறை வழியில் முழு முற்றான பற்றுதல் கொண்டிருந்தது என்றால்,

காந்தியின் இயக்கமோ வன்முறையற்ற வழியில் முழுமுற்றான பற்றுதல் கொண்டிருந்தது. என்றாலும் இரண்டிற்குமிடையில் சில பொதுமையான பண்புகள் இருப்பதாகவும் உணர்ந்தேன். விவசாய அணிதிரட்டல், அதிலும் குறிப்பாக, விவசாயிகளின் வன்முறைக் கலகங்கள் குறித்துப் பயிலவேண்டும் என்ற ஆர்வம் என்னுள் எழுந்தது. சஸ்ஸெக்சிற்குத் திரும்பி, அதற்கு முன்பாக என்னை ஆக்கிரமித்திருந்த காந்தி மற்றும் பங்கிம் மீதான ஆய்வுகளை ஒதுக்கிவைத்துவிட்டு, அதற்குள் மூழ்கினேன். இந்தியாவில் விவசாயிகளின் வன்முறைக் கலகங்கள் என்ற நிகழ்வைப் புரிந்துகொள்ள விரும்பினேன். வேறு ஒரு நோக்கத்தின் பொருட்டு நான் ஏற்கனவே செய்து வைத்திருந்த ஒரு சிறு முன் தயாரிப்பு இம்முயற்சியில் எனக்குப் பயனுள்ளதாக இருந்தது.

1963இல் பொருளாதார வரலாறு மீது மட்டுமல்ல, கல்விப் புலஞ்சார்ந்த ஒரு துறையாக மட்டுமே இருந்த வரலாற்றெழுதியல் மீதும், அது தொடர்பான கல்விப்புலஞ்சார்ந்த விவாதங்களின் மீதும்கூட நம்பிக்கை இழந்திருந்தேன். வரலாற்றெழுதியலின் பொதுவான போக்கே, மொத்தத்தில் மிகவும் மேலோட்டமானதாக இருந்ததாக உணர்ந்தேன். இந்தியர்கள் அதை மிக மேலோட்டமாகப் பின்பற்றினார்களென்றால், பிரிட்டிஷ் வரலாறு எழுதுதல், அந்த 'உள்ளூர் அனுபவம்' என்பதாகச் சொல்லப்பட்ட, ஒரு வகையான வட்டாரத் திருச்சபை மாதிரியிலான வரலாற்றை எழுதுவதோடு திருப்தி கொண்டுவிடுகிற ஒரு புள்ளியில் நின்றுவிட்டிருந்தது. அந்த 'உள்ளூர் அனுபவமோ' ஒரு முனைவர் பட்டத்தைப் பெறுவதற்கு எழுதப் பயன்படும் என்பதற்கு மேலாக, அதைப் பற்றி எழுதுவதற்கு எந்தத் தேவையுமில்லை என்ற அளவிலேயே அணுகப்பட்டது. உள்ளூரிலும் உள்ளூராக, எந்த வகையிலும், எந்த முக்கியத்துவமும் அற்ற ஒன்றாகவே இருந்தது.

நான் சஸ்ஸெக்சிற்குச் சென்றது, அடிப்படையில் இலக்கியம், தத்துவம் இவற்றின் பாலான எனது ஆர்வங்களை வளர்த்துக் கொள்ளவும், இன்னும் இரண்டு மூன்று தீவிரத் துறைகளில் பயிற்சி கொள்ளவுமே. அவற்றில் ஒன்று, அப்போது மிகவும் வலுவான ஒரு துறையாக இருந்த

சமூக மானுடவியல். அங்கு, எனது வளர்ச்சியில் மாபெரும் செல்வாக்கு செலுத்திய ஒரு சமூக மானுடவியலாளரை - க்ளாட் லெவி ஸ்ட்ராஸை நேருக்கு நேர் எதிர்கொண்டேன். லெவி ஸ்ட்ராஸ் கருத்தமைவுகள் குறித்து, அதிலும் குறிப்பாக, புராணக் கதை (myth) குறித்து தீவிரமான கேள்விகளை எழுப்பியவர். நான் அவரை மிக மிகத் தீவிரமாக, ஒரு பள்ளிக்கூடச் சிறுவனைப் போல வாசிக்க ஆரம்பித்தேன். (...)

முதலில், புராணக்கதை குறித்த பயில்வு என்ற வடிவில், ஒரு கற்பனையான அம்சத்தைக் கொண்டிருந்த சமூக விஞ்ஞானம் அது என்று நினைத்தேன். ஆனால், தொடர்ந்த வாசிப்பில், லெவி ஸ்ட்ராஸ் புராணக்கதைகளை மொழியின் ஊடாக அணுகுவதை உணரத் தொடங்கினேன். மொழி குறித்தான இந்தப் பிரச்சினையை, கடந்த நூற்றாண்டின் மிகவும் ஆக்கப்பூர்வமான சிந்தனையாளர்களுள் ஒருவரான ரோமன் ஜேக்கப்சன் என்பாருடைய சிந்தனைகளின் வெளிச்சத்தில், அவர் அறிவியல்பூர்வமாகப் பயின்றிருக்கிறார். ஜேக்கப்சனுடைய கருத்தமைவுகளை மானுடவியலோடு இணைக்க லெவி ஸ்ட்ராஸ் முயன்றிருக்கிறார். மொழியியல் குறித்த ஆய்வை ஜேக்கப்சன் அமைப்பியல்வாத மொழியியலாக வளர்த்திருக்கிறார். நான் ஜேக்கப்சனிலிருந்து குறியியலை நோக்கித் திரும்பி, விமர்சகரும் அமைப்பியல்வாதியுமான ரொலாண்ட் பார்த்தின் எழுத்துக்களைப் பயில ஆரம்பித்தேன். இப்படியாக, இந்தியா மற்றும் பிரிட்டன் இருபுறமும் நிலவிவந்த, அறிவு வறட்சி மிகுந்த வரலாற்றெழுத்தியலை எனக்கேயுரிய தனித்துவமான முறையில் மறுவரைவு செய்யும் முயற்சியில் இறங்க என்னைத் தயாரித்துக் கொண்டேன். (...)

இப்போது இரண்டு கேள்விகளை எதிர்கொள்ள நான் முழுத் தயாரிப்போடு இருந்தேன். ஒன்று, இந்தியத் தேசியம் என்ற புதிரான நிகழ்விலிருந்து எழுந்தது. மற்றது, நக்சல் இயக்க அனுபவத்திலிருந்து எழுந்தது. அதோடு, வெகுமக்கள் அணிதிரட்டல் என்ற பிரச்சினையை எப்படி அணுகுவது என்ற கேள்வியைச் சந்திக்கவும் நான் தயாராக இருந்தேன்.

நான் பின்பற்றிய முறைகளைப் பற்றிச் சுருக்கமாகச் சொல்லிவிடுகிறேன்: விவசாயக் கலகங்கள் குறித்த சம்பவங்களைக் குறிப்புகளாகச் சேகரிக்க ஆரம்பித்தேன். ஒரு வகையான 'இருக்கை' மானுடவியலாளனாக ஆனேன். அப்படி ஒருவர் உண்மையில் இருக்கமுடியாது என்பதையும் சொல்லிவிடுகிறேன். கள ஆய்வுகள் பற்றி ஒரு மிகச்சிறந்த, முதல்நிலை மானுடவியலாளராக இருந்த என் மனைவியிடமிருந்து நிறையக் கற்றுக்கொண்டேன். அவர் ஆப்ரிக்காவில், அதிலும் குறிப்பாக மேற்கு ஆப்ரிக்காவில் தாமியன் மக்களிடையே பணியாற்றியவர். மானுடவியலாளர்கள் களத்தில் எப்படிப் பணியாற்றுவார்கள் என்று அவரிடம் கேட்டுத் தெரிந்துகொண்டேன். ஒரு வகையான மெய்மையான (virtual) களப்பணியை நானே உருவாக்கிக் கொண்டேன். என்ன செய்தேனென்றால், விவசாயக் கலகம் என்று சொல்லத்தக்க சம்பவங்கள், அவை ஆவணக் காப்பகத்தில் பதிவு செய்யப்பட்டவையோ அல்லது விவசாயப் போராட்டங்கள் குறித்த நூல்கள், சமூக மானுடவியல் குறித்து என் கவனத்திற்கு வந்த நூல்கள் என்று எதில் குறிக்கப்பெற்றிருந்தாலும், அனைத்தையும் ஒரு பட்டியலாகத் தயாரித்தேன்.

அத்தகைய சில ஆயிரம் சம்பவங்களைச் சேகரித்து, குறிப்புகள் எழுதி, பல வருடங்கள் செலவழித்து அவற்றை உருவாக்கி வந்தேன். என் மனைவி நான் என்ன செய்து கொண்டிருக்கிறேன் என்று அடிக்கடி கேட்பார். நீ களத்தில் என்ன செய்கிறாயோ சரியாக அதையே நானும் செய்து கொண்டிருக்கிறேன் என்று பதில் சொல்வேன். நீ ஒரு நிகழ்வு குறித்த சம்பவங்களைச் சேகரிப்பாய். அதிலிருந்து ஒரு முடிவுக்கு, பொதுமைப்படுத்தலுக்கு வருவாய். அந்த பொதுமைப்படுத்தலிலிருந்து ஒரு கோட்பாட்டை உருவாக்குவாய். நானும் அதைத்தான் செய்துகொண்டிருக்கிறேன். வன்முறையைத் தூண்டுவது எது என்பதை நான் தெரிந்துகொள்ளவேண்டும். ஒரு விவசாயி நிலச்சுவாந்தாரின் முற்றத்தைக் கடந்து செல்லும்போது குடையை மடக்காமல் சென்றானேயானால், அது அவமதிப்பாகக் கருதப்படுகிறது. நான் அதைக் குறித்துக் கொள்கிறேன். அல்லது, தனது வீட்டு வாசலில் உட்கார்ந்திருக்கும் தாழ்த்தப்பட்ட சாதியைச்

சேர்ந்த ஒருவர், நிலச்சுவாந்தார் வந்ததும் எழுந்திருக்கச் சொல்லப்பட்டால் அதுவும் ஒரு அவமதிப்பாகிறது. அதனால், நான் அதையும் குறித்துக்கொள்கிறேன். இதுவும்கூட ஒருவிதமான வன்முறை என்பதால், ஒரு அவமதிப்பு எப்படி, எப்போது வன்முறையாக மாறுகிறது என்பதை இப்போது என்னால் கூர்ந்து கவனிக்க முடிகிறது. வன்முறை குறித்த மொத்த கருத்தாக்கமும் இப்படியான பொருண்மையான கள ஆய்விலிருந்து எழுந்தது. கள அனுபவத்தில் நன்கு வேர்கொண்ட கோட்பாட்டாளன் நான் என்பதைப் பலரும் உணர்ந்துகொள்ள வேண்டும் என்று நினைக்கிறேன். களத்தில் ஊன்றிய நிகழ்வையே நான் நம்புகிறேன். கருதுகோள்களைப் புனைவதிலும், அவற்றிலிருந்து ஒரு கோட்பாட்டை உருவாக்குவதையும் நான் நம்புகிறேன்.

Elementary Aspects of Peasant Insurgency in Colonial India என்ற எனது நூலின் அடிப்படைகள் இவைதான். மானுடவியல் நூல்கள், ஆவணக்காப்பக அறிக்கைகளிலிருந்து மட்டுமே அதை நான் எழுதிவிடவில்லை. சாத்திரங்களில் ஆதிக்கம் குறித்த மொத்தக் கருத்தாக்கமும் எப்படிக் குறிக்கப் (coded) பெற்றுள்ளன என்பதை அந்நூலில் கண்கூடாக விளக்கிக் காட்டியிருக்கிறேன். இந்தியப் பண்பாட்டில், மதத்திலேயே ஆதிக்கம் எவ்வாறு குறிக்கப் பெற்றுள்ளது என்பதைக் காட்ட, தர்மசாத்திரங்களையும் மனுவையும் பயின்று, 'பிதா', 'புத்ரன்', 'குரு', 'சிஷ்யன்'' 'ராஜன்', 'பிரஜை', 'ஜமீன்தார்', 'குடியானவன்', ஆகிய உறவுகளுக்கிடையிலான பிணைப்புகளை உருவாக்கினேன். புத்தகங்களை நான் களப்பணியாக மாற்றுவது இப்படித்தான். (...)

பல்வேறு காலகட்டங்களிலும் பல்வேறு இடங்களிலும் திரும்பத் திரும்ப நிகழ்ந்துகொண்டிருக்கும் ஒன்று என்ற வகையில், நமது துணைக்கண்டத்தின் அடிப்படையான, வகைமாதிரியான வெகுமக்கள் அணிதிரட்டல் வடிவம் விவசாய இயக்கம்தான். காந்தி எதிர்கொள்ள வேண்டியிருந்த இயக்கமும் இதுவாகத்தான் இருந்தது என்பதை நான் கண்டுகொண்டேன். இந்த வகைமாதிரியான அணிதிரட்டல் வடிவத்தில், அதிகார வரைவுகளைப் பல மட்டங்களில் மீறுவதன் மூலம் வன்முறைக்கு

இட்டுச் செல்லும் அடிப்படைக் காரணிகள் பல இருக்கின்றன. காந்தியின் இயக்கங்களில் நிகழ்ந்தது சரியாக இதுதான். அந்தப் புள்ளிகளில் காந்தியின் அகிம்சையால் அவற்றைக் கட்டுப்படுத்த முடியாமல் போனதும், அவரே இயக்கத்தைத் திரும்பப் பெற்றுக்கொள்ளும் நிர்ப்பந்தத்திற்கும் ஆளானார். புரட்சிகர இயக்கங்கள், குறிப்பாக வெகுமக்கள் கலகங்கள் மீதான எனது ஆர்வம் வளர்ந்தது இப்படித்தான். இந்தப் பார்வையிலிருந்து, அந்த வரலாற்று அனுபவத்தை ஆய்வு செய்ய அப்போது வழக்கத்திலிருந்த வரலாறு எழுதும் முறைகளால் முடியாமல் இருந்தது.

என் நூலின் தனிச்சிறப்பு, எனது தனித் திறமையால் வந்ததல்ல. இந்திய அனுபவத்தின் தனித்துவமான தன்மையிலிருந்து எழுந்தது. ஒரு வரலாற்று ஆசிரியன் புதிதாக ஒன்றைச் சொல்லவேண்டும் என்று விரும்பினால், அவன் எந்த மக்கள் பிரிவினரின்பால் அக்கறை கொண்டுள்ளானோ அவர்களது தனித்துவமான அனுபவத்தை நேருக்குநேர் எதிர்கொள்ள முன்வரவேண்டும் என்று நான் நம்புகிறேன். ஆகையால், எந்த ஒரு வரலாற்றாசிரியனும் தான் வெளிப்படுத்தும் வரலாற்று அனுபவம் குறித்து பெருமிதம் அடையக்கூடாது. பணிவே கொள்ளவேண்டும். ஏனென்றால் அவனது பொருள்கோடல், அந்த அனுபவத்திலிருந்தே எழுகிறது. நமது தேசிய இயக்கம், நமது விவசாய இயக்கங்கள், நமது கலகங்களின் வடிவங்கள் அனைத்தும் நமக்கே உரித்தானவை. இந்தியப் பண்பாட்டிற்கே உரித்தானவை என்ற குறிப்பான பொருளில் இந்த வடிவங்கள் அனைத்தும் பண்பாட்டு ரீதியிலானவை என்றும் சொல்வேன்.

என்னைப் பொறுத்த அளவில், எனது நூல், இந்தியப் பண்பாடு குறித்த ஆய்விற்கு ஒரு பங்களிப்பு. நிலவும் வடிவத்திற்கு எதிராக, வழக்கத்திற்கு மாறாக, இந்தியா அகிம்சையை மட்டுமே குறிக்கும் ஒன்றல்ல என்பதைக் காட்ட அதில் முயன்றிருக்கிறேன். அதிகாரம் குறித்த பிரச்சினை வந்ததும், அது இம்சைக்காகவும் நிற்கும். அகிம்சை, தர்மம் இன்னும் இது போன்றவற்றோடு, இம்சையும் நமது பண்பாட்டின் ஒரு பகுதிதான். விவசாயக் கலகம் குறித்த எனது நூலை சில மேம்போக்கான விமர்சகர்கள், விவசாயக்

கலகங்கள் குறித்த வழக்கமான ஒரு நூல் என்றே அணுகியிருக்கிறார்கள். ஆனால், அந்நூல் இந்தியப் பண்பாடு குறித்தது. இந்தியப் பண்பாடு பிளவுண்ட பண்பாடு என்பதை அதில் காட்ட முயன்றிருக்கிறேன். காந்தி அதன் ஒரு பகுதி. ஒரு பெரும் பகுதி. ஆனால், அவரே அதன் முழுமையல்ல. அவர் முதன்மையானவரா என்பதேகூட கேள்விக்குரியதுதான்.

இதைப் புரிந்துகொள்ளும் அளவிற்கு நமது பண்பாடு இன்னும் முதிர்ச்சியடையவில்லை. ஆனால், என்றாவது ஒருநாள், தலித்துகளுக்கு எதிராக வன்முறைகள் நிகழ்வது, நிலவும் பண்பாட்டு விதிகளை மீறியதற்கான தண்டனையாகத்தான் என்பதைப் புரிந்துகொள்ளும். நமது நாட்டின் ஆகப் பெரிய வெகுமக்கள் இயக்கமான தேசப் பிரிவினை (பின் மதக் கலவரமாக உருமாற்றம் கொண்டது) அந்த நமது பண்பாட்டின் ஒரு பகுதியாக இருக்கும் இந்த ஆதி வன்முறைக்கு ஒரு சிறந்த ஆதாரம். அதனால்தான் காந்தியால்கூட அதைக் கட்டுப்படுத்த முடியவில்லை. தேசிய இயக்கமும், இந்தியத் தேசிய காங்கிரசும் நம்மிடையே பரவிவிட்ட பண்பாட்டு விதிகளின் தோல்விகளும் கூட. இந்தியாவின் இந்த மாபெரும் மக்கள் இயக்கம், வன்முறை நிறைந்திருந்தது. இனியும் அப்படித்தான் இருக்கும்.

இந்தப் பிரச்சினையில் நான் கவனத்தைக் குவித்திருந்த நேரம், அப்போது ஆய்வு மாணவர்களாக இருந்த ஞானேந்திர பாண்டே, டேவிட் ஹார்டிமேன், ஷாஹித் அமீன் இன்னும் மற்றவர்களுடன் தொடர்பு உண்டானது. எவருமே எனது மாணவர்கள் இல்லை. ஒவ்வொருவரும் தனித்தனியாக, வேறு வேறு தொடர்புகள் வழியாக வந்தவர்கள். ஞானேந்திர பாண்டேவும் ஷாஹித் அமீனும் ஆக்ஸ்ஃபோர்டில் மாணவர்களாக இருந்தார்கள். டேவிட் ஹார்டிமேன் என்னோடு பணியாற்றிய ஆண்டனி லோவே-யின் கீழ் ஆய்வு செய்துகொண்டிருந்தார். அவர்களது ஆய்வுகளை எழுதுவதில், சில புள்ளிகளைப் பற்றிக் கலந்தாலோசிக்கவே முதலில் வந்து போய்க்கொண்டிருந்தார்கள். அப்போது பரஸ்பர அறிமுகங்கள் நிகழ்ந்தன. அதன் பிறகே நாங்கள் சேர்ந்து பணியாற்றத் தொடங்கினோம். இந்தக் காலகட்டம் முழுக்க, புதுப்புது விஷயங்கள் வெளிவரத் துவங்கின. ஒரே

விஷயத்தைப் பல விதங்களில் வாசிக்க முடியும் என்பதை நாங்கள் உணரத் தலைப்பட்டோம். ஒரு சமயம், அவர்களில் ஒருவர், ஒரு நூலின் அத்தியாயம் ஒன்றைக் கொண்டு வந்தார். நான் சொன்னேன், இது ஒரு அற்புதமான நூல் என்பது உனக்குத் தெரியும். என்றாலும், இதை வேறு ஒரு நோக்கில் மீண்டும் ஒருமுறை வாசித்துப்பார். இன்னொரு பொருள்கோடலுக்கு வழி கிடைக்கும். இதுபோன்ற பயிற்சிகள் மூலமாகத்தான், ஆவணக் காப்பகம் தாராளமாகத் திறந்து கிடந்தாலும், அங்கு இருப்பவற்றை வாசிக்கும் நோக்குகளுக்கே பஞ்சமாக இருக்கிறது என்பதை நாங்கள் உணர்ந்து கொள்ளத் தொடங்கினோம்.

72இன் இறுதியோ அல்லது 77இன் துவக்கமோ, ஒரு மாற்று வரலாறு எழுதும் முறையை நோக்கி நாங்கள் நெருங்கிக் கொண்டிருப்பதாக உணரத் தொடங்கினோம். அச்சமயம், குறிப்பாக தேசியம் குறித்த பிரச்சினையில், கேம்பிரிட்ஜ் பள்ளியே ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருந்தது. புதுப் புது கோட்பாடுகள் அங்கிருந்து முளைத்துக்கொண்டே இருந்தன. எங்களுடைய நோக்கில் அந்தப் 'புதிய கோட்பாடுகளை' அணுகத் துவங்கியவுடனேயே அவற்றை அக்குவேறு ஆணிவேராகப் பிய்த்துப் போடத் துவங்கினோம். அவற்றைவிட வலுவான விளக்கம் எங்களிடம் இருந்தது. அது குறித்த தன்னுணர்வும் எங்களுக்கு இருந்தது.

1977இன் மார்ச் மாதமோ அல்லது ஏப்ரலோ, சஸ்ஸெக்சில் நான் வசித்து வந்த இடத்தில் நாங்கள் கூடியபோது, எங்களது பணி தொடர்பாக நான் உருவாக்கிய ஒரு பொது நோக்கைத் தொகுத்து ஒரு அறிக்கையாகத் தந்தேன். காலனிய இந்தியாவில் வரலாற்றெழுதியல் குறித்த சில அம்சங்களும் அதிலிருந்தது. அதை எப்படி வாசிக்கலாம் என்று ஒரு குறிப்பையும் அதோடு இணைத்திருந்தேன். அந்தக் குறிப்பே பிற்பாடு விளிம்புநிலை ஆய்வுகளின் துவக்க ஆவணமாக அமைந்தது. சிலர் அதை ஒரு கட்சி அறிக்கை என்று குறிப்பிடுகிறார்கள். ஆனால், அது எங்களது ஒரு வேலைத்திட்ட அறிக்கை மட்டுமே. முதல் தொகுதிக்கான விஷயங்கள் சேர்ந்ததும், இதழுக்கு என்ன பெயர் வைப்பது என்ற பிரச்சினை எழுந்தது.

இருவரது கடும் எதிர்ப்பு, மற்றும் இருவர் பாராமுகமாக இருந்தது, இவற்றை மீறி “விளிம்புநிலை ஆய்வுகள்” என்ற பெயரை நான் கிட்டத்தட்டத் திணித்தேன் என்றே சொல்லலாம். முழுக்க முழுக்க கோட்பாட்டு ரீதியான காரணங்களுக்காகவே அப்படிச் செய்தேன். வர்க்கம், சாதி உட்பட, ஆதிக்கம், அடங்கிப்போதல் என்ற மொத்த பிரச்சினையையுமே, இது வேறு எந்த வார்த்தையையும்விடத் தெளிவாக அணுகக்கூடியதாக இருந்தது. 1982 பிப்ரவரியிலிருந்து 1988 மார்ச் வரை நான் தொகுப்பாளராக இருந்த காலகட்டத்தில், ஆறு தடித்த தொகுதிகளைத் தந்தோம். ஒரு குழுவாகவும் அற்புதமாகச் செயல்பட்டோம். இதழை ஆக்ஸ்ஃபோர்ட் பல்கலைக்கழகம் வெளியிட்டது. ஒவ்வொருவரும் அவரவர் பணியை மிகத் தீவிரமாக எடுத்துக் கொண்டார்கள்.

கவிதாசரண், அக்டோபர் - டிசம்பர் 2004.

தொடர்பு: வளர்மதி (mathi2006@gmail.com)

## 24. வ.உ.சி.யும் இஸ்லாமியர்களும்

*— ரெங்கையா முருகன்*

வ.உ.சி. சுதேசி ஸ்டீம் நேவிகேஷன் கம்பெனி ஆரம்பிக்கும் போது பங்குதாரர்களாக ஆசியா கண்டத்தைச் சார்ந்த இந்தியா, இலங்கை, பர்மா, ஜப்பான் நாட்டைச் சார்ந்தவர்கள் ஆகியோர் பங்கு கொள்ளலாம். ஐரோப்பியர்களிடமிருந்து பங்குகள் பெற்றுக் கொள்ளப் படமாட்டாது என்று அறிவித்தார். எல்லா சமூகத்தாரையும் சுதேசி நேவிகேஷன் மூலம் இணைப்பதையும் தொலைநோக்குப் பார்வையுடன் சிந்தித்தார் வ.உ.சி. பாலவநத்தம் ஜமீன்தார் பாண்டித் துரைத் தேவர் தலைவராகவும், மற்றும் சுதேசி கம்பெனி பங்கில் 8000 பங்குகள்( 1 பங்கு ரூ. 25) 8000 X 25 = Rs. 2,00,000)வாங்கி சுதேசி கம்பெனிக்கு உயிரூட்டம் அளித்த ஹாஜி முகமது பக்கீர் சேட்& சன்ஸ் , கம்பெனியின் காரியதரிசியாகவும் இருந்துள்ளனர்.

வ.உ.சி. தனது சுயசரிதையில் பின்வருமாறு முகமது பக்கீர் சேட் குறித்துக் குறிப்பிடும் போது:

"பாக்கிய மிகுந்த பக்கிரி முகம்மதை
வாக்கின் வலியால் வசப்படச் செய்தி
யான் வணிகர் பலரையும் வருந்தி அவனிலம்
துணிவோடு சுதேசி நாவாய்ச் சங்க நன்மலர் கண்டேன்.

3.11.1906 இந்தியா இதழில் சுதேசி கப்பல் கம்பெனியின் டைரக்டர்கள் பட்டியலில் முதலாவதாக ஹாஜி பக்கீர் முகமது சேட் பெயர் இடம் பெறுகிறது.

29.12.1906 இந்தியா இதழில் இஸ்மாயில் ஹாஜி அப்துல் ரகுமான் சேட் பெயர் 14வது டைரக்டர்களில் இடம் பெற்றுள்ளது.

சுதேசி கப்பல் கம்பெனி முதலீட்டில் மொத்தத்தில் மூன்றில் ஒரு பங்கு இஸ்லாமியர்களின் பங்களிப்பாகும்.

1908 ல் வ.உ.சி.யை சிறைக்கு அனுப்பிய பிறகு சுதேசி கம்பெனி சரியத் தொடங்கியது. நட்டமடைந்து வரும் கம்பெனியை காப்பாற்ற, சரிவை மீட்க இந்தியா இதழ் சார்பாக தரும நிதி திரட்ட பாரதியார் முயற்சி செய்தார். அதில் தமிழக இஸ்லாமியர்களின் பங்களிப்பு ரூபாய் 180/- திரட்டப்பட்டது. இது பத்தில் ஒரு பங்கு இஸ்லாமியர்கள் அளித்தது.

வ.உ.சி. சிறை சென்றதும், நெல்லையில் நடைபெற்ற எழுச்சி போராட்டத்தில் வெள்ளையர்கள் துப்பாக்கிச் சூடு நடத்திய போது நான்கு நபர்கள் வீரமரணம் அடைந்தனர். அந்த நான்கு நபரில் ஒருவர் தியாகி முகமது யாசின்.

வ.உ.சி. வறுமைப் பட்ட இறுதிக் காலத்தில் உத்தமபாளையம் கோம்பை சார்ந்த உ.ம.சே. முஹைதீன் பிள்ளை சாஹிப் வ.உ.சி. எழுதிய நூல்களினை வாங்கி விற்றுக் கொடுத்து உதவி புரிந்துள்ளார். இதற்கு நன்றி தெரிவிக்கும் விதமாக வ.உ.சி. மடல் எழுதியுள்ளார். உத்தமபாளையத்தைச் சேர்ந்த கே.எம். அகமது மீரான், முஹைதீன் பிள்ளை வ.உ.சி.யுடன் மிக்க நேசம் கொண்டுள்ளவர்களாக அறியப்படுகிறது.

வ.உ.சி.க்கு மீண்டும் வாதாட சன்னத் வாங்கி கொடுத்த இஸ்லாமியப் பெருமகனார்:

சென்னை வாழ்வு வ.உ.சி.க்கு பெரும்பாலும் வறுமை உழன்ற வாழ்வாகத்தான் இருந்தது. தமிழ்ப் பணிகளோடு அரிசிக் கடை வியாபாரம், மண்ணெண்ணெய் கடை வியாபாரம் பல தொழில்கள் நடத்திப் பார்த்து ஒன்றுமே சரிப்பட்டு வரவில்லை.

வெள்ளையர் அரசாங்கம் கோர்ட்டில் சென்று வழக்காடும் உரிமையைப் பறித்து விட்டது. மீண்டும் வழக்காடு மன்றத்தில்

வழக்குரைஞர் சன்னத்தை உரிமையைப் புதுப்பிக்க முயற்சி செய்தார். அப்போதைய தலைமை நீதிபதி அப்துல் ரகீம் என்பவரிடம் வ.உ.சி., தண்டபாணி பிள்ளை, சங்கரன் நாயர் ஆகியோர் சேர்ந்து மனு செய்து முறையிட்டார்கள்.

அப்போதைய பெரும் வக்கீல் இராஜாஜி இது நடவாது என்று கூறி தலையிட மறுத்து விட்டார். அவரைத் தொடர்ந்து சங்கரன் நாயரும் பின்வாங்கி விட்டார். இந்த விசயத்தில் அஞ்சாநெஞ்சன் அப்துல் ரகீம் துணிச்சலோடு வ.உ.சி.யை வழக்கறிஞர் வேலைக்குப் பரிந்துரை செய்து விட்டு பிரச்சினை வரும் என்று எண்ணி அப்துல் ரகீம் முன்னெச்சரிக்கையாக வங்காளத்துக்குப் பணி மாறுதல் செய்து கொண்டு போய்விட்டார்.

இதனைத் தொடர்ந்து வாலஸ் என்பவரின் உதவியோடு மீண்டும் வ.உ.சி.க்கு வாதாட வழக்கறிஞர் சன்னத் கிடைத்தது. சாதி, மதம், இனம் பாராது நடந்த வேள்வியில் கிடைத்த சுதந்திரம் இது. வ.உ.சி.யின் வாழ்வில் நீதிபதி அப்துல் ரகீம் மிகவும் முக்கியமானவர்.

மூலம்: செ. திவான் எழுதிய விடுதலைப் போரில் தமிழக முஸ்லீம்கள்.
என். தண்டபாணி பிள்ளை எழுதிய சில சுவையான குறிப்புகள்:
வ.உ.சி.குறித்து

கட்டுரையாளர் குறிப்பு:
ரெங்கையா முருகன், 19ஆம் நூற்றாண்டு தமிழ் ஆளுமைகள், அச்சு ஊடகப் பண்பாடு, பழங்குடிகள் மற்றும் வெகுசன கலாச்சாரம் குறித்து ஆய்வு செய்து வருகிறவர். 'அனுபவங்களின் நிழல் பாதை' எனும் நூலின் ஆசிரியரான இவர், சென்னை வளர்ச்சி ஆராய்ச்சி நிறுவனத்தில் இணை நூலகராக பணிபுரிந்து வருகிறார்.

தொடர்பு: ரெங்கையா முருகன் (amthara73@gmail.com)

## 25. வாழ்வை அதன் போக்கில் கண்டவர் புதுமைப்பித்தன் !

*— இரா.குமரகுருபரன்*

கடவுளை 'கீழே இறக்கிய' பெருமை புதுமைப்பித்தனுக்கு உண்டு என்று பீடிகை போட்டார் மொழிபெயர்ப்பாளரும் ஆங்கிலப் பேராசிரியருமான செல்லப்பன்... தமது மையக் கருத்துரையில் அவர் புதுமைப்பித்தனின் பங்களிப்பைச் சுட்டிக்காட்டினார்.

புதுமைப்பித்தன் எழுதிய மொத்தச் சிறுகதைகளையும் தமிழிலிருந்து ஆங்கிலத்துக்கு சாகித்திய அகாதெமி மொழிமாற்றம் செய்துள்ளது. தமிழ், மலையாளம் அறிந்த மொழியியல் அறிஞரும் எடின்பர்க் பல்கலைக் கழகத்தின் மொழியியல் பேராசிரியருமான ஆர். இ. ஆஷர், ஆங்கில மொழிப் பேராசிரியர் முனைவர் வி.சுப்பிரமணியன் இருவரும் இணைந்து மொழிபெயர்த்த "புதுமைப்பித்தன்: தி கம்ப்ளீட் ஷார்ட் ஸ்டோரீஸ்" என்ற நூலை, ஆகஸ்ட் 23 அன்று சென்னை பல்கலைக் கழக-தொல்காப்பியர் அரங்கில் துணைவேந்தர் முனைவர் இரா. தாண்டவன் வெளியிட்டார். துணைவியார் உடல்நலக் குறைவினால் மொழிபெயர்ப்பாளர் ஆஷர் கூட்டத்துக்கு வந்து தலைமை ஏற்க இயலவில்லை. புதுமைப்பித்தனின் புதல்வி தினகரி சொக்கலிங்கம் உள்ளிட்ட பிரமுகர்கள் விழாவில் பங்கு கொண்டனர்.

நூறு ஆண்டுகளுக்குப் பின்னும் புதுமைப்பித்தனின் பொருத்தப்பாட்டை நினைவு கூர்ந்து பேச்சைத் துவக்கிய சாகித்திய அகாதெமியின் சென்னை பொறுப்பு அலுவலர் அ. சு. இளங்கோவன், "மேலை அறிஞர்களும், கிறித்தவத்தொண்டு நிறுவனங்களும் அறிமுகம் செய்த பின்னரே தமிழுலகம் பெரிய படைப்புகளை உணரத் துவங்கியது. கால்டுவெல், ஜி.யு.போப் போன்ற பலரும் தமிழ் கற்றபின் தமிழுக்குத் தொண்டு செய்தனர். ஒருமுறை சாகித்திய அகாதெமி ஏற்பாடு செய்திருந்த ஆஸ்திரேலிய அறிஞர்கள் கூட்டத்தில் ஆஷர், புதுமைப்பித்தனின்

பெருமையை விளக்கிப் பேசினார். இளம் வயதிலேயே மறைந்த புதுமைப்பித்தன் சாவைக் கண்டு அஞ்சாதவர். தனது இறப்பைக்கூட எவ்விதத்திலும் துக்கமாக அனுசரிக்க வேண்டாம் என்றே உறுதியாகச் சொன்னவர். 'ஜீனியஸ்' என்பவர்கள் நெடுங்காலத்துக்குப் பின்னரே கிடைப்பார்கள். புதுமைப்பித்தனுக்குப் பின்னர் ஜெயகாந்தன் ஜீனியஸ் ஆக விளங்கி வருகிறார்.சென்னைப் பல்கலைக்கழகம் இந்தியாவில் முதலில் தோன்றிய பல்கலைக்கழகங்களில் ஒன்று, அதில் வரலாற்றுப் புகழ் வாய்ந்த இந்த நிகழ்வு நடைபெறுகிறது" என்று அவர் சிலாகித்தார்.

பேரா. செல்லப்பன், தமது மையக் கருத்துரையில் குறிப்பிட்டது வருமாறு :

"சென்ற நூற்றாண்டு எழுத்தாளரைக் கவுரவப்படுதுவது சிறப்பு. புதுமைப்பித்தனை ஆங்கிலத்தில் நினைப்பது புதுமைதான். மொழிக்கு அங்கீகாரம் தரும் அமைப்பு சாகித்ய அகாதெமி. பாரதி கவிதைக்குப் புரட்சி செய்தார் என்றால், உரை நடை இலக்கியத்தில் புதுமையும், புரட்சியும் செய்தவர் புதுமைப்பித்தன். மு.வ. எழுதிய இலக்கிய வரலாற்றில் சிறுகதையின் தந்தை என்று ஐந்து பக்கங்கள் புதுமைப்பித்தனுக்கு ஒதுக்கினார்! வ.வே.சு. அய்யரும், பாரதியும்தாம் முதலில் உரைநடையை வசப்படுத்தினர். முழுக்க முழுக்க யதார்த்த பாணியில் சந்துபொந்துகளில் அலசி உயிருடனான பாத்திரங்களாகக் கதைகளில் உலவ விட்டது புதுமைப்பித்தன்தான். வாழ்க்கையின் பல்வேறு அம்சங்கள், சராசரி மனிதர்கள் பற்றி அவர் எழுதினார். இலக்கியம் மன ஆவேசத்தின் எழுச்சி என்பதை உணர்ந்த புதுமைப் பித்தன் நடைமுறையை எழுதுவதில் கவுரவக் குறைச்சல் பார்க்காதவர்.

வாழ்வை அதன் போக்கில் கண்டவர் புதுமைப்பித்தன்:

சாதாரண மனிதர்களின் அசாதாரணத்தைச் சாதாரணத் தமிழில் கொண்டுவந்தவர்.சிறுகதைகளில் கடவுளை மனிதர்களாகக் கீழிறக்கியவர் அவர். "கடவுளும் கந்தசாமிப்பிள்ளையும்" சிறுகதையில், கடவுள் கந்தசாமிப்பிள்ளையிடம் 'உங்களுக்கு வரம் கொடுத்துவிட்டுப் போய்விடவேண்டும்' என்று சொல்லும்போது,

'அதற்குத்தான் லாயக்கு' என்பார் கந்தசாமிப்பிள்ளை. இப்படியாக கடவுளைக் 'கீழே இறக்கிய' பெருமை புதுமைப்பித்தனுக்கு உண்டு.

"சாப விமோசனம்" கதையில் அகலிகை பாத்திரம் மூலம் ஏற்றுக் கொள்ளப்பட்ட கருத்தை அந்நியமாக்கியது அவர்தான். நனவோடை உத்தி முறையிலமைந்த அவரது படைப்புகளை வர்ஜீனியா வூல்ஃப், ஜேம்ஸ் ஜாய்ஸ் படைப்புகளுடன் ஒப்பிடலாம். வாழ்க்கை அனுபவங்களூடே அர்த்தத்தைக் காட்டுவது இது. பிரக்ஞை மற்றும் எல்லா உணர்வுகளையும் போகிற போக்கில் விட்டுவிட்டு, அதிலிருந்து கண்டுபிடிப்பது.

ராமன் சென்றபின்னர் சீதைக்கும், அகலிகைக்கும் நடைபெறும் உரையாடலில் ராமன் அக்கினிப்பிரவேசம் நிகழ்த்தச் சொல்லியதை அகலிகை கேட்கும்போது,

"...என்ன, அவன் அப்படிக்கேட்டானா?" என்று துடித்துக் கத்துவாள்...

"உலகத்துக்கு நிரூபிக்க வேண்டாமா?" என்று கூறிச் சிரிப்பாள் சீதை....

"உள்ளத்துக்குத் தெரிந்தால் போதாதா? உண்மையை உலகுக்கு நிரூபிக்க முடியுமா? நிரூபித்து விட்டால் மட்டும் அது உண்மையாகிவிடப் போகிறதா .." என்று அகலிகை கேட்பாள்.

பதில் சொல்லமுடியாது சீதைக்கு. அகலிகை மீண்டும் கல்லானாள் என்பதாகக் கதை முடியும். ஒரு பெண்ணின் பெரும் கலகக் குரல் இது.

ராமாயணம் படிப்பவர்களைப் பற்றி கவலையே படாதவர் புதுமைப்பித்தன்! "சாப விமோசனம்" கதைத் தொடக்கத்தில் இராமாயண பரிச்சயமுள்ளவர்களுக்கு இந்தக்கதை பிடிபடாமல் (பிடிக்காமல் கூட) இருக்கலாம். அதை நான் பொருட்படுத்தவில்லை என்பார். யதார்த்தம், புனைவு, சர்ரியலிசம் இணைந்த கலவை அவரது படைப்பு! "மகாமாசானம்" கதையில் பிச்சைக்காரனின் பிணம் மூலம், வாழ்வையும் மரணத்தையும் அருகருகே வைத்து ஒப்புநோக்கி ஊடாடல் நிகழ்த்துகிறார்.

"கடவுளும் கந்தசாமிப்பிள்ளையும்" கதையில் கடவுளுக்கும் மனிதனுக்கும் என்றால், "சாபவிமோசனத்தில்" குழந்தைக்கும் கிழவனுக்குமாக; பிறப்புக்கும், இறப்புக்குமாக நிகழும். 'தகரப்பீப்பாயைப் பிடித்துக் கொண்டு

செத்துக்கொண்டு' சம்பூர்ணமாகிப்போவான். எவ்வளவு பெரிய உண்மை! குழந்தைக்குச் சாவே புதுமையாகத் தோன்றும். இறப்புக் கோட்பாடு பற்றி குழந்தையின் அழகியல் கோட்பாட்டில் நின்றுகொண்டு, புதுமைப்பித்தனுக்கு இயல்பாகச் சொல்ல முடிகிறது!

ஈ மொய்க்கும் கிழவனின் மரணத்தருவாயில் மாம்பழம் வாங்கி வரும் அப்பாவிடம், "வாசனையா இருக்கே! " என்று பழவாசனை குறித்துப் பேசமுடிகிறது குழந்தைக்கு... என்ன அற்புதமான படைப்புத் திறன்! மரணத்தைத் தாண்டி வாழ்வின் மீது பிடிப்பு ஏற்படுத்தும் யதார்த்த அறிவிப்பல்லவா அது! சாவுக்குமேல் தன்னை நிலைநாட்டும் வாழ்வு பற்றி அந்தக் குறுகிய கணத்தில் உண்மை வெளிப்படுகிறது.

ஒரு துளியில் வாழ்வின் நிரந்தரம் பற்றி எழுதிய உரைநடைக் கவிஞன் புதுமைப்பித்தன்.மொழிபெயர்ப்பில் தங்குதடையில்லை. ஆஷரின் ஆங்கில மனமும், சுப்பிரமணியத்தின் தமிழ் மொழி நடையும் இணைந்து படைப்பில் வெளிப்படுகிறது.புனைவு என்பது கவிதையை விடச் சிக்கலானது. வாழ்வுடனான முரண்கள் பற்றிப் பல மொழிகளும் பேசுகின்றன. சென்னை மாநகரின் கலிடாஸ்கோப் தரிசனம் வியக்க வைக்கிறது. புதுமைப்பித்தன் பாதையில் நாமும் நடந்திருக்கிறோம்.

மொழிபெயர்ப்பில் கவிதையாக எஞ்சி நின்று விரிகிறது படைப்பு! வேட்கைகளை, மொழிபெயர்ப்பு புதுப்புது அர்த்தங்கள் மூலம் புதிதாகப் படைக்கின்றது. பிளேட்டோ சொன்னது போல, உலகமே 'போலச்செய்வதுதான்'; மொழிபெயர்ப்பு என்பது 'போலச் செய்தலின்' போலச் செய்தலே... "போலச்செய்தல் மூலம் யதார்த்தத்தை அடையமுடியும்" என்றார் தெரிதா. மொழிபெயர்ப்பின் மூலமே உண்மை உணர்தல், வளர்ச்சி சாத்தியப்படும். ஒவ்வொரு பிரதிக்கும் உள்ளே பொதிந்து கிடக்கும் உபபிரதி மூலமாக முழுமைபெறாது தொடர்கிறது படைப்பு. தேடிக்கொண்டே இருக்கும் திறனாய்வாளர்கள், படைப்பாளிகள், மொழிபெயர்ப்பாளர்கள் மூலம் இந்த அறிதல் சாத்தியமாகிறது."

மொழிபெயர்ப்பில் உள்ள நுட்பமான பிரச்சனைகளை, வட்டார வழக்குகளை எடுத்துரைத்தார் சகமொழிபெயர்ப்பாளர் வி.சுப்பிரமணியம். எழுத்தாளர் மாலன், முனைவர் பா.வளன் அரசு, அபிலாஷ், பேரா. ஆர்ம்ஸ்ட்ராங் ஆகியோர் உரையாற்றினர். சென்னைப் பல்கலை ஆங்கிலத் துறை-சாகித்திய அகாதெமி சார்பில் இக்கூட்டம் நடத்தப்பட்டது. காலச்சுவடு பதிப்பகத்துக்காக 2000-ஆவது ஆண்டில் ஆ. இரா. வெங்கடாசலபதி தொகுத்த புதுமைப்பித்தனின் 99 சிறுகதைகளும் சாகித்திய அகாதெமியின் இந்த வெளியீட்டில் இடம் பெற்றிருக்கின்றன.

குறிப்பு: ஆகஸ்ட் - 2014, "யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" நிகழ்வின் தொகுப்பு

தொடர்பு: இரா.குமரகுருபரன்
https://www.facebook.com/kumaraguruparan.ramakrishnan

## 26. தமிழ் மொழி போதுமே தா

*— திருத்தம் பொன்.சரவணன்*

இமிழ்திரைக் கடல்சூழ் உலகம் முழுவதும்
இமையெனக் காத்திடும் உமையொரு பாக
அமிழ்தெனக் களிப்பினும் அகமகிழ் வில்லை
தமிழ்மொழி போதுமே தா.

தொடர்பு: திருத்தம் பொன்.சரவணன் (vaendhan@gmail.com)

## 27. முதலாம் திருமொழி...

*— கவின்மொழிவர்மன்*

தத்தைக் குலமகள்
        மஞ்சத் துயில்கலைந்து
தையொரு மாதமும்
        மெய்யுற நீராடிக்
கற்றைக் குழலதில்
        கங்கை புனல்வடித்துக்
கொத்து மலரினைக்
        கொண்டையதில் சூடி
நித்தம் மணலினில்
        முத்தம் தெருவணிந்து
நன்னறும் பூக்களால்
        அலங்கரித்தே னனங்கதேவா
உத்தமன் பேர்பாடி
        உம்பியையும் வேண்டேனே
உய்யவு மாங்கேலோ
        வென்றே தொழுதனன்
சித்தமும் சேர்ந்திணையச்
        செங்கதிர்ச் சக்கரத்தான்
சேரும் வரமருளே
        சாறுமின்பம் நான்பெறவே!

தொடர்பு: கவிஞர். கவின்மொழிவர்மன் (kavinmozhitamil@gmail.com)

## 28. சந்திராயன் 2

*— ருத்ரா இ.பரமசிவன்*

நிலவே நிலவே ஓடிவா
நில்லாமல் ஓடிவா
மலைமேலே ஏறிவா
மல்லிகைப்பூ கொண்டுவா...

நிலவே நிலவே அங்கே நில்
நீ ஓடி வரவேண்டாம்
நான் அங்கே வந்திடுவேன்.
உன்னைச்சுற்றி நான் வருவேன்.
என்னைச்சுற்றி நீ வருவாய்.

உன்னைச்சுற்றி நான் ஓடி
நாய்ச்சோறு  விளையாட்டை
எத்தனை நாள் ஆடுவது?
எங்களைச்சுற்றி நீ ஓடும்
அன்பின் ஆட்டம் மறவோமே.
உன்னில் நீர் இருக்குமா?
உனக்கு நிலம் இருக்குமா?
அதற்கும் அங்கே பட்டா
இருக்குமா?
இல்லை
இங்கே தான் நாங்கள்
பட்டா எல்லாம் வாங்கணுமா?

ஐயோ சாமி!
நிலவும் வேண்டாம் ஒண்ணும்
வேண்டாம்
ஆளை விடு சாமி.விடு சாமி.
வெண்ணிலவே
வெண்ணிலவே
என்று
மனம் குளிரப்பாடுவோம்.
"சந்திராயன்"என்று
இன்று பெயர் சூட்டி
சரித்திரம் எழுதப்போகின்றீர்.
வெள்ளை நிலாவுக்குள்ளும்
நான்கு வர்ணம் உண்டென்று
நாளை ஒரு புராணம்
வானில் எழுதிச் சட்டமிட்டு
உலா வரத்துவங்கி விட்டால்
என் செய்வோம்? என் செய்வோம்?
ஐயகோ நாங்கள் என் செய்வோம்?
ஏழை வீட்டு நிலா முற்றம்
ரத்தம் கசியவா
விஞ்ஞானத்தில்
இத்தனை சத்தம்?

தொடர்பு: ருத்ரா இ.பரமசிவன் (ruthraasivan@gmail.com)

## 29. தோலுரித்த கலகத் திருமகன்

*— முனைவர்.தேமொழி*




ஏன் ஏன் என்ற வினாக்கள்
அறியா வயதுடன் நிற்பதல்ல
ஏன் அவர்கள் என்றும் அப்படி
வறுமையில் உழல வேண்டும்?
ஏன் இவர்கள் என்றும் இப்படி
உரிமையின்றி வாழ வேண்டும்?

எல்லாமும் கடவுளால் என்ற
ஆன்மிக விளக்கம் உதவவில்லை
செய்த பாவம், அவர்கள் விதி
என்ற விடையில் அடங்கவில்லை
சமயம் வகுத்த சாத்திரங்கள் எனில்
ஆராய முற்பட்டார் அந்த கலகக்காரர்

ஆவலுடன் உரிக்கத் துவங்கினார்
அந்த சமய வெங்காயத்தை
அவர் அதன் தோலை உரிக்க உரிக்க
கண்ணீர் வழிந்தது, பெரியாருக்கல்ல

கடவுள் பெயரில் ஸ்மிருதிகள் எழுதி
அடக்குமுறை செய்தோருக்கு

உள்ளே ஒன்றுமில்லை என்பது உறுதியானது
ஒரு சிலரின் ஓங்கிய வாழ்விற்குப்
பல பலவீனர்கள் கொடுத்த விலை என்ற
வஞ்சகர் திட்டம் வெளியானது
சூழ்ச்சிக்கார்களின் சூது புரிந்தது
வெளியிட்டார் வெள்ளை அறிக்கையை

கடவுள் இல்லை, இல்லை;
கடவுள் இல்லவே இல்லை;
கடவுளைக் கற்பித்தவன் முட்டாள்;
கடவுளைப் பரப்பியவன் அயோக்கியன்;
கடவுளை வணங்குகிறவன் காட்டுமிராண்டி;
கடவுளை மற ! மனிதனை நினை !

அடங்கிக் கிடந்த ஆண்கள் படித்ததால்
ஆதிக்க மனம் கொண்ட பிரிவினருக்குப்
போயின; போயின பதவிகள்
அடங்கிக் கிடந்த பெண்கள் படித்ததால்
ஆதிக்க மனம் கொண்ட ஆண்களுக்குப்
போயின; போயின சுகவாழ்வு

அவர் சொல்வதைப் பின்பற்றச்
சொன்னதில்லை பெரியார்
நானே சொன்னாலும் நம்பாதே
என்றுதான் சிந்திக்கத் தூண்டினார்
மெய்ப்பொருள் காணச் சொன்னார்
சூழ்ச்சியைத் தோலுரித்த கலகத் திருமகன்

ஏன்..ஏன்..மீண்டும் மீண்டும் கேள்..கேள் கண்ணே
சிந்திப்பாய் சிந்திப்பாய் சிந்திப்பாய் பெண்ணே

தொடர்பு: தேமொழி (jsthemozhi@gmail.com)

## 30. அத்திவரதர்

*— ருத்ரா இ.பரமசிவன்*

ஆகா!
மனம் குளிரக்கண்டேன்
அவன் தோற்றம்.
நின்ற வண்ணமும் கிடந்த
வண்ணமும்.
தொண்ணூறு டிகிரி கிடைக்கோடும்
தொண்ணூறு டிகிரி நெடுங்கோடும்
காட்டிய ஜியாமெட்ரியில்
கை வழியே நெய் வழியும்
தேனமுதத் தோற்றமாய் கண்டேன்.
ஆழ்வார்கள் எனும்
மனத்தினுள் ஆழ்வார்கள்.
ஆழ்ந்து அகழ்ந்து முத்தெடுத்து
திருவாய் மொழியைக் கடல்
ஆக்கினார்கள்.
அடியேன் வெறும் சிற்றெறும்பு
அத்தேன் கடல் அள்ளிப்பருகிட
இயலுமோ?
தோற்றம் என்றாலும் அழகன்.
தோற்றம் இல்லை என்றாலும் அழகன்.
கூட்டத்துள் ஊர்ந்து செல்ல
இயலவில்லை.
தனி முத்திரையோடும்செல்ல
வழியில்லை.
கண்டவர்களைக் கண்டேன்.
விண்டவர்களை வியந்தேன்.
அத்திவரதா! ஆட்கொள் அய்யா!
என்று
ஈனக்குரல் எழுப்பினேன்.
இடியொன்று முழங்கியது.
அத்திவரதன் பேசுகிறேன்.
என் தரிசனத்தில் உன் ஏக்கம் தீர்ந்தது.
உன் தரிசனத்தில்
என் ஏக்கம் எப்போது தீரும்?
அந்தப்பல்லியும்
அந்தப் பூச்சியும்
அந்தப் பூவும் புல்லும்
அந்த நோயும்
அந்த நோய் தருகின்ற
நுண்ணுயிரியும்
எல்லாம் ஒன்று தான்.

கோடி மக்களின் உயிர்
ஒரே கோட்டில் தான்
எல்லாம் ஒன்று தான்
என்று சொன்ன மனிதனின்
"சொல்லின்" தரிசனம்
கன பரிமாணமாய்
என் முன் எப்போது வந்து நிற்கும்?
என் ஏக்கம்
எப்போது தீர்ப்பாய்?
மனிதா! உரை!

தொடர்பு: ருத்ரா இ.பரமசிவன் (ruthraasivan@gmail.com)

# தமிழ் மரபு அறக்கட்டளை நிகழ்வுகள் மற்றும் வெளியீடுகள்

*— செய்திகள் தொகுப்பு*

**தமிழ் மரபு அறக்கட்டளையின் மற்ற நிகழ்வுகள்:**

(பார்க்க: http://thf-news.tamilheritage.org/)

வலைப்பக்கம்: 11-ஆகஸ்ட்-2019

டிஜிட்டல் மெட்ராஸ் - வலைப்பக்க வெளியீட்டு விழா

http://www.digital-madras.tamilheritage.org/

நூலகம் திறப்புவிழா: 21-செப்டம்பர்-2019

சங்கரலிங்கபுரம் பள்ளியில் நூலகத் திறப்புவிழா

மாணவர் மரபு மைய விதைநடு விழா: 22-செப்டம்பர்-2019

சங்கரலிங்கபுரம் பள்ளி-தமிழ் மரபு அறக்கட்டளையின் மாணவர் மரபு மையம்

கல்வெட்டுப் பயிலரங்கம்: 28-செப்டம்பர்-2019

தமிழி கல்வெட்டுப் பயிற்சி-28-29 செப்டம்பர்-2019

கருத்தரங்கம்: 4-அக்டோபர்-2019

பாளையங்கோட்டை சதகத்துல்லா அப்பா கல்லூரி தொல்லியல் கருத்தரங்கு

வரலாற்றுச் சுற்றுலா: 5-அக்டோபர்-2019

தாமிரபரணிக்கரையில் தொல்லியல் உலா, 5-6 அக்டோபர்-2019

களஆய்வு: 8-அக்டோபர்-2019

இலங்கையின் தமிழர் வரலாறும் சமூக நிலையையும்

---

**தமிழ் மரபு அறக்கட்டளையின் மின்னூல் மற்று ஓலைச்சுவடி வெளியீடுகள்:**

25-ஜூலை-2019 - ஸ்ரீ அத்திகிரி வரதர் வரலாறு

http://www.tamilheritage.org/old/text/ebook/THF_AthiVaradar-PulavarPerumal.pdf

26-ஜூலை-2019 - உதயணகுமார காவியம் (நாடக வடிவம்)

http://www.tamilheritage.org/old/text/ebook/THF_Uthayanakumara.pdf

14-ஆகஸ்ட்-2019 - ஓலைச்சுவடி- கோப்பன்ஹாகன் சேகரிப்பு ஐப்பசி மாத சாமிநாதன் டைரி-கி.பி.1742

http://tamilheritage.org//old/text/ebook/THF_aipasy-saminathan-diary1.pdf

**தமிழ் மரபு அறக்கட்டளையின் மண்ணின் குரல்: கேட்பொலி வெளியீடு:**

11-ஆகஸ்ட்-2019 - இடையன்வயல் கோபாலமடத்துச் செப்பேடு

https://voiceofthf.blogspot.com/2019/08/blog-post.html

**மண்ணின் குரல்: காணொளி வெளியீடுகள்:**

பார்க்க: தமிழ் மரபு அறக்கட்டளையின் யூடியூப் அலைவரிசை:

https://www.youtube.com/channel/UCbPUhkB63Rooe7RQ94kGWag

ஜூலை 17, 2019 – சாளுவன்குப்பம் சங்ககால முருகன் கோயில் - டாக்டர்.ராஜவேலு

https://youtu.be/Z4av8CIsO4A

ஜூலை 23, 2019 – தமிழி (தமிழ்பிராமி) பழமை குறித்து தொல்லியல் தடயங்கள் - கே. ராஜன்

https://youtu.be/_wLCBBR9__U

ஜூலை 27, 2019 – தமிழின் தொன்மை என்ன? Part 1 - டாக்டர்.ராஜவேலு

https://youtu.be/H_RIo4z7-ug

ஜூலை 28, 2019 – தமிழின் தொன்மை என்ன? - Part 2 - டாக்டர்.ராஜவேலு

https://youtu.be/gznNu5jIZQE

ஆகஸ்ட் 10, 2019 – டாக்டர்.நாகசாமியின் அண்மைய தமிழ் எதிர்ப்பு கருத்துகள் - டாக்டர்.ராஜவேலு
https://youtu.be/oFtkdoxHsdE

அக்டோபர் 4, 2019 – ஆதிச்சநல்லூர் அகழாய்வு - முனைவர் தொ.பரமசிவன் ஒரு நேர்காணல்
https://youtu.be/rle1Fog-I9Q

அக்டோபர் 6, 2019 – முதல் அச்சுக்கூடம் நிறுவப்பட்ட புன்னைக்காயல்
https://youtu.be/f2zCMgr0uuo

அக்டோபர் 15, 2019 – அனுராதபுரம் ஸ்ரீ மகா போதி பௌத்த ஆலயம்
https://youtu.be/ygODXsbFRzc

**THFi-டிஜிட்டல் மெட்ராஸ் -காணொளிகள் - வெளியீடு: 11-ஆகஸ்ட்-2019: பார்க்க யூடியூப் தொகுப்பு:**

https://www.youtube.com/playlist?list=PLdag7q0k9BNkJxFWb0ACdCkI07r5tQkIF

1 மெட்ராஸ் வரலாறு - பாதுகாக்கப்பட வேண்டிய சின்னங்கள்
https://youtu.be/LZaEmsCXkYo

2 ஸ்டேன்லி மருத்துவமனையில் போர் நினைவுச் சின்னம்
https://youtu.be/fkziVkIM9Z0

3 டாக்டர் அம்பேத்கர் சட்டக் கல்லூரி
https://youtu.be/AmN3Loic_mI

4 மெட்ராஸில் பார்சிகள் இருக்கின்றார்களா?
https://youtu.be/8RPIDmAeCC4

5 மெட்ராஸ் குட் ஷெப்பர்ட் சர்ச் வரலாறு
https://youtu.be/rGMFfI0UMms

6 மெட்ராஸ் ஆண்டர்சன் சர்ச் வரலாறு
https://youtu.be/ieH_OxNgQOw

7 நாகேஷ், மெட்ராஸ் கால்பந்தின் கடவுள்
https://youtu.be/lBYenk8pkmc

8 மெட்ராஸ் ராயபுரம் வரலாறு
https://youtu.be/iQly1yL8zCo

9 மெட்ராஸ் பற்றி கல்வெட்டுக்கள் சொல்லும் செய்தி
https://youtu.be/4aFvUzPm7vw

10 மெட்ராஸ் YMCA - வரலாறு அறிவோம்
https://youtu.be/gxrPlINLKxw

11 மெட்ராஸ் வேப்பேரி அச்சகம்
https://youtu.be/ZDLOBXBSUHQ

12 ராஜா சர் அண்ணாமலை செட்டியார் கல்விப்பணிகள்
https://youtu.be/txs3oK2Kkg8

13 மெட்ராஸ் தங்க சாலை
https://youtu.be/5Kw5HhJ6m8U

14 மெட்ராஸ் பல்கலைக்கழகம்
https://youtu.be/xJ8sYmDP2sE

15 மெட்ராஸ் கிருஸ்துவக் கல்லூரி
https://youtu.be/H90Xv4zMO_0

16 மெட்ராஸின் கருப்பர் நகரமும் வெள்ளை நகரமும்
https://youtu.be/J012QTyojd4

17 கூவம் நதி சிதைந்த வரலாறு

https://youtu.be/q0Q_UFo-0Z0

18 மெட்ராஸில் ஆர்மேனியர் வரலாறு

https://youtu.be/ClqxEskp7T0

19 மெட்ராஸுக்கு வந்த ஆர்மேனியர்கள்

https://youtu.be/vNymj8KWZ8o

20 திருவொற்றியூர் ராமலிங்க சுவாமிகள் மடாலயம்

https://youtu.be/Dabe3-0JARc

# மின்தமிழ் மேடை



"தமிழர் பண்பாட்டின் வரலாற்றுத் தேடல்கள்"

தமிழ் மரபு அறக்கட்டளை *(www.tamilheritage.org)*
வெளியிடும் காலாண்டு மின்னிதழ்
மின்தமிழ்மேடை – காட்சி: 19
அக்டோபர் – 2019

